# வேத மந்திரங்கள்



பதவுரை, பொழிப்புரை,
விளக்கவுரையுடன்

# வேத மந்திரங்கள்

மந்திரங்கள், சாந்தி மந்திரங்கள், ஸூக்தங்கள்

விளக்கியவர்
சுவாமி ஆசுதோஷானந்தர்



ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை 600 004

# பதிப்புரை

உபநிஷதங்களை நாம் அறிவோம். அவை வேதங்களின் நிறைவுப்பகுதியாக போற்றப்படுகின்றன. உலகின் தத்துவ முறைகள் அனைத்தின் உன்னத சிகரங்களைத் தொட்டுவிட்ட பகுதி இது. ஆனால் உபநிஷதங்கள் என்பவை வேதங்களின் மிகச்சிறு பகுதியே. உபநிஷதங்களைத் தவிர எத்தனையோ அற்புதமான பகுதிகள் வேதங்களில் உள்ளன. இவையும் அனைத்துப் பரிமாணங்களிலும் உபநிஷதங்களுக்கு இணையானவை— குறிப்பாக, ஸூக்தங்களைச் சொல்லாலாம். சில ஸூக்தங்களையும், அவற்றுடன் சில மந்திரங்களையும் தொகுத்து முதன்முறையாகத் தமிழில் தருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

வேதங்களை முறையாக ஓதுவது உள்ளத்திற்கு சாந்தியையும் சமாதானத்தையும் தருகின்ற ஓர் ஆன்மீக சாதனையாகும். அப்படி ஓதுவதற்கு வசதியாக உரிய குறியீடுகளும் தரப்பட்டுள்ளன.

மந்திரங்கள், சாந்தி மந்திரங்கள், ஸூக்தங்கள், பொது என்று நான்கு பகுதிகளாக அமைந்துள்ளது இந்த நூல். மொழிபெயர்ப்பு, மற்றும் தொகுப்புப் பணியைச் செய்தவர் எமது மடத்தின் துறவியாகிய சுவாமி ஆசுதோஷானந்தர். வார்த்தைக்கு வார்த்தை பொருள் காண்பதில் பேராசிரியர் திரு C. S. ராமகிருஷ்ணனும், குப்புசாமி சம்ஸ்கிருத கல்லூரி பேராசிரியை திருமதி ஜானகியும் அவருக்கு உதவினர். சம்ஸ்கிருத சிரோமணி திருமதி சாவித்திரி ராமகிருஷ்ணன் முழுநூலையும் படித்தும் ஆலோசனைகள் வழங்கியும் உதவினார்.

கையெழுத்துப் பிரதியைத் தயாரிப்பதில் திருமதி சக்தி கிருபாகரன் உதவினார். அச்சுப் பிரதியைத் திருத்துவதில் மடத்து பிரம்மச்சாரிகளும் பக்தர்களும் உதவினர்.

ராமகிருஷ்ண மடம் மற்றும் மிஷனின் பொதுச் செயலரும் பேரறிஞருமான ஸ்ரீமத் ஸ்மரணானந்த சுவாமிகள் முழுநூலைப் படித்து, வேண்டிய திருத்தங்களைச் செய்தார்; ஆலோசனைகள் வழங்கினார். இது இந்த மொழிபெயர்ப்பில் பேருதவியாக அமைந்தது.

இந்தப் பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் வேத வடிவினராகிய எம்பெருமான் திருவருள் பொழிவாராக!

இத்தகைய ஒரு தொகுப்பு நூல் தமிழில் முதன் முதலாக வெளிவருகிறது. தமிழன்பர்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வார்களாக. இந்த வேத மந்திரங்கள் அனைவர் வாழ்விலும் வளம் சேர்க்க இறைவன் அருள் புரிவாராக!

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை
*7.10.2000*, விஜயதசமி

# முன்னுரை

உலகின் பெரும் பகுதி அறியாமை இருளில் மூழ்கி ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தபோது, பாரதத் திருநாடு ஆன்ம ஒளியில் விழித்தெழுந்தது. அதன் தவப் புதல்வர்களாகிய ரிஷிகள், 'இருளைக் கடந்து, பொன்னிறத்தில் ஒளிரும் மாபெரும் இறைவனை நான் அறிந்துகொண்டேன். அவரை அறிவதால் மட்டுமே மரணத்தை வெல்ல முடியும். வேறு எந்த வழியும் இல்லை'[1], 'அழியாத அமரத்துவத்தின் குழந்தைகளே, கேளுங்கள்'[2] என்று பூமியில் வாழ்பவர்களை மட்டுமல்ல, பிற உலகங்களில் வாழ்வோரையும் அறைகூவினர். 'குறித்து வைக்கப்பட்ட சரித்திரமோ, பாரம்பரியத்தின் மங்கிய வெளிச்சமோ கூட ஊடுருவ முடியாத, காலத்தின் அந்த நீண்ட நெடுந் தொலைவில்'[3] இந்த உலகைப் புனிதமாக்கியபடி வாழ்ந்த அந்த ரிஷிகள் அனுபூதியில் கண்ட உண்மைகளின் தொகுப்பே வேதங்கள்.

உலகிலேயே மிகப்பழைய நூல் இந்தச் சிந்தனைக் கருவூலம்தான். 'இது எப்போது தோன்றியது என்பது ஒருவருக்கும் தெரியாது. இக்கால ஆராய்ச்சியாளர்கள்

---

1. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் । தமேவ விதித்வா ऽதிம்ருத்யுமேதி நான்ய: பந்தா வித்யதேऽயனாய ॥

—சுவேதாஸ்வதர உபநிஷதம், 3.8.

2. ச்ருண்வந்து விச்வே அம்ருதஸ்ய புத்ரா: ।

—சுவேதாஸ்வதர உபநிஷதம், 2.5.

3. சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம், 5.260; (11 பகுதிகள், சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்து வெளியீடு; இனி 'ஞானதீபம்' என்று குறிக்கப்படும்).

என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். இது எட்டாயிரம் அல்லது ஒன்பதாயிரம் வருடங்களுக்கு முன்பு தோன்றியதாக இருக்கலாம்... ஆனால் அன்று போலவே இன்றும் அவை புதுமை மாறாமல் இருக்கின்றன; ஏன், முன்னைவிட புதுப் பொலிவுடன் திகழ்வதாகவே கூறலாம்.'[1]

இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஒரே பரம் பொருளின் வெளிப்பாடாகக் கண்டனர் வேத ரிஷிகள். நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி (Space) என்று எல்லாமே இறைவனின் மகிமையையே வெளிப்படுத்து கின்றன. இயற்கையின் ஆற்றல்கள் ஒவ்வொன்றிலும் வெளிப்பட்டு நிற்பது தெய்வீக ஒளியே. இந்த ஆற்றல்கள் ஒவ்வொன்றையும் அவர்கள் ஒரு தேவனாக[2] உருவகித்தார்கள். ஆனால் அந்த தேவர்கள் அனைவரும் ஒரே பரம் பொருளின் பல்வேறு வெளிப்பாடுகள். 'ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்தி— இருப்பது ஒன்றே, மகான்கள் அதனைப் பலவாறாகக் கூறுகிறார்கள்' என்பதே வேத காலச் சிந்தனைகளின் அடிப்படைக் கருத்தாக இருந்தது. எனவே ரிஷிகள் அக்கினியிடம், வாயுவிடம், வருண னிடம், இந்திரனிடம் பிரார்த்தனை செய்தபோது உண்மையில் அந்த தேவனுக்கு, அந்த இயற்கை ஆற்ற லுக்குப் பின்னால் நின்ற ஒரே தெய்வத்திடம்தான் பிரார்த்தனை செய்தனர்.

இப்படி இயற்கை முழுவதிலும் ஒரே தெய்வத்தின் வெளிப்பாட்டைக் கண்ட அவர்களிடம் ஒருமை உணர்வு

---

1. ஞானதீபம், 3.219.
2. தேவன் என்ற சொல் 'ஒளி பொருந்தியவன்' என்று பொருள் படுகிறது.

ஓங்கி நின்றது. உலக வாழ்வு, ஆன்மீக வாழ்வு என்ற வேறுபாட்டு உணர்வு அவர்களிடம் இல்லை. உடம்பின் நோய் ஆகட்டும், வயலில் எலிகளின் தொல்லையை ஒழிப்பதற்கு ஆகட்டும், ஆன்மீக வாழ்வின் உன்னதங் களை எட்டுவதற்கு ஆகட்டும் அவர்கள் அந்த ஒரே தெய்வத்தையே நாடினர், பிரார்த்தனை செய்தனர். இதனால்தான் வேதங்களில் பெரும்பகுதி பிரார்த்தனை வடிவில் உள்ளது.

இந்தப் பிரார்த்தனைப் பாடல்களுள் சில, மந்திரங் களாக அமைகின்றன; சில, யாகங்கள் செய்வதற்கான வழிமுறைகளை விளக்குகின்றன; சில, உயிர் உலகம் கடவுள் என்று உண்மைகளின் விளக்கமாக அமை கின்றன; சில, தேவதேவியரைப் போற்றுகின்ற துதிப் பாடல்களாக உள்ளன; சில, இயற்கையின் அழகைப் போற்றும் கவிதைகளாக உள்ளன. இவற்றிலிருந்து சில பகுதிகளைத் தொகுத்து இந்த நூலில் நான்கு பகுதி களாகத் தந்துள்ளோம்.

*1. மந்திரங்கள்:* இன்றைய வழக்கில், 'மீண்டும் மீண்டும் சொல்லி, அதாவது ஜபித்து, அதன்மூலம் உய்வு பெறுகின்ற ஒன்றே மந்திரம்' (மனனாத் த்ராயதே இதி மந்த்ர:) என்று கொள்ளப்படுகிறது. ஆனால் வேதப் பாடல்கள் அனைத்துமே மந்திரங்கள் என்று வழங்கப்படு கின்றன. சில மந்திரங்கள் ஜபத்திற்கு உரியவையாகவும் கொள்ளப்பட்டன. அத்தகைய வேத மந்திரங்களுள் சிலவே நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் சிலவற்றை இங்கே தந்துள்ளோம்.

*2. சாந்தி மந்திரங்கள்:* சில பிரார்த்தனைப் பாடல்கள் பரம்பரைபரம்பரையாக சாந்தி மந்திரங்கள்

என்ற பெயரில் அழைக்கப்பட்டு வருகின்றன. இவற்றுள் சில மந்திரங்களை இந்தப் பகுதியில் தந்துள்ளோம்.

*3. ஸூக்தங்கள்:* ஸு+உக்தம் = ஸூக்தம். ஸூக்தம் என்றால் நன்றாகச் சொல்லப்பட்டது என்று பொருள். இவை துதிப்பாடல்கள். ஸூக்தங்களே இந்த நூலின் முக்கியப் பகுதியாக அமைகிறது.

*4. பொது:* 'பொதுவாக பூஜைகளிலும் மங்கல நிகழ்ச்சிகளிலும் ஓதப்படுகின்ற 'மந்த்ர புஷ்பம்' மற்றும் சந்தியாவந்தனத்தில் பயன்படுகின்ற மனத் தூய்மைக்கான மந்திரங்கள் ஆகியவை இந்தப் பகுதியில் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பகுதியிலும் முதலில் அந்தப் பகுதியின் முக்கியத்துவம் கூறப்படுகிறது. பிறகு சம்ஸ்கிருத மூலம், தமிழ் வடிவம், வார்த்தைக்கு வார்த்தை பொருள், திரண்ட பொருள் விளக்கம் என்ற ரீதியில் நூல் அமைக்கப்பட்டுள்ளது.

வேதங்களில் கையாளப்படுகின்ற சொற்களுக்குப் பொருள் காண்பது மிகவும் சிரமமானதொரு காரியமாகும். இந்த நூலில் இரண்டு விஷயங்களை அடிப்படையாக வைத்துள்ளோம்—

1. தத்துவச் சிக்கல்கள் எதையும் கருத்தில் கொள்ளவில்லை. உதாரணமாக, ஹிரண்ய கர்ப்பன், ஈசுவரன், பிரம்மம் போன்ற வார்த்தைகள் தத்துவரீதியாக பரம் பொருளின் வெவ்வேறு நிலைகளைக் குறிப்பிடுபவை. இருப்பினும் தமிழில் இறைவன், கடவுள் போன்ற பொதுப் பதங்களையே பயன்படுத்தியுள்ளோம்.

இறைவன் என்ற மாபெரும் சக்தியிடம் நாம் பிரார்த்திக்கிறோம் என்ற உணர்வுக்கு முதலிடம் கொடுத்து மொழி பெயர்த்துள்ளோம்.

2. அதுபோலவே காலம், இடம் போன்ற இலக்கண நியதிகளுக்கும் மொழிபெயர்ப்பில் முக்கிய இடம் அளிக்கவில்லை.

பொருள் விளக்கத்திற்கு எமது மடத்தின் மூத்தத் தவமிகு துறவியர் இருவரின் விளக்கங்கள் பின்பற்றப் பட்டுள்ளன. அவை— 1. சுவாமி விமலானந்தர் மஹா நாராயண உபநிஷதத்திற்கு எழுதிய விளக்கவுரை (சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் ஆங்கில வெளியீடு): 2. சுவாமி பஜனானந்தர் எமது ஆங்கிலப் பத்திரிகையான Prabuddha Bharata -வில் *(1979 – 1986)* எழுதிய The Integral Vision of The Vedic Seers என்ற பகுதி. ஸ்ரீஅண்ணா சுப்ரமணியத்தின் நூல்களும் இதில் பெரிதும் துணை செய்தன.

பாராயண வழிகாட்டி இந்த முன்னுரையைத் தொடரும் பக்கத்தில் தரப்பட்டுள்ளது. இருப்பினும் வேதம் ஓதுவதை அறிந்த ஒருவரின் துணையுடன் ஆரம்பத்தில் கற்றுக்கொள்வது நல்லது.



# பாராயண வழிகாட்டி

வேத மந்திரங்களின் நாதமே மனத்தை அகமுக மாக்க வல்லது. வேத மந்திரங்கள் ஒலிக்கின்ற இடங் களில் தீயசக்திகள் விலகுகின்றன; மங்கல தேவதை யாகிய மகாலட்சுமி நித்திய வாசம் செய்வாள்.

வேதங்களை ஓதுவதற்கென்று குறிப்பிட்ட மரபு முறை உள்ளது. வேத விற்பன்னர்களிடமிருந்து அதனை அறிந்து ஓதுவது நல்லது. தாமாகக் கற்றுக்கொள்ள விரும்புபவர்கள் கீழ்க்கண்ட முறையைப் பின் பற்றலாம்.

க॒, க॑, க᳚ என்று குறியீடுகள் பாராயணத்தில் கையாளப்படுகின்றன. இவை முறையே அனுதாத்தம், ஸ்வரிதம், தீர்க்க ஸ்வரிதம் எனப்படும். சாதாரண நிலை உதாத்தம் எனப்படுகிறது.

க – உதாத்தம்: சாதாரண ஸ்வரத்தில் உச்சரிக்க வேண்டும்.

க॒ – அனுதாத்தம்; சாதாரண ஸ்வரத்திலிருந்து ஒரு மாத்திரை இறக்கி உச்சரிக்க வேண்டும்.

க॑ – ஸ்வரிதம்; சாதாரண ஸ்வரத்திலிருந்து ஒரு மாத்திரை ஏற்றி உச்சரிக்க வேண்டும்.

க᳚ – தீர்க்க ஸ்வரிதம்; சாதாரண ஸ்வரத்திலிருந்து இரண்டு மாத்திரைகள் ஏற்றி உச்சரிக்க வேண்டும்.

பாரம்பரிய இசை தெரிந்தவர்கள் இதைச் சுலப மாகப் புரிந்துகொள்ளலாம். சாதாரண ஸ்வரத்தை, அதாவது உதாத்த நிலையை 'ப' என்று வைத்துக் கொண் டால் அனுதாத்தம்– சுத்த ''ம''. ஸ்வரிதம்:– சுத்த 'த' அல்லது கோமள'த'.

முறைப்படி ஓதப்படுகின்ற வேத த்வனிக்கென்று ஒரு மகிமை இருக்கிறது. ஆனால் அந்த ஏற்ற இறக்கங் களைக் கற்றுக்கொள்ள முடியாவிட்டால், அதற்காக வேதங்களையே படிக்காமல் இருக்கத் தேவையில்லை. நமக்கு சுலபமான ஒரு முறையில் ஓதலாம். மனத்தின் ஈடுபாடும் உணர்ச்சியுமே முக்கியமானது.



# பொருளடக்கம்

# १. गयत्री मंत्रः

ॐ

भूर्भुवस्सुवः ।

तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि ।

धियो यो नः प्रचोदयात् ॥ ॐ ॥

# 1. காயத்ரீ மந்திரம்

*ரிக் வேதம், 3. 62. 10*

எல்லா நிலைகளிலும் வாழ்வை வளப்படுத்துகின்ற ஆற்றல் மிக்கது காயத்ரீ மந்திரம். கோடிக்கணக்கானோரால் காலங்காலமாக ஜபிக்கப்பட்டு வருவது இந்த மந்திரம். ஆண்-பெண், சிறியவர்-பெரியவர், இன்ன நாட்டினர், இன்ன மதத்தினர் என்றில்லாமல் அனைவரும் இதனை ஜபித்து உயர்வு பெறலாம். ஒரு குறிப்பிட்ட தெய்வத்திடம் என்றில்லாமல் ஒளிக் கடவுளை தியானிப்பதாக அமைந்துள்ளதால் இது உலகப் பொது மந்திரமாகத் திகழ்கிறது.

அப்படி இந்த மந்திரத்தின் சிறப்பு என்ன?

அறிவுத் தெளிவைப் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம். 'எல்லா துன்பங்களுக்கும் காரணம் அறியாமையே என்று நமது உபநிஷதங்கள் கூறுகின்றன. சமுதாயம் ஆகட்டும், ஆன்மீகம் ஆகட்டும் அல்லது மற்றெந்தத் துறை ஆகட்டும். இது முற்றிலும் உண்மை'[1] என்கிறார் சுவாமி விவேகானந்தர். அந்த அறியாமை விலகி அறிவுத் தெளிவு ஏற்பட இந்த மந்திரம் வேண்டுகிறது.

இந்த அறிவுத் தெளிவு புற சாதனங்கள் எதன் தூண்டுதலும் இன்றி உணர்வின் ஆழங்களிலிருந்து எழுவதாகும். இது உள்ளுணர்வு (Intuition) எனப்படு கிறது. இது ஒருபோதும் பொய்ப்பதில்லை. எந்தத் துறையை எடுத்தாலும், மனிதனின் கண்டுபிடிப்புகள் அனைத்தும் இந்த உள்ளுணர்விலிருந்து எழுந்தவை. இது எல்லோரிலும் செயல்படத் தொடங்கவில்லை. விஞ்ஞானம், கலை, ஆன்மீகம் என்று எதனை எடுத்துக் கொண்டாலும் அவற்றின் உன்னத சிகரங்களுக்கான வாசலாகத் திகழ்கிறது உள்ளுணர்வு.

இந்த உள்ளுணர்வே சாஸ்திரங்களில் புத்தி, தீ:, என்றெல்லாம் கூறப்படுகிறது. இந்த உள்ளுணர்வை விழிக்கச் செய்யுமாறு செங்கதிர்த் தேவனாகிய சூரிய பகவானை வேண்டுகிறது இந்த மந்திரம். எந்த வாழ்க்கையானாலும், அதன் உன்னதங்களுக்கான திறவு கோலாக, உயர்நிலைகளின் இருப்பிடமாக இருப்பதால் இந்த மந்திரம் 'வரம் அளிக்கின்ற தெய்வீக மந்திரம் (வரதா தேவீ)'[2] ஆகவும், 'மந்திரங்களின் தாய் (சந்தஸாம் மாதா)'[2] ஆகவும் போற்றப்படுகிறது.

---

1. *ஞானதீபம், 5.207.*
2. *மஹாநாராயண உபநிஷதம், 34.1.*

ஓம்

பூர் புவஸ்ஸுவ꞉ ।

தத் ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ।

தியோ யோ ந꞉ ப்ரசோதயாத் ॥ ஓம் ॥

ஓம் – *பிரணவ மந்திரமாகவும்;* பூர் புவ꞉ ஸுவ꞉ – *பூ꞉, புவ꞉, ஸுவ꞉ என்ற வ்யாஹ்ருதிகளாகவும் இருக்கின்ற;* ய꞉ – *யார்;* ந꞉ – *நமது;* திய꞉ – *புத்தியை;* ப்ரசோதயாத் – *தூண்டுகிறாரோ;* ஸவிது꞉ – *அனைத்தையும் படைப்பவரான;* தத் – *அந்த;* தேவஸ்ய – *தெய்வத்தின்;* வரேண்யம் – *சிறந்த;* பர்க꞉ – *ஒளி வடிவை;* தீமஹி – *தியானிப்போம்.*

பிரணவ மந்திரமாகவும், பூ꞉, புவ꞉, ஸுவ꞉ என்ற வ்யாஹ்ருதிகளாகவும் இருக்கின்ற யார் நமது புத்தியைத் தூண்டுகிறாரோ, அனைத்தையும் படைப்பவரான அந்த தெய்வத்தின் சிறந்த ஒளி வடிவை தியானிப்போம்!

இந்த மந்திரம் மூன்று பகுதிகள் சேர்ந்தது.

முதலில் பிரணவ மந்திரமாகிய ஓம்.

அடுத்து வருவது பிரணவ மந்திரத்தின் விரிவாகிய வ்யாஹ்ருதிகள். இவை தெய்வீக ஆற்றல் மிக்க சொற்கள். தூல நிலையில் இவை பூமி, (பூ꞉), முன்னோர் (பித்ருக்கள்) வாழும் உலகம் (புவ꞉), தேவலோகம் (ஸுவ꞉) ஆகிய மூன்று உலகங்களைக் குறிக்கின்றன. நுண்நிலையில் நமது உணர்வின் மூன்று தளங்களை அதாவது, உடல், மனம், உயிர் என்று மூன்று

நிலைகளிலும் செயல்பட்டு வாழ்வை வளப் படுத்துகிறது.

தத்... ப்ரசோதயாத் என்ற பகுதி ஸாவித்ரீ மந்திரம் எனப்படுகிறது. பிரணவம், வ்யாஹ்ருதி, ஸாவித்ரீ மூன்றும் சேர்ந்ததே காயத்ரீ.

'காயந்தம் த்ராயதே இதி காயத்ரீ— ஜபிப்பவர் களைக்காப்பதால் இந்த மந்திரம் காயத்ரீ என்று சொல்லப் படுகிறது.

### ஜபிக்கும் முறை

காயத்ரீ மந்திரத்தை ஐந்து பகுதிகளாக, அதாவது இடையில் நான்கு முறை நிறுத்தி ஜபிக்க வேண்டும். (ஓம், பூர் புவஸ்ஸுவ:, தத் ஸவிதுர்வரேண்யம், பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: ப்ரசோதயாத்) 'காணாமல், கோணாமல், கண்டு' காயத்ரீ ஜபிக்க வேண்டும் என்பார்கள். அதாவது சூரியனைக் காணாத அதிகாலையிலும், சூரியன் நேராக தலைக்கு மேல் இருக் கின்ற நடுப்பகலிலும், சூரியன் மறைகின்ற மாலை யிலும் காயத்ரீ ஜபிப்பது நல்லது. தினமும் 108 முறை யாவது ஜபிக்க வேண்டும்.



# २. अभ्यारोह मंत्रः

ॐ असतो मा सद्गमय ।
तमसो मा ज्योतिर्गमय ।
मृत्योर्माऽमृतं गमय ॥ ॐ ॥

## 2. அப்யாரோஹ மந்திரம்

*பிருஹதாரண்யக உபநிஷதம், 1.3.28*

நாம் வாழ்வதற்கும், பயிற்சி செய்து உயர்நிலை அனுபவங்களைப் பெற்று இறைவனைச் சேர்வதற்கு மான ஒரு பயிற்சிக்கூடமே உலகம். இதனை மறந்து உலகையே நமது முதலும் முடிவுமாகக் கொண்டு வாழத் தலைப்படுகிறோம். உண்மையற்ற இந்த நிலை யிலிருந்து உண்மைநிலைக்கு நம்மை அழைத்துச் செல்லப் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

'அப்யாரோஹ' (அபி+ஆரோஹ) என்றால் உயர்தல் என்று பொருள்; அத்தாவது, ஜபிப்பவனின் நிலையை உயர்த்துகிறது இந்த மந்திரம்.

ஓம் அஸதோ மா ஸத்கமய ।

தமஸோ மா ஜ்யோதிர் கமய ।

ம்ருத்யோர்மாऽம்ருதம் கமய ॥ ஓம் ॥

அஸத: - உண்மையற்ற நிலையிலிருந்து; மா - என்னை; ஸத் - உண்மை நிலைக்கு; கமய - அழைத்துச் செல்வாயாக; தமஸ: - அறியாமை இருளிலிருந்து; மா - என்னை; ஜ்யோதி: - அறிவுப் பேரொளிக்கு; கமய - அழைத்துச் செல்வாயாக; ம்ருத்யோ: - மரணத் திலிருந்து; மா - என்னை; அம்ருதம் - மரணமில்லா பெருநிலைக்கு; கமய - அழைத்துச் செல்வாயாக.

உண்மையற்ற நிலையிலிருந்து என்னை உண்மை நிலைக்கு அழைத்துச் செல்வாயாக! அறியாமை இருளிலிருந்து என்னை அறிவுப் பேரொளிக்கு அழைத்துச் செல்வாயாக! மரணத்திலிருந்து என்னை மரணமில்லா பெருநிலைக்கு அழைத்துச் செல்வாயாக!



## ३. महामृत्युञ्जय मंत्रः

ॐ त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम् ।
उर्वारुकमिव बन्धनात् मृत्योर्मुक्षीय माऽमृतात् ॥ ॐ ॥

## 3. மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம்

*சுக்ல யஜுர்வேத சம்ஹிதை, 3.60*

'ம்ருத்யுஞ்ஜய' என்றால் 'மரணத்தை வெல்வது' என்று பொருள். மரணத்தை வெல்வதற்கான மந்திரம் என்று இந்த மந்திரம் அழைக்கப்படுகிறது.

மரணத்தை வெல்வது என்றால் உடல் அழியாமல் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்வது என்று பொருளல்ல. உடலிலிருந்து உயிர் பிரிவது மரணம், இதனை உணர்வுபூர்வமாகச் செய்து, அதாவது வாழும் போதே உடம்பைத் தனக்கு வேறான ஒன்றாக அனுபூதியில் உணர்வதுதான் மரணத்தை வெல்வது. பற்றற்று வாழ்கின்ற ஒருவனை உடம்பின் அழிவு எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. தான் உண்மையில் உடம்பு அல்ல, அதனுள் உறைகின்ற அழிவற்ற ஆன்மா என்பதை

அவன் உணர்கிறான். அவன் மரணத்தை வெல்கிறான். அத்தகைய ஒரு நிலையை வேண்டிப் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

வெளியே செல்லும்போது இந்த மந்திரத்தை ஓதுவது நம்மை விபத்துக்களிலிருந்தும் ஆபத்துக்களிலிருந்தும் காப்பாற்றும் என்று கூறப்படுகிறது.

இறந்தவர்களை உத்தேசித்து இந்த மந்திரத்தை ஜபிப்பதால் அவர்களுக்கு நற்கதி கிடைக்கும்; குறிப்பாக அகால மரணம் அடைந்தவர்களை உத்தேசித்து ஜபித்தால் அவர்களுக்கு ஆன்ம சாந்தி கிடைக்கும் என்றும் கூறப்படுகிறது.

ஓம் த்ர்யம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்ட்டி வர்த்னம் | உர்வாருகமிவ பந்த்னாத் ம்ருத்யோர் முக்ஷீய மாऽம்ருதாத் || ஓம் ||

ஸுகந்திம் – *நறுமணம் கமழ்பவரும்;* புஷ்ட்டி வர்தனம் – *உணவூட்டி வளர்ப்பவரும்;* த்ர்யம்பகம் – *முக்கண்ணருமாகிய சிவபெருமானை;* யஜாமஹே – *போற்றி வழிபடுகிறோம்;* உர்வாருகம் இவ – *வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து விடுபடுவது போல்;* ம்ருத்யோ: – *மரணத்தின்;* பந்தனாத் – *பிடியிலிருந்து;* முக்ஷீய – *விடுபடுவோமாக;* அம்ருதாத் – *ஆன்மநிலையிலிருந்து;* மா – *விலகாமல் இருப்போமாக.*

நறுமணம் கமழ்பவரும், உணவூட்டி வளர்ப்பவரும், முக்கண்ணருமாகிய சிவபெருமானைப் போற்றி வழிபடுகிறோம். வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து விடுபடுவதுபோல் மரணத்தின் பிடியிலிருந்து விடுபடுவோமாக! ஆன்ம நிலையிலிருந்து விலகாமல் இருப்போமாக!



# ४. शक्तिमंत्रः

ॐ तेजोऽसि तेजो मयि धेहि । वीर्यमसि वीर्यं मयि धेहि । बलमसि बलं मयि धेहि । ओजोऽसि ओजो मयि धेहि । मन्युरसि मन्युं मयि धेहि । सहोऽसि सहो मयि धेहि ।। ॐ ।।

## 4. சக்தி மந்திரம்

*சுக்ல யஜுர்வேதம், 19.9.*

'உடல் மற்றும் மன சம்பந்தமான எல்லா துயரங்களும் பலவீனத்தாலேயே விளைகின்றன. பலவீனமே மரணம்'[1] என்பார் சுவாமி விவேகானந்தர். வாழும் போதே அவ்வாறு மரணத்தை அடையாமலிருக்க வேண்டுமானால் சக்தி வேண்டும்— உடல் சக்தி வேண்டும், மன சக்தி வேண்டும், ஆன்ம சக்தி வேண்டும். அத்தகைய சக்தி வேண்டிப் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

ஓம் தேஜோऽஸி தேஜோ மயி தேஹி । வீர்யமஸி வீர்யம் மயி தேஹி । பல்மஸி பலம் மயி தேஹி । ஓஜோऽஸி ஓஜோ மயி தேஹி । மன்யுரஸி மன்யும் மயி தேஹி । ஸஹோऽஸி ஸஹோ மயி தேஹி ।। ஓம் ।।

---

1. ஞானதீபம், 1.213.

*தேஜ: – ஆன்ம சக்தியாக; அஸி – இருக்கிறாய்; மயி – எனக்கு; தேஜ: – ஆன்ம சக்தியை; தேஹி – தருவாய்; வீர்யம் – ஒழுக்க சக்தி; பலம் – உடல் சக்தி; ஓஜ: – தெய்வீக சக்தி; மன்யு: – தைரியம்; ஸஹ: – பொறுமை.*

இறைவா, நீ ஆன்ம சக்தியாக இருக்கிறாய், எனக்கு ஆன்ம சக்தியைத் தருவாய். நீ ஒழுக்க சக்தியாக இருக்கிறாய், எனக்கு ஒழுக்க சக்தியைத் தருவாய். நீ உடல் சக்தியாக இருக்கிறாய், எனக்கு உடல் சக்தியைத் தருவாய். நீ தெய்வீக சக்தியாக இருக்கிறாய், எனக்கு தெய்வீக சக்தியைத் தருவாய். நீ தைரியமாக இருக்கிறாய், எனக்கு தைரியத்தைத் தருவாய். நீ பொறுமையாக இருக்கிறாய், எனக்கு பொறுமையைத் தருவாய்!

தைரியத்துடன் கூடவே பொறுமையும் பிரார்த்திக்கப்படுவதை இங்கே காண்கிறோம். தைரியம் உள்ளது, வீரம் உள்ளது, சக்தி உள்ளது என்பதற்காக ஆராயாமல் எதிலும் இறங்கிவிடக் கூடாது. பொறுமையுடன் நிலைமையை ஆராய வேண்டும். பிறகு தேவையானால் மட்டுமே செயலில் இறங்க வேண்டும். பொறுமையும் ஒரு சக்தியே. பொறுமை நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது. 'இரும்பாலான தசையும். எஃகாலான நரம்புகளும், அவற்றுடன்... யாராலும் தடுக்க முடியாததான சங்கல்பமும்தான் நமக்கு இப்போது தேவை'[1] என்பார் சுவாமி விவேகானந்தர். இரும்பாலானது போன்ற தசையை உடற்பயிற்சிகளால் பெற்றுவிடலாம். எஃகு போன்ற

---

1. ஞானதீபம், 5.98.

நரம்புகளைப் பெறுவது எப்படி? பொறுமையால்தான். பொறுத்துக் கொள்வதால் அழுத்தங்களைத் தாங்கிக் கொள்வதற்கான ஆற்றல் (Stress-bearing power) அதிகரிக்கிறது. அதனால்தான் பொறுமையும் ஒரு சக்தியாக இங்கே கூறப்பட்டுள்ளது. ஆனால் 'எல்லா சாதனைகளிலும் மிகக் கடினமானது இது'[1] என்று கூறுகிறார் சுவாமி விவேகானந்தர்.



---

*1. ஞானதீபம், 3.11.*

# ५. गणपति मंत्रः

ॐ गणानां त्वा गणपतिगं हवामहे कविं कवीनामुपम-श्रवस्तमम् । ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिस्सीद सादनम् ॥ महा गणपतये नमः ॥ ॐ ॥

## 5. கணபதி மந்திரம்

*யஜுர்வேதம், 4.5.*

கணபதியை வழிபடாமல் எந்த மங்கல காரியமும் செய்யப்படுவதில்லை. மங்கல காரியங்களில் வருகின்ற விக்கினங்களை, அதாவது தடைகளை விலக்குபவர் ஆதலால் இவர் விக்கினேசுவரர் என்று போற்றப் படுகிறார். அவரது அருளை நாடி பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

ஓம் கணானாம் த்வா கணபதிக்ம் ஹவாமஹே கவிம் கவீனாமுபமச்ரவஸ்தமம் । ஜ்யேஷ்ட்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத ஆ ந: ச்ருண்வன்-னூதிபிஸ்ஸீத ஸாதனம் ॥ மஹா கணபதயே நம: ॥ ஓம்॥

கணானாம் – தேவர் கூட்டத்திற்கு; கணபதிம் – கணபதி என்று பெயர் பெற்றவரே!; த்வா – உம்மை; ஹவாமஹே – போற்றி அழைக்கிறோம்; கவீனாம் – அறிஞர்களுள்; கவி: – பேரறிஞர்; உபம ச்ரவ: தமம் – ஒப்பற்ற புகழ் படைத்தவர்; ஜ்யேஷ்ட்ட ராஜம் – முதன்மையானவர்களுள்தலைசிறந்தவர்;ப்ரஹ்மணாம் – வேதங்களுக்கு; ப்ரஹ்மணஸ்பத: – வேதநாயகர்; ந: – எங்கள்; ச்ருண்வன் – கேட்டு; ஊதிபி: ஸீத ஸாதனம் – விரைந்து காப்பதற்காக; ஆ – வந்தருள்வீராக; மஹா கணபதயே – மகா கணபதிக்கு; நம: – நமஸ்காரம்.

தேவர் கூட்டத்திற்குத் தலைவர் ஆதலால் கணபதி என்று பெயர் பெற்றவரே! உம்மைப் போற்றி அழைக்கிறோம். நீர் அறிஞர்களுள் பேரறிஞர்; ஒப்பற்ற புகழ் படைத்தவர்; முதன்மையானவர்களுள் தலைசிறந்தவர்; வேதங்களுக்கு நாயகர். எங்கள் பிரார்த்தனைகளைக் கேட்டு எங்களைக் காப்பதற்காக விரைந்து வந்தருள்வீராக! மகா கணபதியாகிய உமக்கு நமஸ்காரம்!



# ६. शिवमंत्रः

ॐ नमः शंभवे च मयोभवे च नमः शंकराय च मयस्कराय च नमः शिवाय च शिवतराय च ॥ ॐ ॥

## 6. சிவ மந்திரம்

*யஜுர் வேதம், 4.5.8.1.*

இது யஜுர் வேதத்தின் நடுப்பகுதியான ஸ்ரீருத்ரத்தில் வரும் பகுதியாகும். வேதங்களின் 'ஜீவரத்னம்' என்று போற்றப்படுகின்ற 'நம: சிவாய' என்ற திரு ஐந்தெழுத்து மந்திரம் இந்தப் பகுதியில்தான் உள்ளது. தினசரி வழிபாடுகளில் சேர்த்துக்கொள்ள வேண்டிய மந்திரம் இது.

ஓம் நம: சம்பவே ச மயோபவே ச நம: சங்கராய ச மயஸ்கராய ச நம: சிவாய ச சிவதராய ச || ஓம் ||

*சம்பவே ச – உலக இன்பமாகவும்; மயோபவே ச – மோட்ச இன்பமாகவும்; சங்கராய ச – உலக இன்பத்தைத் தருபவரும்; மயஸ்கராய ச – மோட்ச இன்பத்தைத்*

*தருபவரும்; சிவாய ச – மங்கல வடிவினரும்; சிவதராய ச – சிவமயம் ஆக்குபவரும் ; நம: – நமஸ்காரம்.*

உலக இன்பமாகவும் மோட்ச இன்பமாகவும் இருப்பவரும், உலக இன்பத்தையும் மோட்ச இன்பத்தையும் தருபவரும், மங்கல வடிவினரும், தம்மை அடைந்தவர்களை சிவமயம் ஆக்குபவரும் ஆகிய சிவபெருமானுக்கு நமஸ்காரம்!



## ७. सरस्वति मंत्र:

ॐ प्रणो॑ दे॒वी सर॑स्वती वाजे॑भिर्वा॒जिनी॑वती ।
धी॒नाम॑वि॒त्र्य॑वतु ॥ ॐ ॥

## 7. சரஸ்வதி மந்திரம்

*ரிக் வேதம், 6.5.12.*

'வாக்கின் ஆற்றலை எண்ணிப் பாருங்கள்! உயர்ந்த தத்துவங்களிலும் அதுபோலவே அன்றாட வாழ்விலும் அவை ஒரு மாபெரும் சக்தியாக விளங்குகின்றன. நாம் சிந்தித்துப் பார்க்காமல், ஆராய்ந்து பார்க்காமல் இரவும் பகலும் அந்த ஆற்றலைக் கையாண்டு கொண்டிருக்கிறோம். இந்தச் சக்தியின் இயல்பைத் தெரிந்துகொள்வதும், அதைச் சிறப்பாகப் பயன்படுத்துவதும்கூட கர்மயோகத்தின் ஒரு பகுதியாகும்'[1] என்று கூறுகிறார் சுவாமி விவேகானந்தர்.

இந்த வாக்கு சக்தியே வாக்தேவி, சரஸ்வதி என்ற பெயரில் வேதகாலத்திலிருந்தே வழிபடப்பட்டு வந்தது. நம்மில் வாக்சக்தி விழித்தெழத் தூண்டுமாறு தேவியிடம் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

---

1. ஞானதீபம், 1.120.

ஓம் ப்ரணோ தேவீ ஸரஸ்வதீ வாஜேபிர்வாஜினீவதீ ।
தீனாமவித்ர்யவது ॥ ஓம் ॥

வாஜேபி: – *வணங்குவோரை; வாஜினீவதீ – காப்பவளான; தேவீ ஸரஸ்வதீ – சரஸ்வதி தேவி; ப்ர ந: – நம்மைக் காக்கட்டும்; தீனாம் – வாக் சக்திகளை; அவித்ர்யவது – தூண்டி விழித்தெழச் செய்வாளாக.*

வணங்குவோரைக் காப்பவளான சரஸ்வதி தேவி நம்மைக் காக்கட்டும். வாக் சக்திகளைத் தூண்டி அவள் நம்மை விழித்தெழச் செய்வாளாக!



## சாந்தி மந்திரங்கள்

எந்த ஒன்றையும் செய்யும்போது அதற்குரிய மன நிலை இருக்கப் பெறுவது இன்றியமையாதது. எந்தக் காரியத்தைச் செய்கிறோமோ அதற்குரிய மனநிலையை வரவழைத்துக் கொண்டு, அதன்பிறகு அந்தச் செயலில் ஈடுபடுவது சிறப்பான பலனை அளிக்கும். நமது கோயில் களில் பல பிராகாரங்கள் அமைத்திருப்பதன் காரணம் இதுவே. ஒவ்வொரு பிராகாரத்தில் சுற்றி வரும்போதும் மற்ற எண்ணங்களை எல்லாம்விட்டு, கடைசியாக கரு வறையில் சென்று தெய்வத்தைத் தரிசிக்கும்போது, நம் மால் முழுமனத்துடன் தெய்வ சிந்தனையில் ஈடுபட முடிகிறது. அதுபோல் ரிஷிகளின் அனுபூதிக் கருவூலங் களான வேதங்களைப் படிக்கப் புகுமுன் நமது சிந்தனையை அவற்றுடன் இயைபுபடுத்த இந்த சாந்தி மந்திரங்கள் உதவுகின்றன. பொதுவாக உபநிஷதங்கள், ஸூக்தங்கள் போன்றவற்றைப் படிக்கும்போது ஆரம் பத்திலும் கடைசியிலும் இவை ஓதப்படுகின்றன.

வேத மந்திரங்கள் அனைத்தும் இறுதியில் ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: என்று நிறைவுறுவதைக் காணலாம்.

சாந்தி: என்றால் அமைதி. மூன்று விதமான துன்பங்களிலிருந்து நாம் அமைதி பெறுவதற்காக மூன்று முறை சொல்லப்படுகிறது. மூன்றுவகைத் துன்பங்கள் வருமாறு—

i. ஆத்யாத்மிகம்: நம்மால் நமக்கு வரும் துன்பம்; உடல் நோய், மனப் பிரச்சினைகள் போன்றவை.

ii. ஆதி பௌதிகம்: பிற உயிர்களால் நமக்கு வரும் துன்பம்.

iii. ஆதி தைவிகம்: இயற்கை சக்திகளால் நமக்கு வரும் துன்பம்; மழை, இடி, தீ போன்றவற்றால் வருபவை.

மூன்று முறை சொல்வதன்மூலம் இந்த மூவகைத் துன்பங்களிலிருந்து விடுபடுவதற்காகப் பிரார்த்திக்கிறோம்.



१

ॐ स॒ह ना॑ववतु । स॒ह नौ॑ भुनक्तु । स॒ह वी॒र्यं॑ करवावहै । ते॒ज॒स्वि ना॒वधी॑तमस्तु मा वि॑द्विषा॒वहै॑ ॥

ॐ शान्ति॒ः शान्ति॒ः शान्ति॑ः ॥

1

மாணவன் ஆசிரியரிடம் சென்று, கல்வியைத் தொடங்கும் காலத்தில், குறைகளும் தடைகளும் இல்லாமல் கல்வி நிறைவேற இருவரும் பிரார்த்திக்கின்ற மந்திரம் இது.

கட, சுவேதாஸ்வதர, மஹாநாராயண உபநிஷதங்களுக்கு இது சாந்தி மந்திரமாக அமைகிறது.

ஓம் ஸஹ நாவவது। ஸஹ நௌ புனக்து। ஸஹ வீர்யம் கரவாவஹை। தேஜஸ்வி நாவதீதமஸ்து மா வித்விஷாவஹை ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

ஸஹ நௌ – *எங்கள் இருவரையும்; அவது – காப்பாராக;* ஸஹ நௌ – *நம் இருவரையும்;* புனக்து – *அனுபவிக்குமாறு ஊக்குவிப்பாராக;* ஸஹ – *சேர்ந்து;* வீர்யம் – *ஈடுபாடுமிக்க ஆற்றலுடன்;* கரவாவஹை – *உழைப்போமாக;* அதீதம் – *கற்றது;* நௌ – *நமக்கு;* தேஜஸ்வி – *பயனுள்ளதாக;* அஸ்து – *விளங்கட்டும்;* மா வித்விஷாவஹை – *வெறுக்காமல் இருப்போமாக!*

ஆச்சாரியர், சீடர் ஆகிய நம் இருவரையும் இறைவன் காப்பாராக! அறிவின் ஆற்றலை நாம் இருவரும் அனுபவிக்குமாறு ஊக்குவிப்பாராக! நாம் இருவரும் ஈடுபாடுமிக்க ஆற்றலுடன் உழைப்போமாக! கற்றது நமக்குப் பயனுள்ளதாக விளங்கட்டும்! எதற்காகவும் நாம் ஒருவரையொருவர் வெறுக்காமல் இருப்போமாக!



२

ॐ शं नो॑ मि॒त्रः शं वरु॑णः । शं नो॑ भवत्वर्य॒मा । शं न॒ इन्द्रो॒ बृह॒स्पति॑ः । शं नो॒ विष्णु॑रुरुक्र॒मः । नमो॒ ब्रह्म॑णे । नम॑स्ते वायो । त्वमे॒व प्र॒त्यक्षं॒ ब्रह्मा॑सि । त्वामे॒व प्र॒त्यक्षं॒ ब्रह्म॑ वदिष्यामि । ऋ॒तं व॑दिष्यामि । स॒त्यं व॑दिष्यामि । तन्माम॑वतु । तद्व॒क्तार॑मवतु । अव॑तु माम् । अव॑तु व॒क्तार॑म् ॥

ॐ शान्ति॒ः शान्ति॒ः शान्ति॑ः ॥

2

'எங்கெங்கு காணினும் சக்தியடா' என்றார் பாரதியார். சக்தியின் ஆடலே இந்த உலகம். காண்கின்ற புற உலகை இயக்குகின்ற தூல சக்திகளாயினும் சரி, காணாத அக உலகை இயக்குகின்ற சூட்சும சக்தி களாயினும் சரி ஒவ்வொன்றையும் ஒவ்வொரு தெய்வ மாகக் கண்டனர் உபநிஷத ரிஷிகள். இந்த தெய்வங்கள் அபிமானி தேவதை எனப்பட்டனர். ஒவ்வொரு தேவதையும் பிரபஞ்சத்தில் ஒன்றையும் மனிதனில் ஒன்றையும் இயக்குவதாகக் கொள்ளப்பட்டனர்.

உதாரணமாக, சூரியனுக்கும் கண்ணுக்கும் அபிமானி தேவதை அர்யமான். பகலுக்கும் பிராணனுக்கும் அபிமானி தேவதை மித்ரன். இந்த தேவதைகளுடன், அதாவது இயற்கை சக்திகளுடன் இயைந்து வாழு மாறு மனிதன் அறிவுறுத்தப்பட்டான். அந்த தேவதை களிடம், நம்மைக் காக்குமாறு பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

தைத்திரீய உபநிஷதத்திற்கு இது சாந்தி மந்திரம்.

ஓம் சன்னோ மித்ர: சம் வருண: | சன்னோ பவத் வர்யமா | சன்ன இந்த்ரோ ப்ருஹஸ்பதி: | சன்னோ விஷ்ணுருருக்ரம: | நமோ ப்ரஹ்மணே | நமஸ்தே வாயோ | த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி | த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி | ரிதம் வதிஷ்யாமி | ஸத்யம் வதிஷ்யாமி | தன்மாமவது | தத்வக்தாரமவது | அவது மாம் | அவது வக்தாரம் ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

*மித்ர: – மித்ரன்*[1]*; ந: – நமக்கு; சம் – நன்மை செய்வாராக; வருண: – வருணன்*[2]*; சம் – நன்மை*

---

*1. பிராணனுக்கும் பகலுக்கும் அபிமானி தேவதை.*

*2. அபானனுக்கும் (பிரா்ணனின் ஓம் அம்சம்) இரவுக்கும் அபிமானி தேவதை.*

*செய்வாராக;* அர்யமா – *அர்யமான்*[1]; ந: – *நமக்கு;* சம் பவது – *நன்மை செய்வாராக;* இந்த்ர: – *இந்திரனும்*[2] ப்ருஹஸ்பதி:- *பிருகஸ்பதியும்*[3]; ந: – *நமக்கு;* சம் – *நன்மை செய்வார்களாக;* உருக்ரம: விஷ்ணு: – *எங்கும் நிறைந்தவராகிய விஷ்ணு*[4]; ந:– *நமக்கு;* சம் – *நன்மை செய்வாராக;* ப்ரஹ்மணே – *பிரம்மனை;* நம: –*வணங்கு கிறேன்;* வாயோ – *வாயு தேவனே;* நமஸ்தே – *வணங்குகிறேன்;* த்வம் ஏவ – *நீயே;* ப்ரத்யக்ஷம் – *கண்கண்ட;* ப்ரஹ்ம: – *தெய்வமாக;* அஸி – *இருக் கிறாய்;* ப்ரத்யக்ஷம் – *கண்கண்ட;* ப்ரஹ்ம – *தெய்வம் என்று;* த்வாம் ஏவ – *உன்னையே;* வதிஷ்யாமி – *போற்றுகிறேன்;* ரிதம் – *ரிதம்*[5] *என்று;* வதிஷ்யாமி – *போற்றுகிறேன்;* ஸத்யம் – *சத்தியம் என்று;* வதிஷ்யாமி – *கூறுகிறேன்;* தத் – *அந்தப் பரம்பொருள்;* மாம் –

---

1. கண்ணுக்கும் சூரியனுக்கும் அபிமானி தேவதை.
2. கைகளுக்கும் வலிமைக்கும் அபிமானி தேவதை.
3. வாக்கிற்கும் புத்திக்கும் அபிமானி தேவதை.
4. பாதங்களுக்கு அபிமானி தேவதை.
5. ரிதம், ஸத்யம் என்ற இரண்டும் உண்மை என்பதைக் குறிப்பதற்கான சொற்கள். ரிதம் என்பது வியாவகாரிக உண்மை, ஸத்யம் என்பது பாரமார்த்திக உண்மை. ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். சூரியன் கிழக்கில் உதிப்பதும் மேற்கில் மறைவதும் நாம் தினசரி காணும் உண்மை, வியாவகாரிக உண்மை. ஆனால் சூரியன் உதிப்பதோ மறைவதோ இல்லை என்பது பாரமார்த்திக உண்மை. அதுபோல் பிரபஞ்சமும் அதன் இயக்கங்களும் எல்லாமே உண்மைதான்; இது வியாவகாரிக உண்மை. அதனை இறைவன் பின்னின்று இயக்குகிறான் என்பது பாரமார்த்திக உண்மை.

என்னை; அவது - காப்பாராக; தத் - அவர்; வக்தாரம் - ஆசிரியரை; அவது - காப்பாராக; மாம் - என்னை; அவது - காப்பாராக; வக்தாரம் - ஆசிரியரை; அவது - காப்பாராக.

மித்ரன் நமக்கு நன்மை செய்வாராக. வருணன் நமக்கு நன்மை செய்வாராக, அர்யமான் நமக்கு நன்மை செய்வாராக. இந்திரனும் பிருகஸ்பதியும் நமக்கு நன்மை செய்வார்களாக. எங்கும் நிறைந்தவராகிய விஷ்ணு நமக்கு நன்மை செய்வாராக. பிரம்மனை வணங்குகிறேன். வாயு தேவனே, உன்னை வணங்குகிறேன். நீயே கண்கண்ட தெய்வமாக இருக்கிறாய். கண்கண்ட தெய்வம் என்று உன்னைப் போற்றுகிறேன்; ரிதம் என்று போற்றுகிறேன்; சத்தியம் என்று கூறுகிறேன். அந்தப் பரம்பொருள் என்னைக் காப்பாராக! அவர் ஆசிரியரைக் காப்பாராக! என்னைக் காப்பாராக! ஆசிரியரைக் காப்பாராக!



३

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः । स्थिरैरङ्गैस्तुष्टुवाग्ँसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः । स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति नस्ताक्ष्र्यो अरिष्टनेमिः । स्वस्ति नो बृहस्पतिर्दधातु ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

3

உலகியலில் மூழ்கடிப்பதற்கான விஷயங்களும், உயர் வாழ்க்கையில் தூண்டுகின்ற விஷயங்களும் இரண்டுமே மனிதனின் முன்னால் வருகின்றன; அறிவாளி இரண்டாம் வகையைத் தேர்ந்தெடுக்கிறான் என்று கட உபநிஷதம் (1.2.2) கூறுகிறது. அவ்வாறு நல்லவற்றையும் உயர்ந்தவற்றையும் தேர்ந்தெடுப்பதற்கு நமது புலன்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கும், அந்த முயற்சியில் தேவர்களின் துணையை நாடுவதற்குமான மந்திரம் இது.

முண்டக, மாண்டூக்ய, ப்ரச்ன உபநிடதங்களுக்கு இது சாந்தி மந்திரமாக அமைகிறது.

ஓம் பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: | பத்ரம் பச்யேமாக்ஷபிர் யஜத்ரா: | ஸ்திரைரங்கைஸ் துஷ்ட்டுவாக்ம்ஸஸ்தனூபி: | வ்யசேம தேவஹிதம் யதாயு: | ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்த ச்ரவா: | ஸ்வஸ்தி ந: பூஷா விச்வ வேதா: | ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்ட்டநேமி: | ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர் ததாது ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

தேவா: – ஓ தேவர்களே!; கர்ணேபி: – *காதுகளால்;* பத்ரம் – *நல்ல விஷயங்களை;* ச்ருணுயாம – *கேட்க வேண்டும்;* யஜத்ரா: – *பூஜிக்கத் தகுந்தவர்களே;* அக்ஷபி: – *கண்களால்;* பத்ரம் – *நல்ல விஷயங்களை;* பச்யேம – *காண வேண்டும்;* ஸ்திரரங்கை: – *உறுதியான அங்கங்களுடன் கூடிய;* ஸஸ்தனூபி: – *உடலுடன்;* யதாயு: – *ஆயுள் முழுவதும்;* துஷ்ட்டுவாம்ஸ – *உங்களைத் துதிக்க வேண்டும்;* தேவ ஹிதம் – *தேவர்களுக்கு நன்மை செய்த வண்ணம்;* வ்யசேம – *வாழ வேண்டும்;* வ்ருத்த ச்ரவா: – *பழம்புகழ்பெற்ற;* இந்த்ர: – *இந்திரன்;* ந: – *நமக்கு;* ஸ்வஸ்தி – *நன்மை செய்யட்டும்;*

விச்வ வேதா: – *எல்லாம் அறிகின்ற;* பூஷா – *சூரியன்;* ந: – *நமக்கு;* ஸ்வஸ்தி – *மங்கலம் செய்யட்டும்;* அரிஷ்ட்டநேமி: – *தீமையை அழிக்கின்ற;* தார்க்ஷ்ய: – *கருடன்;* ந: – *நமக்கு;* ஸ்வஸ்தி – *நன்மை செய்யட்டும்;* ப்ருஹஸ்பதி: – *பிருகஸ்பதி;* ந: – *நமக்கு;* ஸ்வஸ்தி – *நன்மை;* ததாது – *தரட்டும்!*

தேவர்களே! காதுகளால் நாங்கள் நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும். பூஜிக்கத் தகுந்தவர்களே, கண்களால் நாங்கள் நல்ல விஷயங்களைக் காண வேண்டும். உறுதியான அங்கங்களுடன் கூடிய உடலுடன் ஆயுள் முழுவதும் உங்களைத் துதிக்க வேண்டும். தேவர்களுக்கு நன்மை செய்த வண்ணம் வாழ வேண்டும்! பழம்புகழ் பெற்ற இந்திரன் நமக்கு நன்மை செய்யட்டும். எல்லாம் அறிகின்ற சூரியன் நமக்கு மங்கலம் செய்யட்டும். தீமையை அழிக்கின்ற கருடன் நமக்கு நன்மை செய்யட்டும். பிருகஸ்பதி நமக்கு நன்மை தரட்டும்!



४

ॐ यश्छन्दसामृषभो विश्वरूपः । छन्दोभ्योऽध्यमृताथ्सम्बभूव । स मेन्द्रो मेधया स्पृणोतु । अमृतस्य देवधारणो भूयासम् । शरीरं मे विचर्षणम् । जिह्वा मे मधुमत्तमा । कर्णाभ्यां भूरिविश्रुवम् । ब्रह्मणः कोशोऽसि मेधया पिहितः । श्रुतं मे गोपाय॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

4

இந்த மந்திரமும் புலன்களின் பயிற்சிக்கான மந்திரமே. ஆனால் இங்கே தேவர்களின் துணை நாடப் பெறாமல் இறைவனின் நாத வடிவாகிய ஓங்காரத்திடம் பிரார்த்தனை செய்யப்படுகிறது.

ஓம் யச்சந்தஸாம்ரிஷபோ விச்வரூப: |
சந்தோப்யோऽத்யம்ருதாத் ஸம்பபூவ | ஸ மேந்த்ரோ
மேதயா ஸ்ப்ருணோது | அம்ருதஸ்ய தேவ தாரணோ
பூயாஸம் | சரீரம் மே விசர்ஷணம் | ஜிஹ்வா மே
மதுமத்தமா | கர்ணாப்யாம் பூரி விச்ருவம் | ப்ரஹ்மண:
கோசோऽஸி மேதயா பிஹித: | ச்ருதம் மே கோபாய ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

ய: – *எந்த நாதம்;* சந்தஸாம் – *வேதங்களின்;* ரிஷப: – *மிகச் சிறந்த பகுதியோ;* விச்வரூப: – *எல்லாமாக இருக்கிறதோ;* அம்ருதாத் – *அழிவற்றதான;* சந்தோப்ய: – *வேதங்களிலிருந்து;* அதிஸம்பபூவ – *தோன்றியதோ;* ஸ இந்த்ர: – *அந்த ஓங்காரம்;* மே – *என்னை;* மேதயா – *அறிவொளியுடன்;* ஸ்ப்ருணோது – *சேர்க்கட்டும்;* தேவ – *தேவனே;* அம்ருதஸ்ய – *அழிவற்ற பரம்பொருளைப்பற்றிய அறிவை;* தாரண: – *உடையவனாக;* பூயாஸம் – *ஆவேனாக;* மே – *எனது;* சரீரம் – *உடல்;* விசர்ஷணம் – *ஆரோக்கியம் உடையதாக இருக்கட்டும்;* மே – எனது; ஜிஹ்வா – *நாக்கு;* மது மத்தமா – *மிக இனிமையானவற்றைப் பேசட்டும்;* கர்ணாப்யாம் – *காதுகளால்;* பூரி விச்ருவம் – *ஏராளமாக*

*நல்லவற்றைக் கேட்கட்டும்;* மேதயா *– அறிவால்;* பிஹித: *– மறைக்கப்பட்டுள்ளாய்;* ப்ரஹ்மண: *– இறைவனின்;* கோச: அஸி *– இருப்பிடம் நீ;* மே *– என்னால்;* ச்ருதம் *– கேட்கப்பட்டவற்றை;* கோபாய *– காப்பாய்.*

எந்த நாதம் வேதங்களின் மிகச் சிறந்த பகுதியோ, எல்லாமாக இருக்கிறதோ, அழிவற்றதான வேதங்களிலிருந்து தோன்றியதோ, அந்த ஓங்காரம் எனக்கு அறிவொளியைத் தரட்டும். தேவனே, நான் அழிவற்ற பரம்பொருளைப்பற்றிய அறிவைப் பெறுவேனாக. எனது உடல் ஆரோக்கியம் உடையதாக இருக்கட்டும். எனது நாக்கு மிகவும் இனிமையானவற்றைப் பேசட்டும். காதுகள் ஏராளமாக நல்லவற்றைக் கேட்கட்டும். ஓங்காரப் பரம்பொருளே, உலகப் பொருட்களைப்பற்றிய அறிவால் நீ மறைக்கப்பட்டுள்ளாய். இறைவனின் இருப்பிடம் நீ. கற்றவற்றை நான் மறந்துவிடாமல் காப்பாய்!



௫

ॐ तच्छं योरावृणीमहे । गातुं यज्ञाय । गातुं यज्ञपतये । दैवी स्वस्तिरस्तु नः । स्वस्तिर्मानुषेभ्यः । ऊर्ध्वं जिगातु भेषजम् । शं नो अस्तु द्विपदे । शं चतुष्पदे ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

5

வாழ்க்கையை ஒரு மாபெரும் யஜ்ஞமாக, வேள்வியாகக்[1] கண்டனர் வேத கால ரிஷிகள். அந்த யஜ்ஞம் என்றென்றும் சிறப்பாக நடைபெறுவதற்கான பிரார்த்தனை மந்திரம் இது. படைப்பிலுள்ள அனைத்தும் வேள்விப் பொருட்களே. அவை ஒவ்வொன்றின் மங்கலத்திற்காகப் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம்.

ஓம் தச்சம்யோராவ்ருணீமஹே। காதும் யஜ்ஞாய। காதும் யஜ்ஞபதயே। தைவீ ஸ்வஸ்திரஸ்து ந:। ஸ்வஸ்திர்

1. இந்த நூலில் பக்.91–92-இல் விளக்கப்படுகிறது.

மானுஷேப்ய: । ஊர்த்வம் ஜிகாது பேஷஜம் । சன்னோ அஸ்து த்விபதே । சம் சதுஷ்பதே ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

*ய: – யார்; சம் – மங்கலத்தை நல்குபவரோ; தத் – அந்த இறைவனை; ஆவ்ருணீமஹே – பிரார்த்திக் கிறோம்; யஜ்ஞாய – யஜ்ஞம் சிறப்பாக நிறைவுற; காதும் – வேண்டுகிறோம்; யஜ்ஞபதயே – யஜ்ஞம் செய்பவருக்காக; காதும் – வேண்டுகிறோம்; ந: – நமக்கு; தைவீ: – தேவதைகள்; ஸ்வஸ்தி: அஸ்து – நன்மை செய்யட்டும்; மானுஷேப்ய: – மனிதர்கள் எல்லோருக்கும்; ஸ்வஸ்தி:– நன்மை உண்டாகட்டும்; பேஷஜம் – செடி கொடிகள்; ஊர்த்வம் ஜிகாது – மேலோங்கி வளரட்டும்; ந: – நம்மிடமுள்ள; த்விபதே – இரண்டுகால் ஜீவன்களுக்கு; சம் அஸ்து – மங்கலம் உண்டாகட்டும்; சதுஷ்பதே – நான்கு கால் பிராணி களுக்கு; சம் – நன்மை உண்டாகட்டும்!*

யார் மங்கலத்தை நல்குபவரோ அந்த இறைவனைப் பிரார்த்திக்கிறோம், யஜ்ஞம் சிறப்பாக நிறைவுற வேண்டுகிறோம். யஜ்ஞம் செய்பவருக்காக வேண்டுகிறோம். நமக்கு தேவதைகள் நன்மை செய்யட்டும். மனிதர்கள் எல்லோருக்கும் நன்மை உண்டாகட்டும். செடிகொடிகள் மேலோங்கி வளரட்டும். நம்மிட முள்ள இரண்டுகால் ஜீவன்களுக்கு மங்கலம் உண்டாகட்டும், நான்கு கால் பிராணிகளுக்கு நன்மை உண்டாகட்டும்!



६

ॐ मधु वाता ऋतायते मधुक्षरन्ति सिन्धवः । माध्वीर्नस्सन्त्वोषधीः । मधु नक्तमुतोषसि मधुमत्पार्थिवग्ं रजः । मधुद्यौरस्तु नः पिता । मधुमान्नो वनस्पति-र्मधुमाग्ं अस्तु सूर्यः । माध्वीर्गावो भवन्तु नः ।

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

6

நமது முன்னோர்களின் சுற்றுச்சூழல் சிந்தனைத் திறத்தைக் காட்டுகின்ற மந்திரங்களுள் ஒன்று இது. காற்றும், நிலமும், நதியும், வானும் எல்லாம் இனிமையைப் பொழியட்டும் என்று அன்புடன் வேண்டுகிறது இந்த மந்திரம். இயற்கையை நாம் தூய்மையாக வைத்தால்தானே அவை இனிமையைப் பொழியும்! எனவே இயற்கையைத் தூய்மையாக வைக்குமாறு கூறுகிறது இந்த மந்திரம்.

ஓம் மதுவாதா ரிதாயதே மதுக்ஷரந்தி ஸிந்தவ:। மாத்வீர் நஸ்ஸந்த்வோஷதீ:। மது நக்தமுதோஷஸி

மதுமத் பார்த்திவக்ம் ரஜ: | மது த்யௌரஸ்து ந: பிதா |

மதுமான் நோ வனஸ்பதிர் மதுமாக்ம் அஸ்து ஸூர்ய: |

மாத்வீர் காவோ பவந்து ந: ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

ரிதாயதே – *சிறந்த செயலைச் செய்ய விரும்புகின்ற;* ந: – *நமக்கு;* வாதா – *காற்று;* மது – *இனிமையாக வீசட்டும்;* ஸிந்தவ: – *நதிகள்;* மது – *இனிய நீருடன்;* க்ஷரந்தி – *ஓடட்டும்;* ஓஷதீ: – *செடிகொடிகள்;* மாத்வீ: ஸந்து – *வளம் பெற்று விளங்கட்டும்;* நக்தம் உத உஷஸி – *இரவும் பகலும்;* மது – *இனிமையைத் தரட்டும்;* பார்த்திவம் ரஜ: – *பூமி;* மதுமத் – *இனிமையைத் தரட்டும்;* ந: – *நமது;* பிதா – *தந்தையான;* த்யௌ: – *வானம்;* மது: – *இனிமையைப் பொழியட்டும்;* வனஸ்பதி: – *செடிகொடிகளின் அதிபதியான சந்திரன்;* ந: – *நமக்கு;* மதுமான் – *இனிமையாக இருக்கட்டும்;* காவ: – *பசுக்கள்;* ந: – *நமக்கு;* மாத்வீ: பவந்து – *இனிமையைத் தரட்டும்.*

சிறந்த செயலைச் செய்ய விரும்புகின்ற நமக்கு காற்று இனிமையாக வீசட்டும், நதிகள் இனிய நீருடன் ஓடட்டும், செடிகொடிகள் வளம் பெற்று விளங்கட்டும், இரவும் பகலும் இனிமையைத் தரட்டும், பூமி இனிமையைத் தரட்டும், நமது தந்தையான வானம் இனிமையைப் பொழியட்டும். செடிகொடிகளின் அதிபதியான சந்திரன் இனிமையாக இருக்கட்டும், பசுக்கள் அதிக பாலைப் பொழியட்டும்!



௭

ॐ वाङ्मे मनसि प्रतिष्ठिता मनो मे वाचि प्रतिष्ठितम् । आविरावीर्म एधि । वेदस्य म आणीस्थः । श्रुतं मे मा प्रहासीः । अनेनाधीतेनाहोरात्रान् संदधामि । ऋतं वदिष्यामि । सत्यं वदिष्यामि । तन्मामवतु । तद्वक्तारमवतु । अवतु मामवतु वक्तारमवतु वक्तारम् ।

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

7

உயர் வாழ்க்கையை நாடுபவர்களுக்கு மனமும் பேச்சும் ஒன்றாக இருப்பது மிகவும் அவசியம். சாதாரண வாழ்க்கையிலும் 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்று பிரார்த்திக்கிறார் வள்ளலார். உள்ளும் புறமும் ஒன்றாக இருக்கின்ற நிலையைப் பிரார்த்திக்கின்ற மந்திரம் இது.

இது ஐதரேய உபநிஷதத்திற்கு சாந்தி மந்திரமாக அமைகிறது.

ஓம் வாங்மே மனஸி ப்ரதிஷ்ட்டிதா | மனோ மே வாசி ப்ரதிஷ்ட்டிதம் | ஆவிராவீர்ம ஏதி | வேதஸ்ய ம ஆணீஸ்த: | ச்ருதம் மே மா ப்ரஹாஸீ: | அனேனாதீதேனாஹோ ராத்ரான் ஸந்ததாமி | ரிதம் வதிஷ்யாமி | ஸத்யம் வதிஷ்யாமி | தன்மாமவது | தத்வக்தாரமவது | அவது மாமவது வக்தாரமவது வக்தாரம் |

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

மே – *எனது;* வாக் – *பேச்சு;* மனஸி – *மனத்தில்;* ப்ரதிஷ்ட்டிதா – *நிலைபெறட்டும்;* மே மன: – *எனது மனம்;* வாசி – *பேச்சில்;* ப்ரதிஷ்ட்டிதம் – *நிலை பெறட்டும்;* ஆவி: – *சுடரொளிப் பரம்பொருளே;* மே – *என்னுள்;* ஆவி: ஏதி – *ஒளிர்வாயாக;* மே – *எனக்கு;* வேதஸ்ய – *வேதங்களின் உண்மையை;* ஆணீஸ்த: – *கொண்டு வருவீர்களாக;* மே ச்ருதம் – *என்னால் கேட்கப் பட்டவை;* மா ப்ரஹாஸீ – *என்னை விட்டு விலகா திருக்கட்டும்;* அனேன அதீதேன – *கற்ற இவற்றை;* அஹ: ராத்ரான் – *பகலும் இரவும்;* ஸந்ததாமி – *சிந்திப்பேனாக;* ரிதம் வதிஷ்யாமி – *நான் வியாவகாரிக உண்மையைச்*

சொல்வேனாக; ஸத்யம் வதிஷ்யாமி – நான் பாரமார்த்திக உண்மையைச் சொல்வேனாக; தத் – அந்த இறைவன்; மாம் – என்னை; அவது – காக்கட்டும்; தத் – அந்த இறைவன்; வக்தாரம் – குருவை; அவது – காக்கட்டும்; அவது மாம் – என்னைக் காக்கட்டும்; அவது வக்தாரம் – குருவைக் காக்கட்டும்.

எனது பேச்சு மனத்தில் நிலைபெறட்டும்; மனம் பேச்சில் நிலைபெறட்டும். சுடரொளிப் பரம்பொருளே, என்னுள் ஒளிர்வாயாக. மனம், பேச்சு ஆகிய இருவரும் வேதங்களின் உண்மையை எனக்குக் கொண்டு வருவீர்களாக. என்னால் கேட்கப்பட்டவை என்னை விட்டு விலகாதிருக்கட்டும். கற்றவற்றை பகலும் இரவும் நான் சிந்திப்பேனாக. நான் வியாவகாரிக உண்மையைச் சொல்வேனாக, பாரமார்த்திக உண்மையைச் சொல்வேனாக. அந்த இறைவன் என்னைக் காக்கட்டும், குருவைக் காக்கட்டும். என்னைக் காக்கட்டும், குருவைக் காக்கட்டும்!



ॐ आप्यायन्तु ममाङ्गानि वाक् प्राणश्चक्षुः श्रोत्रमथो बलमिन्द्रियाणि च सर्वाणि । सर्वं ब्रह्मौपनिषदं माऽहं ब्रह्म निराकुर्यां मा मा ब्रह्म निराकरोदनिराकरणमस्त्वनिराकरणं मेऽस्तु । तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

8

எதையும் சாதிப்பதற்கு உறுதியான உடலும் திடமான மனமும் வேண்டும். இரண்டையும் பிரார்த்திக்கிறது இந்த மந்திரம். திருவருள், குருவருள் எல்லாம் இருந்தாலும் சொந்த மனத்தின் அருள் இல்லாவிட்டால் எதையும் சாதிக்க முடியாது. சொந்த மனம் தயாராக இல்லாவிட்டால், இறைவனிடமிருந்து வருகின்ற அருளை அந்த மனமே தடுத்துவிடும். அத்தகைய ஒரு நிலைமை வராதிருக்கட்டும் என்று இந்த மந்திரம் வேண்டுகிறது.

இந்த மந்திரம் கேன, சாந்தோக்கிய உபநிஷதங்களுக்கு சாந்தி மந்திரமாக அமைகிறது.

ஓம் ஆப்யாயந்து மமாங்கானி வாக்ப்ராணச்

சக்ஷு: ச்ரோத்ரமதோ பலமிந்த்ரியாணி ச ஸர்வாணி।

ஸர்வம் ப்ரஹ்மௌபநிஷதம் மாஹம் ப்ரஹ்ம

நிராகுர்யாம் மா மா ப்ரஹ்ம நிராகரோதனிராகரண

மஸ்து அனிராகரணம் மேऽஸ்து। ததாத்மனி நிரதே ய

உபநிஷத்ஸு தர்மாஸ்தே மயி ஸந்து தே மயி ஸந்து॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:॥

மம – *எனது;* அங்கானி – *அவயவங்களான;* வாக் – *வாக்கு;* ப்ராண: – *பிராணன்;* சக்ஷு: – *கண்கள்;* ச்ரோத்ரம் – *காதுகள்;* அத உ – *மற்றும்;* ஸர்வாணி – *எல்லா;* இந்த்ரியாணி ச – *புலன்களும்;* பலம் ஆப்யாயந்து – *மிகுந்த ஆற்றலுடன் விளங்கட்டும்;* ஔபநிஷதம் – *உபநிஷதங்கள் கூறுகின்ற;* ப்ரஹ்ம – *இறைவனே;* ஸர்வம் – *எல்லாம்;* ப்ரஹ்ம – *இறைவனை;* அஹம் – *நான்;* மா நிராகுர்யாம் – *மறுக்காதிருப்பேனாக;* ப்ரஹ்ம – *இறைவன்;* மா – *என்னை;* மா நிராகரோத் – *மறுக்காதிருப்பாராக;* அனிராகரணம் அஸ்து – *மறுப்பு இல்லாதிருக்கட்டும்;* மே – *என்னிடமிருந்து;* அனிராகரணம் அஸ்து – *மறுப்பு*

இல்லாதிருக்கட்டும்; தத் ஆத்மனி – அந்த ஆன்மாவை; நிரதே – நாடுகின்ற; மயி – எனக்கு; யே தர்மா: – எந்த தர்மங்கள்; உபநிஷத்ஸு – உபநிஷதங்களில் கூறப் பட்டுள்ளனவோ; தே – அவை; மயி – என்னில்; ஸந்து – குடிகொள்ளட்டும்.

எனது அவயவங்களான, வாக்கு, பிராணன், கண்கள், காதுகள், மற்றும் எல்லா புலன்களும் மிகுந்த ஆற்றலுடன் விளங்கட்டும். உபநிஷதங்கள் கூறுகின்ற இறைவனே எல்லாம். அந்த இறைவனை நான் மறுக்காதிருப்பேனாக. இறைவன் என்னை மறுக்காதிருப்பாராக. இறைவனிடமிருந்தும் மறுப்பு இல்லாதிருக்கட்டும், என்னிடமிருந்தும் மறுப்பு இல்லா திருக்கட்டும். உபநிஷதங்களில் கூறப்பட்டுள்ள தர்மங்கள், ஆன்மாவை நாடுகின்ற என்னில் குடிகொள்ளட்டும்!



९

ॐ पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते । पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥

ॐ शान्तिः शान்तिः शान्तिः ॥

9

இந்த உலகமும் உயிர்களும் இறைவனிலிருந்தே வந்துள்ளன. எனவே இயற்கையையும் பிற உயிர்களையும் நேசிப்பது இறைவனை நேசிப்பதே என்ற உண்மையைச் சுட்டிக்காட்டுகின்ற மந்திரம்.

ஈச, பிருஹதாரண்ய உபநிஷதங்களுக்கு இது சாந்தி மந்திரமாக அமைகிறது.

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ண முதச்யதே। பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமே வாவசிஷ்யதே ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

அத: – இறைவன்; பூர்ணம் – பூரணமானவர்; இதம் – இந்த உலகம்; பூர்ணம் – பூரணமானது; பூர்ணாத் – பூரணமான இறைவனிலிருந்தே; பூர்ணம் – பூரணமான உலகம்; உதச்யதே – தோன்றியுள்ளது; பூர்ணஸ்ய – பூரணத்திலிருந்து; பூர்ணம் – பூரணத்தை; ஆதாய – எடுத்த பின்னும்; பூர்ணம் ஏவ – பூரணமே; அவசிஷ்யதே – எஞ்சியுள்ளது.

இறைவன் பூரணமானவர். இந்த உலகம் பூரணமானது. பூரணமான இறைவனிலிருந்தே பூரணமான உலகம் தோன்றி யுள்ளது. பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்த பின்னும் பூரணமே எஞ்சியுள்ளது!



# १. मेधासूक्तम्

तैत्तिरीय आरण्यकम्, 4.10.41–44

ॐ यश्छन्दसामृषभो विश्वरूपः । छन्दोभ्योऽध्यमृताꣳसम्बभूव । स मेन्द्रो मेधया स्पृणोतु । अमृतस्य देवधारणो भूयासम् । शरीरं मे विचर्षणम् । जिह्वा मे मधुमत्तमा । कर्णाभ्यां भूरिविश्रुवम् । ब्रह्मणः कोशोऽसि मेधया पिहितः । श्रुतं मे गोपाय ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ॐ ॥ मेधादेवी जुषमाणा न आगाद्विश्वाची भद्रा सुमनस्यमाना । त्वया जुष्टा नुदमाना दुरुक्तान् बृहद्वदेम विदथे सुवीराः ॥ १ ॥

त्वया जुष्ट ऋषिर्भवति देवि त्वया ब्रह्माऽऽगतश्रीरुत त्वया । त्वया जुष्टश्चित्रं विन्दते वसु सा नो जुषस्व द्रविणेन मेधे ॥ २ ॥

मेधां म इन्द्रो ददातु मेधां देवी सरस्वती । मेधां मे अश्विनावुभावाधत्तां पुष्करस्रजौ ॥ ३ ॥

अप्सरासु च या मेधा गन्धर्वेषु च यन्मनः । दैवीं मेधा सरस्वती सा मां मेधा सुरभिर्जुषताग्ं स्वाहा ॥ ४ ॥

आ मां मेधा सुरभि-र्विश्वरूपा हिरण्यवर्णा जगती जगम्या । ऊर्जस्वती पयसा पिन्वमाना सा मां मेधा सुप्रतीका जुषन्ताम् ॥ ५ ॥

मयि मेधां मयि प्रजां मय्यग्निस्तेजो दधातु मयि मेधां मयि प्रजां मयीन्द्र इन्द्रियं दधातु मयि मेधां मयि प्रजां मयि सूर्यो भ्राजो दधातु ॥ ६ ॥

ॐ हंस हंसाय विद्महे परमहंसाय धीमहि । तन्नो हंसः प्रचोदयात् ॥

ॐ यश्छन्दसामृषभो....

# 1. மேதா ஸூக்தம்

*தைத்திரீய ஆரண்யகம், 4. 10. 41–44*

ஓம் யச்சந்தஸாம்ரிஷபோ விச்வரூப: | சந்தோப்யோऽத்யம்ருதாத் ஸம்பபூவ | ஸ மேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது | அம்ருதஸ்ய தேவ தாரணோ பூயாஸம் | சரீரம் மே விசர்ஷணம் | ஜிஹ்வா மே மதுமத்தமா | கர்ணாப்யாம் பூரி விச்ருவம் | ப்ரஹ்மண: கோசோऽஸி மேதயா பிஹித: | ச்ருதம் மே கோபாய ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

உள்ளுணர்வை வேண்டிப் பிரார்த்திக்கிறது இந்த ஸூக்தம். இந்த உள்ளுணர்வு மேதா தேவியாக உருவகிக்கப்படுகிறாள். அவளது ஒளி சூரியனின் கிரணங்கள்போல் எங்கும் பரந்துள்ளதாகக் காண்கிறது அதர்வண வேதம் (6.108.1–5).

கல்வி, விஞ்ஞானம், மதம், ஆன்மீகம் என்று எந்தத் துறையானாலும் இந்த உள்ளுணர்வு விழிக்கப் பெற்றவர்களே படைப்பாளிகளாக இருந்தார்கள். பெரிதாக எதையும் சாதிக்க நினைப்பவர்களுக்கு இந்த உள்ளுணர்வின் விழிப்பு, மேதா தேவியின் அருள் மிகவும் இன்றியமையாதது.

ஓம் || மேதா தேவீ ஜுஷமாணா ந ஆகாத் விச்வாசீ பத்ரா ஸுமனஸ்யமானா | த்வயா ஜுஷ்ட்டா நுதமானா துருக்தான் ப்ருஹத்வதேம விததே ஸுவீரா: || 1 ||

*விச்வாசீ – எங்கும் நிறைந்தவளும்; பத்ரா – மங்கலத்தைத்தருபவளும்; ஸுமனஸ்யமானா – நன்மை செய்பவளும்; ஜுஷமாணா – மகிழ்ச்சி கொண்டவளு மான; மேதா தேவீ – அறிவின் தேவியாகிய கலைமகள்; ந: – நம்மிடம்; ஆகாத் – வருவாளாக; துருக்தான் – பயனற்ற பேச்சுகளில்; நுதமானா – மகிழ்ந்திருந்த நாங்கள்; த்வயா – உனது; ஜுஷ்ட்டா – ஆசிகளால்; விததே – நல்லறிவு பெற்று; ஸுவீரா: – வீரம் நிறைந்த மக்களுடனும் சீடர்களுடனும்; ப்ருஹத் – மேலான உண்மைகளை; வதேம – பேசும் திறன் பெற்றோம்.*

1. எங்கும் நிறைந்தவளும், மங்கலத்தைத் தருபவளும், நன்மை செய்பவளும், நம்மிடம் மகிழ்ச்சி கொண்டவளும், அறிவின் தேவியும் ஆகிய கலைமகள் நம்மிடம் வருவாளாக! தேவீ, நீ வருமுன்பு பயனற்ற பேச்சுகளில் மகிழ்ந்திருந்த நாங்கள் உனது ஆசிகளால் நல்லறிவு பெற்று, வீரம் நிறைந்த மக்களுடனும் சீடர்களுடனும் மேலான உண்மைகளைப் பேசும் திறன் பெற்றோம்.

த்வயா ஜுஷ்ட்ட ரிஷிர்பவதி தேவி த்வயா ப்ரஹ்மாऽऽகத ஸ்ரீருத த்வயா | த்வயா ஜுஷ்ட்டச் சித்ரம்

விந்ததே வஸு ஸா நோ ஜுஷஸ்வ த்ரவிணேன

மேதே || 2 ||

தேவி – தேவீ; த்வயா – உன்னால்; ஜுஷ்ட்ட – அருள் பெற்றவன்; ரிஷி: – ரிஷி; பவதி – ஆகிறான்; த்வயா – உன்னால்; ப்ரஹ்ம – பிரம்ம ஞானியாகிறான்; உத – மேலும்; த்வயா – உன்னால்; ஆகத ஸ்ரீ: – செல்வம் பெறுகிறான்; த்வயா – உன்னால்; ஜுஷ்ட்ட – அருள் பெற்றவன்; சித்ரம் – சிறந்த பல்வேறு; வஸு – ஐசுவரியங்களை; விந்ததே – அடைகிறான்; ஸா மேதே – அத்தகைய கலைமகளே; ந: – எங்களுக்கு; த்ரவிணேன – செல்வங்களை; ஜுஷஸ்வ – அருள்வாய்.

2. தேவீ, உன் அருள் பெற்றவன் ரிஷி ஆகிறான்; பிரம்ம ஞானியாகிறான்; செல்வம் பெறுகிறான்; சிறந்த பல்வேறு ஐசுவரியங்களை அடைகிறான். அத்தகைய கலைமகளே, எங்களுக்குச் செல்வங்களை அருள்வாய்!

மேதாம் ம இந்த்ரோ ததாது மேதாம் தேவீ

ஸரஸ்வதீ | மேதாம் மே அச்வினாவுபாவாதத்தாம் புஷ்கர

ஸ்ரஜௌ || 3 ||

இந்திர: – இந்திரன்; மே – எனக்கு; மேதாம் – உள்ளுணர்வை; ததாது – தரட்டும்; தேவீ ஸரஸ்வதி – சரஸ்வதி தேவி; மேதாம் – புத்தியை; புஷ்கர ஸ்ரஜௌ –

தாமரை மாலைகள் அணிந்த; உபௌ அச்வினௌ – அச்வினி குமாரர்கள் இருவரும்; மே – எனக்கு; மேதாம் – புத்தியை; ஆதத்தாம் – தரட்டும்.

3. இந்திரன் எனக்கு உள்ளுணர்வைத் தரட்டும்! சரஸ்வதி தேவி எனக்கு புத்தியை அருளட்டும்! தாமரை மாலைகள் அணிந்த அச்வினி குமாரர்கள் இருவரும் எனக்கு புத்தியைத் தரட்டும்!

அப்ஸராஸு ச யா மேதா கந்தர்வேஷு ச யன்மன꞉ । தைவீம் மேதா ஸரஸ்வதீ ஸா மாம் மேதா ஸுரபிர்ஜுஷதாக்ம் ஸ்வாஹா ॥ 4 ॥

அப்ஸராஸு – அப்சரப் பெண்களிடம்; யா மேதா – எந்த உள்ளுணர்வு உள்ளதோ; யத் மன꞉ – எந்த மன ஆற்றல்; கந்தர்வேஷு ச – கந்தர்வர்களிடம் உள்ளதோ; மேதா – உள்ளுணர்வு; தைவீ ஸரஸ்வதி – தெய்வீக வேதஞானமாக வெளிப்பட்டுள்ளதோ; ஸுரபி꞉ – நறுமணம்போல் பரவுகிறதோ; ஸா மேதா – அந்த உள்ளுணர்வு; மாம் – என்னில்; ஜுஷதாம் ஸ்வாஹா – அருளை நிறைக்கட்டும்.

4. எந்த உள்ளுணர்வு அப்சரப் பெண்களிடம் உள்ளதோ, எந்த மன ஆற்றல் கந்தர்வர்களிடம் உள்ளதோ, எந்த உள்ளுணர்வு தெய்வீக வேத ஞானமாக வெளிப்பட்டுள்ளதோ, நறுமணம்போல் பரவுகிறதோ, அந்த உள்ளுணர்வு என்னில் அருளை நிறைக்கட்டும்!

ஆ மாம் மேதா ஸுரபிர்விச்வரூபா ஹிரண்ய

வர்ணா ஜகதீ ஜகம்யா | ஊர்ஜஸ்வதீ பயஸா பின்வ

மானா ஸா மாம் மேதா ஸுப்ரதீகா ஜுஷந்தாம் || 5 ||

*மேதா – உள்ளுணர்வைத் தருபவளும்; ஸுரபி: – நறுமணம்போல் எங்கும் பரவுபவளும்; விச்வரூபா – அனைத்தையும் சோதித்தறிய வல்லவளும்; ஹிரண்ய வர்ணா – பொன்னிற எழுத்துக்களை உடையவளும்; ஜகதீ – என்றென்றும் நிலைத்தவளும்; ஜகம்யா – தொடர்ந்து நாடத் தக்கவளும்; ஊர்ஜஸ்வதீ – வலிமையின் இருப்பிடமானவளும்; பயஸா – பால் முதலிய செல்வத்தால்; மாம் – என்னை; பின்வமானா – வளர்ப்பவளுமான; மேதா – மேதா தேவி; ஸுப்ரதீகா – மலர்ந்த முகத்துடன்; ஆ – வரட்டும்; மாம் – எனக்கு; ஜுஷந்தாம் – நன்மை செய்யட்டும்.*

5. உள்ளுணர்வைத் தருபவளும், நறுமணம்போல் எங்கும் பரவுபவளும், அனைத்தையும் சோதித்தறிய வல்லவளும், பொன்னிற எழுத்துக்களை உடையவளும், என்றென்றும் நிலைத்தவளும், உயர் உண்மைகளைத் தேடுபவர்கள் தொடர்ந்து நாடத் தக்கவளும், வலிமையின் இருப்பிடமானவளும், பால் முதலிய செல்வத்தால் என்னை வளர்ப்பவளுமான மேதா தேவி மலர்ந்த முகத்துடன் வந்து எனக்கு நன்மை செய்யட்டும்!

மயி மேதாம் மயி ப்ரஜாம் மய்யக்னிஸ்தேஜோ

ததாது மயி மேதாம் மயி ப்ரஜாம் மயீந்த்ர இந்த்ரியம்

ததாது மயி மேதாம் மயி ப்ரஜாம் மயி ஸூர்யோ ப்ராஜோ ததாது || 6 ||

மேதாம் – உள்ளுணர்வும்; ப்ரஜாம் – மக்கட் செல்வமும்; தேஜ: – தேஜஸும்; மயி – எனக்கு; அக்னி – அக்கினி தேவன்; ததாது – தரட்டும்; மேதாம் – உள்ளுணர்வும்; ப்ரஜாம் – மக்கட் செல்வமும்; இந்த்ரியம் – வலிமையும்; மயி – எனக்கு; இந்த்ர: – இந்திரன்; ததாது – தரட்டும்; மேதாம் – உள்ளுணர்வும்; ப்ரஜாம் – மக்கட் செல்வமும்; ப்ராஜ: – வலிமையும்; மயி – எனக்கு; ஸூர்ய: – சூரிய தேவன்; ததாது – தரட்டும்.

உள்ளுணர்வு, மக்கட் செல்வம், வேதங்களைப் படிப்பதால் வருகின்ற தேஜஸ்— இவற்றை எனக்கு அக்கினி தேவன் தரட்டும். உள்ளுணர்வு, மக்கட் செல்வம், புலனடக்கத்தால் வருகின்ற வலிமை— இவற்றை எனக்கு இந்திரன் தரட்டும். உள்ளுணர்வு, மக்கட் செல்வம், எதிரிகளின் மனத்தில் பயத்தை உண்டாக்குகின்ற வலிமை— இவற்றை எனக்கு சூரிய தேவன் தரட்டும்!

ஓம் ஹம்ஸ ஹம்ஸாய வித்மஹே பரமஹம்ஸாய தீமஹி | தன்னோ ஹம்ஸ: ப்ரசோதயாத் ||

ஓம் யச்சந்தஸாம்ரிஷபோ....

ஆன்மாவை அறிந்துகொள்வோம். அதற்காக பரம்பொருளை தியானிப்போம். அந்தப் பரம்பொருள் நம்மைத் தூண்டுவாராக!



# २. श्रद्धासूक्तम्

ऋग्वेद, 10.151

ॐ ॥ श्रद्धयाग्निः समिध्यते श्रद्धया हूयते हविः ।

श्रद्धां भगस्य मूर्धनि वचसा वेदयामसि ॥ १ ॥

प्रियं श्रद्धे ददतः प्रियं श्रद्धे दिदासतः ।

प्रियं भोजेषु यज्वस्विदं म उदितं कृधि ॥ २ ॥

यथा देवा असुरेषु श्रद्धामुग्रेषु चक्रिरे ।

एवं भोजेषु यज्वस्वस्माकमुदितं कृधि ॥ ३ ॥

श्रद्धां देवा यजमाना वायुगोपा उपासते ।

श्रद्धां हृदय्ययाकूत्या श्रद्धया विन्दते वसु ॥ ४ ॥

श्रद्धां प्रातर्हवामहे श्रद्धां मध्यंदिनं परि ।

श्रद्धां सूर्यस्य निम्रुचि श्रद्धे श्रद्धापयेह नः ॥ ५ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 2. ச்ரத்தா ஸூக்தம்

*ரிக்வேதம், 10. 151*

ச்ரத்தா என்றால் சிரத்தை. 'இறைவன் இருக்கிறார் என்பதில் மனத்தைத் தெளிவாக வைக்கின்ற நம்பிக்கையே சிரத்தை. உயர் லட்சியத்தை அடைவதற்கான எல்லா முயற்சிகளுக்கும் சிரத்தை தேவை'[1] என்று கூறுகிறார் ஸ்ரீசங்கரர். 'கடவுள் உண்டு என்னும் உறுதியான நம்பிக்கையும் அவரை அடைய வேண்டும் என்னும் பேராவலும் தான் சிரத்தை'[2] என்று கூறுகிறார் சுவாமி விவேகானந்தர். சிரத்தை என்றால் செயல்பாட்டுடன் கூடிய நம்பிக்கை என்று பொருள் கொள்ளலாம். நம்புகிறேன் என்று சொல்லிக்கொண்டு சும்மா இருப்பதல்ல; அந்த நம்பிக்கையைச் செயல்படுத்துவது, அந்த நம்பிக்கையின் லட்சியத்தை அடையப் பாடுபடுவது— இதுவே சிரத்தை. மரண தேவனாகிய எமனைச் சந்தித்து மூன்று வரங்களைப் பரிசாகப் பெற்ற நசிகேதன் என்ற சிறுவனைப்பற்றி கட உபநிஷதம் கூறுகிறது. அவனிடம் சிரத்தை வந்த பின்னரே (1.1.2) அவன் செயற்கரிய அந்தச் செயலைச் செய்ய முடிந்தது. இத்தகைய சிரத்தையே இன்று நமக்கு வேண்டியது என்பார் சுவாமி விவேகானந்தர். அத்தகைய சிரத்தையின் பெருமையைப் போற்றுவதாகவும் அது நம்மிடம் வருமாறு பிரார்த்திப்பதாகவும் அமைந்துள்ளது இந்த ஸூக்தம்.

---

1. ச்ரத்தா யத்பூர்வக: ஸர்வ புருஷார்த்த ஸாதன ப்ரயோக: சித்த ப்ரஸாத ஆஸ்திக்ய புத்தி: ।

—முண்டக உபநிஷதம் 2.1.7 விளக்கவுரையில் ஸ்ரீசங்கரர்.

2. ஞானதீபம், 3.13.

ஓம் || ச்ரத்தயாக்னி: ஸமித்யதே

ச்ரத்தயா ஹூயதே ஹவி: |

ச்ரத்தாம் பகஸ்ய மூர்தனி

வசஸா வேதயாமஸி || 1 ||

அக்னி: – *வேள்வித் தீ;* ச்ரத்தயா – *சிரத்தையால்;* ஸமித்யதே – *வளர்க்கப்படுகிறது;* ஹவி: – *ஆஹுதி;* ச்ரத்தயா – *சிரத்தையால்;* ஹூயதே – *அளிக்கப்படுகிறது;* பகஸ்ய – *இறைவனின்;* மூர்தனி – *தலையில் இருக்கின்ற;* ச்ரத்தாம் – *சிரத்தையை;* வசஸா – *பாடல்களால்;* வேதயாமஸி – *போற்றுகிறோம்.*

1. வேள்வித் தீ சிரத்தையால் வளர்க்கப்படுகிறது. ஆஹுதி சிரத்தையால் அளிக்கப்படுகிறது. இறைவனின் தலையில் இருக்கின்ற சிரத்தையைப் பாடல்களால் போற்றுகிறோம்.

ப்ரியம் ச்ரத்தே தத:

ப்ரியம் ச்ரத்தே திதாஸத: |

ப்ரியம் போஜேஷு யஜ்வஸ்விதம்

ம உதிதம் க்ருதி || 2 ||

ச்ரத்தே – *ஓ சிரத்தையே;* தத: – *கொடுப்பவரின்;* ப்ரியம் – *விருப்பத்தை நிறைவேற்று;* திதாஸத: –

*கொடுக்க விரும்புபவரின்; ப்ரியம் – விருப்பத்தை நிறைவேற்று; யஜ்வஸு – வேள்வி செய்பவர்களின்; இதம் போஜேஷு – விருப்பங்களை; மே உதிதம் – நான் சொன்னதுபோல்; க்ருதி – செய்து; ப்ரியம் – நிறைவேற்றுவாய்.*

2. ஓ சிரத்தையே, கொடுப்பவரின் விருப்பத்தை நிறை வேற்று. கொடுக்க விரும்புபவரின் விருப்பத்தை நிறைவேற்று. வேள்வி செய்பவர்களின் விருப்பங்களை, நான் சொன்னதுபோல் செய்து நிறைவேற்றுவாய்!

**யதா தேவா அஸுரேஷு ச்ரத்தாமுக்ரேஷு சக்ரிரே ।**

**ஏவம் போஜேஷு யஜ்வஸ்வஸ்மாகமுதிதம் க்ருதி ॥ 3 ॥**

*உக்ரேஷு – பயங்கரமான; அஸுரேஷு – அசுரர் களுடனான; சக்ரிரே – போரில்; தேவா: – தேவர்கள்; யதா – எப்படி; ச்ரத்தாம் – சிரத்தையைக் கொண்டிருந் தார்களோ; ஏவம் – அதுபோல்; யஜ்வஸு – வேள்வி செய்பவர்களின்; போஜேஷு – ஆசைகளை; அஸ்மாகம் – எங்களிடம்; உதிதம் – தோன்றுகின்ற; க்ருதி – நிறைவேற்றுவாய்.*

3. பயங்கரமான அசுரர்களுடன் நடந்த போரில் தேவர்கள் எப்படி சிரத்தையைக் கைக்கொண்டு போரிட்டார்களோ அதுபோல், வேள்வி செய்பவர்களின் ஆசைகளை எங்களிடம் தோன்றுகின்ற எண்ணங்கள்போல் நிறைவேற்றுவாய்!

ச்ரத்தாம் தேவா யஜமானா

வாயுகோபா உபாஸதே ।

ச்ரத்தாம் ஹ்ருதய்யயாகூத்யா

ச்ரத்தயா விந்ததே வஸு ॥ 4 ॥

தேவா: – தேவர்கள்; யஜமானா: – மனிதர்கள்; வாயுகோபா: – வாயுகோபர்கள்; ச்ரத்தாம் – சிரத்தையை; உபாஸதே – வழிபடுகிறார்கள்; ஹ்ருதய்யயா – இதயத்தின்; ஆகூத்யா – தாகத்தின் வாயிலாகவே; ச்ரத்தாம் – சிரத்தை; ச்ரத்தயா – சிரத்தையால்; வஸு – செல்வம்; விந்ததே – பெறப்படுகிறது.

4. தேவர்கள், மனிதர்கள், வாயுகோபர்கள்[1] எல்லாம் சிரத்தையை வழிபடுகிறார்கள். இதய தாகத்தின் வாயிலாகவே சிரத்தை அடையப்படுகிறது. சிரத்தையால் செல்வம் பெறப்படுகிறது.

ச்ரத்தாம் ப்ராதர் ஹவாமஹே

ச்ரத்தாம் மத்யந்தினம் பரி ।

ச்ரத்தாம் ஸூர்யஸ்ய நிம்ருசி

ச்ரத்தே ச்ரத்தாபயேஹ ந: ॥ 5 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

1. வாயு கோபர் என்றால் வாயுவால் காப்பாற்றப்படுபவர்கள். இது யாரைக் குறிக்கிறது என்பது தெரியவில்லை.

ச்ரத்தாம் – சிரத்தையை; ப்ராத: – காலையில்; ஹவாமஹே – வழிபடுவோம்; பரி – மேலும்; ச்ரத்தாம் – சிரத்தையை; மத்யந்தினம் – நண்பகலில்; ஸூர்யஸ்ய – சூரியன்; நிம்னுசி – கீழே இறங்கி மறையும்போது; ச்ரத்தாம் – சிரத்தையை; ச்ரத்தே – சிரத்தையே; இஹ – இங்கே; ந: – எங்களுக்கு; ச்ரத்தா – சிரத்தையை; ஆபய – தருவாய்.

5. சிரத்தையைக் காலையில் வழிபடுவோம்; நண்பகலில் வழிபடுவோம்; சூரியன் கீழே இறங்கி மறையும்போது வழிபடுவோம். சிரத்தையே, எங்களுக்கு சிரத்தையைத் தருவாய்!



# ३. संकल्पसूक्तम्

शुक्लयजुर्वेद, वाजसनेयी संहिता, 34.1–6

ॐ ॥ यज्जाग्रतो दूरमुदैति दैवं

तदु सुप्तस्य तथैवेति ।

दूरंगमं ज्योतिषां ज्योतिरेकं

तन्मे मनः शिवसंकल्पमस्तु ॥ १ ॥

येन कर्माण्यपसो मनीषिणो

यज्ञे कृण्वन्ति विदथेषु धीराः ।

यदपूर्वं यक्षमन्तः प्रजानां

तन्मे मनः शिवसंकल्पमस्तु ॥ २ ॥

यत् प्रज्ञानमुत चेतो धृतिश्च

यज्ज्योतिरन्तरमृतं प्रजासु ।

यस्मान्न ऋते किञ्च न कर्म क्रियते

तन्मे मनः शिवसंकल्पमस्तु ॥ ३ ॥

येनेदं भूतं भुवनं
भविष्यत् परिगृहीतममृतेन सर्वम् ।
येन यज्ञस्तायते सप्तहोता
तन्मे मनः शिवसंकल्पमस्तु ॥ ४ ॥

यस्मिन् ऋचः साम यजूंषि
यस्मिन् प्रतिष्ठिता रथनाभाविवाराः ।
यस्मिंश्चित्तं सर्वमोतं प्रजानां
तन्मे मनः शिवसंकल्पमस्तु ॥ ५ ॥

सुषारथिरश्वानिव यन्मनुष्यान्
नेनीयतेऽभीशुभिर्वाजिन इव ।
हृत्प्रतिष्ठं यदजिरं जविष्ठं
तन्मे मनः शिवसंकल्पमस्तु ॥ ६ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

# 3. சங்கல்ப ஸூக்தம்

*சுக்லயஜுர் வேதம், வாஜஸனேயி ஸம்ஹிதை, 34.1–6*

அன்றாட வாழ்க்கையில் நாம் செய்கின்ற தவறுகளும் சந்திக்கின்ற தோல்விகளும் ஏராளம். இதற்குப் பொதுவாக மூன்று காரணங்களைச் சொல்லலாம்— 1. தன்னறிவு (self-awareness) இன்றி ஒரு செயலைச் செய்வது; 2. ஒரு லட்சியத்திற்காக அல்லாமல் ஏனோதானோ என்று செய்வது; 3. திட சங்கல்பம் (will) இல்லாமல் வேலை செய்வது.

இந்த மூன்றிலும் முக்கியமானது திட சங்கல்பம். இது மற்ற இரண்டிற்கும் அடிப்படை. இந்தத் திட சங்கல்பத்தை நம்மில் உருவாக்குவதே இந்த ஸூக்தத்தின் நோக்கம்.

சமய சம்பந்தமான பல்வேறு சடங்குகளையும் தொடங்குமுன் இந்த ஸூக்தம் சொல்லப்படுகிறது. வீடு, அலுவலகம், தொழிற்சாலை, ஆஸ்பத்திரி என்று எங்கானாலும், எந்த நற்பணியும் தொடங்குமுன் இந்த ஸூக்தத்தை ஓதலாம். நமது செயல்திறன் வளர இது வழிவகுக்கும். தூங்குமுன்னும் தூங்கி எழுந்ததும்கூட இதனை ஓதும் வழக்கம் உள்ளது.

இறைவனிடம் ஒரு பிரார்த்தனையாகவோ, தனக்குத்தானே சுய தூண்டுதலாகவோ (Auto-suggestion) இந்த ஸூக்தத்தை ஓதலாம்.

ஓம் || யஜ்ஜாக்ரதோ தூரமுதைதி தைவம்

தது ஸுப்தஸ்ய ததைவேதி |

தூரங்கமம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிரேகம்

தன்மே மன: சிவஸங்கல்பமஸ்து || 1 ||

*யத் தைவம் – ஒளிப்பொருளான எந்த ஆன்மா; ஜாக்ரத: – விழிப்பு நிலையில்; தூரம் – வெளியில்; உதைதி – செல்கிறதோ; தத் உ – அதுவே; ஸுப்தஸ்ய – தூக்கத்தில்; ததா – அப்படியே; ஏதி – செல்கிறது; தூரம் கமம் – தொலைதூரங்களை எட்டுவதும்; ஜ்யோதிஷாம் – ஒளிக்கெல்லாம்; ஜ்யோதி: – ஒளியாக இருப்பதும்; ஏகம் – ஒன்றேயானதுமான; தத் – அந்த ஆன்மா; மே – எனது; மன: – மனம்; சிவ சங்கல்பம் – நல்ல சங்கல்பத்தை; அஸ்து – செய்யுமாறு தூண்டட்டும்.*

1. ஒளிப்பொருளான எந்த ஆன்மா விழிப்பு நிலையில் வெளியில் செல்கிறதோ, அதுவே தூக்கத்தில் அப்படியே அகமுகமாகச் செல்கிறது. தொலைதூரங்களை எட்டுவதும், ஒளிக்கெல்லாம் ஒளியாக இருப்பதும், ஒன்றேயானதுமான அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும்!

யேன கர்மாண்யபஸோ மனீஷிணோ

யஜ்ஞே க்ருண்வந்தி விததேஷு தீரா: |

யத்பூர்வம் யக்ஷமந்த: ப்ரஜானாம்

தன்மே மன: சிவ ஸங்கல்பமஸ்து || 2 ||

மனீஷிண: – *அறிஞர்கள்;* யஜ்ஞே – *வேள்விகளில்;* அபஸ: – *அபஸ் போன்ற;* கர்மாணி – *கர்மங்களை;* யேன – *எதனால்;* க்ருண்வந்தி – *செய்கிறார்களோ;* தீரா: – *அறிவாளிகள்;* விததேஷு – *பிரார்த்தனைகளில்;* யத் – *எது;* அபூர்வம் – *முதன்மையானதோ;* யக்ஷம் – *போற்றத்தக்கதோ;* ப்ரஜானாம் – *உயிர்களின்;* அந்த: – *உள்ளே எது உறைகிறதோ;* தத்...அஸ்து – *அந்த ஆன்மா.... தூண்டட்டும்.*

2. அறிஞர்கள் வேள்விகளில் அபஸ் போன்ற கர்மங்களை எதனால் செய்கிறார்களோ, அறிவாளிகளின் பிரார்த்தனைகளில் எது முதன்மையானதோ, எது போற்றத்தக்கதோ, எது உயிர்களின் உள்ளே உறைகிறதோ அந்த ஆன்மா எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும்!

யத் ப்ரஜ்ஞானமுத சேதோ த்ருதிச்ச

யஜ்ஜ்யோதிரந்தரம்ருதம் ப்ரஜாஸு |

யஸ்மான்ன ரிதே கிஞ்ச ந கர்ம க்ரியதே

தன்மே மன: சிவஸங்கல்பமஸ்து || 3 ||

*யத் – எந்த ஆன்மா; ப்ரஜ்ஞானம் – தன்னறிவு; சேத: – ஞாபக சக்தி; உத – மற்றும்; த்ருதி: ச – மன உறுதி; யத் – எந்த ஆன்மா; ப்ரஜாஸு – உயிர்களின்; அந்த: – உள்ளே; அம்ருதம் – அழிவற்ற; ஜ்யோதி: – ஒளியாக உள்ளதோ; யஸ்மாத் ந ரிதே – எது இல்லாமல்; கிஞ்ச கர்ம – எந்த வேலையும்; ந க்ரியதே – செய்ய முடியாதோ; தத்.... அஸ்து – அந்த ஆன்மா.... தூண்டட்டும்.*

3. எந்த ஆன்மா தன்னறிவு, ஞாபக சக்தி, மன உறுதி ஆகிய வற்றின் பிறப்பிடமோ, எந்த ஆன்மா உயிர்களில் அழிவற்ற ஒளியாக உள்ளதோ, எது இல்லாமல் எந்த வேலையும் செய்ய முடியாதோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல் பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும்!

யேனேதம் பூதம் புவனம்
பவிஷ்யத் பரிக்ருஹீதமம்ருதேன ஸர்வம் ।
யேன யஜ்ஞஸ்தாயதே ஸப்தஹோதா
தன்மே மன: சிவஸங்கல்பமஸ்து ॥ 4 ॥

*இதம் – இந்த; பூதம் – கழிந்தது; புவனம் – இருப்பது; பவிஷ்யத் – வரப்போவது; ஸர்வம் – எல்லாம்; யேன அம்ருதேன – எந்த அழிவற்ற ஆன்மாவால்; பரிக்ரு ஹீதம் – அறியப்படுகின்றனவோ; ஸப்த ஹோதா – வேள்வி செய்கின்ற எழுவரும்; யேன – எதனால்;*

யஜ்ஞ: – *வேள்விபற்றி;* தாயதே – *விரித்துரைக் கிறார்களோ;* தத்.... அஸ்து – *அந்த ஆன்மா..... தூண்டட்டும்.*

4. கழிந்தது, இருப்பது, வரப்போவது எல்லாம் எந்த அழிவற்ற ஆன்மாவால் அறியப்படுகின்றனவோ, வேள்வி செய்கின்ற எழுவரும் எதனால் வேள்விபற்றி விரித்துரைக் கிறார்களோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும்!

யஸ்மின் ரிச: ஸாம யஜூம்ஷி
யஸ்மின் ப்ரதிஷ்ட்டிதா ரதநாபாவிவாரா: ।
யஸ்மின்ச்சித்தம் ஸர்வமோதம் ப்ரஜானாம்
தன்மே மன: சிவஸங்கல்பமஸ்து ॥ 5 ॥

அரா: – *ஆரங்கள்;* ரத நாபௌ – *தேர்ச் சக்கரத்தின் அச்சில்;* இவ – *போல்;* ரிச: ஸாம யஜூம்ஷி – *ரிக், சாம, யஜுர் வேதங்கள்;* யஸ்மின் – *எதில்;* ப்ரதிஷ்ட்டிதா: – *நிலைபெற்றுள்ளனவோ;* ப்ரஜானாம் – *மக்களின்;* சித்தம் ஸர்வம் – *மனம் எல்லாம்;* யஸ்மின் – *எதில்;* ஓதம் – *ஊடும்பாவும்;* தத்... அஸ்து – *அந்த ஆன்மா..... தூண்டட்டும்.*

5. ஆரங்கள் தேர்ச் சக்கரத்தின் அச்சில் நிலைபெற்றிருப்பது போல் ரிக் சாம யஜுர் வேதங்கள் எதில் நிலைபெற்றுள்ளனவோ, மக்களின் மனம் எல்லாம் எதில் ஊடும்பாவும்போல்

நிலைபெற்றுள்ளதோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும்!

ஸுஷாரதிரச்வானிவ யன்மனுஷ்யான்
நேனீயதேऽபீசுபிர்வாஜின இவ ।
ஹ்ருத்ப்ரதிஷ்ட்டம் யதஜிரம் ஜவிஷ்ட்டம்
தன்மே மன: சிவஸங்கல்பமஸ்து ॥ 6 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

*ஸுஷாரதி: – நல்ல சாரதி; அச்வான் இவ – குதிரைகளைப்போல்; மனுஷ்யான் – மனிதர்கள்; அபீசுபி: – கடிவாளத்தால்; வாஜின: – குதிரைகளை; நேனீயதே இவ – வழிநடத்துவதுபோல்; யத் – எந்த ஆன்மா; ஹ்ருத்ப்ரதிஷ்ட்டம் – இதயத்தில் நிலை பெற்றிருக்கிறதோ; அஜிரம் – என்றும் இளமை யானதோ; ஜவிஷ்ட்டம் – அனைத்திலும் வேகமானதோ; தத்.... அஸ்து – அந்த ஆன்மா.... தூண்டட்டும்.*

6. நல்ல சாரதி குதிரைகளைக் கட்டுப்பாட்டில் வைத் திருப்பதுபோல், மனிதர்கள் கடிவாளத்தால் குதிரைகளை வழி நடத்துவதுபோல் எந்த ஆன்மா இதயத்தில் நிலைபெற்றிருந்து மனிதர்களை வழி நடத்துகிறதோ, எந்த ஆன்மா என்றும் இளமையானதோ அனைத்திலும் வேகமானதோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும்!



# ४. नासदीय सूक्तम्

ऋग्वेद, 10.8.129

ॐ तच्छं योरावृणीमहे । गातुं यज्ञाय । गातुं यज्ञपतये । दैवी स्वस्तिरस्तु नः । स्वस्तिर्मानुषेभ्यः । ऊर्ध्वं जिगातु भेषजम् । शं नो अस्तु द्विपदे । शं चतुष्पदे ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ॐ ॥ नासदासीन्नो सदासीत् तदानीं नासीद्रजो नो व्योमा परो यत् । किमावरीवः कुह कस्य शर्मन्नम्भः किमासीद्गहनं गभीरम् ॥ १ ॥

न मृत्युरासीदमृतं न तर्हि न रात्र्या अह्न आसीत् प्रकेतः । आनीदवातं स्वधया तदेकं तस्माद्धान्यन्न परः किं चनास ॥ २ ॥

तम आसीत् तमसा गूढमग्रेऽप्रकेतं सलिलं सर्वमा इदम् । तुच्छ्येनाभ्वपिहितं यदासीत् तपसस्तन्महिनाजायतैकम् ॥ ३ ॥

कामस्तदग्रे समवर्तताधि मनसो रेतः प्रथमं यदासीत् । सतो बन्धुमसति निरविन्दन् हृदि प्रतीष्या कवयो मनीषा ॥ ४ ॥

तिरश्चीनो विततो रश्मिरेषामधः स्विदासी३दुपरि स्विदासी३त् । रेतोधा आसन् महिमान आसन्त्स्वधा अवस्तात् प्रयतिः परस्तात् ॥ ५ ॥

को अद्धा वेद क इह प्रवोचत् कुत आजाता कुत इयं विसृष्टिः । अर्वाग्देवा अस्य विसर्जनेनाऽथा को वेद यत आबभूव ॥ ६ ॥

इयं विसृष्टिर्यत आबभूव यदि वा दधे यदि वा न । यो अस्याध्यक्षः परमे व्योमन्त्सो अङ्ग वेद यदि वा न वेद ॥ ७ ॥

ॐ तच्छंयो....

## 4. நாஸதீய ஸூக்தம்

*ரிக்வேதம், 10.8.129*

ஓம் தச்சம்யோராவ்ருணீமஹே । காதும் யஜ்ஞாய । காதும் யஜ்ஞபதயே । தைவீ ஸ்வஸ்திரஸ்து

ந: । ஸ்வஸ்திர் மானுஷேப்ய: । ஊர்த்வம் ஜிகாது பேஷஜம் । சன்னோ அஸ்து த்விபதே । சம் சதுஷ்பதே ।

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

படைப்பிற்கு முன்னால் என்ன இருந்தது, எப்படி இருந்தது என்று பிரளய காலத்தை வர்ணிக்கின்ற கவிதை இது. படைப்பிற்கு முன்னால் என்ன இருந்தது என்பதை, படைப்பிற்கு எத்தனையோ கோடி வருடங்களுக்குப் பிறகு வந்த முனிவரால் எப்படிச் சொல்ல முடியும்? முனிவர்களைக் குறிக்க சம்ஸ்கிருதத்தில் கவி என்ற சொல் ஒன்று உண்டு. கவி என்றால் க்ராந்ததர்சி, அதாவது கடந்த காலத்தையும் அறிபவர். முனிவர்கள் இறையனு பூதி பெற்றவர்கள். இறையனுபூதியில் கடந்த காலம், எதிர்காலம் எல்லாம் நிகழ்காலத்திற்குள் அடங்கி விடு கின்றன. அத்தகைய அனுபூதி நிலையில் ஒரு முனிவர் பாடிய கவிதை இது. எனவே ஆழ்ந்த அனுபூதியையும் தத்துவச் செறிவையும் அவற்றுடன் இணையற்ற கவிதை யழகையும் கொண்டதாக உள்ளது இந்த ஸூக்தம்.

ஓம் ॥ நாஸதாஸீன்னோ ஸதாஸீத் ததானீம் நாஸீத்ரஜோ நோ வ்யோமா பரோ யத் । கிமாவரீவ: குஹ கஸ்ய சர்மன்னம்ப: கிமாஸீத் கஹனம் கபீரம் ॥ 1 ॥

*ததானீம் – படைப்பிற்கு முன்பு; அஸத் – இல்லாமை; ந ஆஸீத் – இல்லை; ஸத் – இருப்பு; ந ஆஸீத் – இல்லை; ரஜ: – பூமி; ந ஆஸீத் – இல்லை; யத் பரோ வ்யோமா – மேலான ஆகாசம்; ந – இல்லை; ஆவரி இவ கிம் – மூடிபோன்ற ஒன்று என்ன?; குஹ – எங்கே?; சர்மன் – அனுபவம்; கஸ்ய – யாருக்கு; கஹனம் – ஆழமான; கபீரம் – அளக்க முடியாத; அம்ப: – வெள்ளம்; ஆஸீத் கிம் – இருந்ததா.*

1. படைப்பிற்கு முன்பு இல்லாமை இல்லை, இருப்பு இல்லை, பூமி இல்லை, மேலான ஆகாசம் இல்லை. மூடிபோன்ற ஒன்று உள்ளதே அது என்ன? அது எங்கே உள்ளது? இன்ப துன்ப அனுபவம் யாருக்கு? ஆழமான, அளக்க முடியாத இந்த வெள்ளம் அப்போது இருந்ததா?

ந ம்ருத்யுராஸீதம்ருதம் ந தர்ஹி ந ராத்ர்யா அஹ்ன ஆஸீத்ப்ரகேத: । ஆனீதவாதம் ஸ்வதயா ததேகம் தஸ்மாத்தான்யன்ன பர: கிஞ்சனாஸ ॥ 2 ॥

*தர்ஹி – அப்போது; ம்ருத்யு – மரணம்; ந ஆஸீத் – இல்லை; ந அம்ருதம் – அமரத்துவமும் இல்லை; ராத்ர்யா அஹ்ன: – இரவுபகலின்; ப்ரகேத: – அடையாளமே; ந ஆஸீத் – இல்லை; ஆனீத – மூச்சற்ற; தத் ஏகம் – அந்த ஒரே இறைவன்; ஸ்வதயா – தமது சக்தியால்; வாதம் – சுவாசித்தார்; பர: – அப்பால்;*

தஸ்மாத்தா – அவரைத் தவிர; அன்ய: கிஞ்சன – வேறு எதுவும்; ந ஆஸ – இருக்கவில்லை.

2. அப்போது மரணம் இல்லை, அமரத்துவமும் இல்லை, இரவுபகலின் அடையாளமே இல்லை. மூச்சற்ற அந்த ஒரே இறைவன் தமது சக்தியால் சுவாசித்தார். அவருக்கு அப்பால் அவரைத் தவிர வேறு எதுவும் இருக்கவில்லை.

தம ஆஸீத் தமஸா கூடமக்ரேऽப்ரகேதம் ஸலிலம்

ஸர்வமா இதம் । துச்ச்யேனாப்வபிஹிதம் யதாஸீத்

தபஸஸ்தன்மஹினா ஜாயதைகம் ॥ 3 ॥

அக்ரே – முன்னால்; தம: – இருள்; தமஸா – இருளால்; கூடம் – மூடப்பட்டிருந்தது; இதம் ஸர்வமா – இந்த எல்லாம்; அப்ரகேதம் – அடையாளம் காண முடியாத; ஸலிலம் – வெள்ளமாக இருந்தது; ஆபு: – எல்லாவற்றையும் தன்னுள் கொண்டவராக; துச்ச்யேன – சூன்யத்தால்; அபிஹிதம் – மூடப்பட்டவராக; ஏகம் – ஒரே ஒருவராக; யத் ஆஸீத் – எந்த இறைவன் இருந்தாரோ; தத் – அவர்; தபஸ: மஹினா – தவத்தின் மகிமையால்; ஜாயதே – வெளிப்படுத்திக் கொண்டார்.

3. படைப்பிற்கு முன்னால் இருள் இருளால் மூடப்பட்டிருந்தது. இந்த எல்லாமே, அடையாளம் காண முடியாத வெள்ளமாக இருந்தது. எல்லாவற்றையும் தன்னுள் கொண்டவராக,

சூன்யத்தால் மூடப்பட்டவராக, ஒரே ஒருவராக எந்த இறைவன் இருந்தாரோ அவர் தவத்தின் மகிமையால் தம்மை வெளிப் படுத்திக் கொண்டார்.

இந்தப் பகுதியை வேதங்களின் கவிதை நயத்திற்கு ஓர் உதாரணமாகக் காட்டுகிறார் சுவாமி விவேகானந்தர்: 'இவை உலகிலேயே மிகச் சிறந்த கவிதைகள். வேதங் களின் சம்ஹிதைப் பகுதியை நீங்கள் படிப்பீர்களானால், எழில் கொஞ்சித் ததும்பும் அற்புதமான பகுதிகளைக் காண்பீர்கள். உதாரணமாக பிரளய வர்ணனையைப் பாருங்கள்— தம ஆஸீத் தமஸா கூடமக்ரே— இருள் இருளில் மறைந்திருந்த போது... இவ்வாறு செல்கிறது கவிதை. இதைப் படிக்கும்போது நுட்பமான கவிதை நயத்தை உணர்கிறோம்....

'இப்போது மூன்று கவிஞர்கள் இருளை எவ்வாறு வர்ணிக்கின்றனர் என்று பாருங்கள். நமது காளிதாசரை எடுத்துக் கொள்வோம்— ''ஊசி நுனி நுழைந்து ஊடுருவு கின்ற இருள்'' என்கிறார் அவர். மில்டன், ''ஒளியில்லை; மாறாக, காணத்தக்கதான இருள்'' என்கிறார். இப்போது உபநிஷதத்திற்கு வாருங்கள்— ''இருளை இருள் மூடி யிருந்தது', 'இருள் இருளில் மறைந்திருக்கிறது''. வெப்பப் பகுதியில் வாழ்பவர்களான நாம்தான் இதைப் புரிந்துகொள்ள முடியும். மழைக்காலம் சட்டென்று வரும், கணநேரத்தில் அடிவானம் இருளும், கருமேகத் திரள்கள் எழும், கரிய மேகக் கூட்டங்கள் அதைவிடக் கரிய மேகங்களால் மூடுவதும் எழுவதுமாக ஓர் அற்புதக் கோலம் விரியும். இவ்வாறு செல்கிறது சம்ஹிதை.'[1]

---

1. ஞானதீபம், 5.268,269.

காமஸ்ததக்ரே ஸம்வர்த்ததாதி மனஸோ ரேத:

ப்ரதமம் யதாஸீத் । ஸதோ பந்தும்ஸதி நிரவிந்தன்

ஹ்ருதி ப்ரதீப்யா கவயோ மனீஷா || 4 ||

மனஸ: – *மனத்தின்;* ப்ரதமம் ரேத: – *முதல் விதையாக;* யத் ஆஸீத் – *எது இருந்ததோ;* தத் காம: – *அந்த ஆசை;* அக்ரே – *ஆரம்பத்தில்;* அதி ஸமவர்த்த – *எழுந்தது;* ஹ்ருதி – *இதயத்தில்;* ப்ரதீஷ்யா – *தேடுகின்ற;* கவய: – *ரிஷிகள்;* ஸத: – *உண்மைக்கு;* அஸதி பந்து: – *உண்மையல்லாததுடன் உள்ள தொடர்பை;* மனீஷா – *உள்ளுணர்வின் மூலம்;* நிரவிந்தன் – *கண்டு பிடித்தார்கள்.*

4. மனத்தின் முதல் விதையாக எது இருந்ததோ, அந்த ஆசை ஆரம்பத்தில் எழுந்தது. இதயத்தில் தேடுகின்ற ரிஷிகள் உண்மைக்கு உண்மையல்லாததுடன் உள்ள தொடர்பை உள்ளுணர்வின்மூலம் கண்டுபிடித்தார்கள்.

திரச்சீனோ விததோ ரச்மிரேஷாமத:

ஸ்விதாஸீ3துபரி ஸ்விதாஸீ3த் । ரேதோதா ஆஸன்

மஹிமான ஆஸன்த்ஸ்வதா அவஸ்தாத் ப்ரயதி:

பரஸ்தாத் || 5 ||

ஏஷாம் – *இவற்றின்;* ரச்மி: – *கதிர்கள்;* அத: ஸ்வித் ஆஸீத் – *கீழே இருந்தன;* உபரி ஸ்வித் ஆஸீத் – *மேலே இருந்தன;* திரச்சீன: – *குறுக்காகவும்;* விதத: – *பரந்தன;* ரேதோதா ஆஸன் – *சந்ததியைத் தோற்றுவிக்க வல்லவை இருந்தன;* மஹிமான ஆஸன் – *மகத்தானவை இருந்தன;* ஸ்வதா அவஸ்தாத் – *கீழே ஆற்றல் இருந்தது;* ப்ரயதி: பரஸ்தாத் – *மேலே வேகம் இருந்தது.*

5. இவற்றின் கதிர்கள் கீழே இருந்தன, மேலே இருந்தன, குறுக்காகவும் பரந்தன. சந்ததியைத் தோற்றுவிக்க வல்லவையான உயிரினங்கள் இருந்தன, மகத்தானவை இருந்தன. கீழே ஆற்றல் இருந்தது, வேகம் மேலே இருந்தது.

படைப்பு எப்படி நிகழ்ந்தது என்று இந்த மந்திரம் சொல்கிறது. 'கதிர்கள்' என்று இங்கே சொல்லப் படுபவை அண்டங்கள் ஆகும். எண்ணற்ற இந்த அண்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் படைக்கப் பட்டாலும், ஆற்றல் மற்றும் வேகத்தின் காரணமாக, அவை ஒளிக்கதிர்கள் பரவுவதுபோல் அவ்வளவு விரைவாக எங்கும் பரந்தன. எனவே எந்த உலகம் மேலே உள்ளது, எது கீழே உள்ளது என்றெல்லாம் சொல்ல முடியாமல் போயிற்று. படைப்பில் எத்தனையோ உயிரினங்களும், மகத்தான எவ்வளவோ பிறவும் இருந்தன.

கோ அத்தா வேத க இஹ ப்ரவோசத் குத ஆஜாதா குத இயம் விஸ்ருஷ்ட்டி: | அர்வாக் தேவா

அஸ்ய விஸர்ஜனேனாऽதா கோ வேத யத

ஆபபூவ ॥ 6 ॥

*அத்தா – உண்மையில்; க: – யார்; வேத – அறிவார்; குத – எங்கிருந்து; ஆஜாதா – தோன்றியது; இயம் – இந்த; விஸ்ருஷ்ட்டி: – படைப்பு; குத – எங்கிருந்து ; இஹ – இதை; க: – யார்; ப்ரவோசத் – சொல்ல முடியும்?; தேவா – தேவர்கள்; அஸ்ய – இந்த; விஸர்ஜனேன – படைப்பிற்கு; அர்வாக் – பிறகு தோன்றியவர்கள்; அதா – எனவே; யத – எங்கிருந்து; ஆபபூவ – தோன்றியது; க: – யார்; வேத – அறிவார்.*

6. உண்மையில் இந்தப் படைப்பு எங்கிருந்து தோன்றியது என்று யார் அறிவார்? இந்தப் படைப்பு எங்கிருந்து தோன்றியது? இதை யார் சொல்ல முடியும்? தேவர்கள் இந்தப் படைப்பிற்குப் பிறகு தோன்றியவர்கள். எனவே அவர்களுக்கு அது தெரியாது. இந்தப் படைப்பு எங்கிருந்து தோன்றியது என்று யார் அறிவார்?

இயம் விஸ்ருஷ்ட்டிர்யத ஆபபூவ யதி வா ததே

யதி வா ந। யோ அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமன்த்ஸோ

அங்க வேத யதி வா ந வேத ॥ 7 ॥

ஓம் தச்சம்யோ.....

*இயம் – இந்த; விஸ்ருஷ்ட்டி: – படைப்பு; யத – எங்கிருந்து; ஆபபூவ – தோன்றியதோ;*

ததே யதி வா – *தாங்குகிறதா;* யதி வா ந – *இல்லையா;* பரமே வ்யோமன் – *மேலான விண்ணில் வாழும்;* அஸ்ய – *இந்தப் படைப்பின்;* அத்யக்ஷ: – *தலைவர்;* ய: – *யாரோ;* ஸ: – *அவர்;* அங்க – *கட்டாயமாக;* வேத – *அறிவார்;* யதி – *ஒருவேளை;* வா ந வேத – *அவருக்கும் தெரியாதோ.*

7. இந்தப் படைப்பு எங்கிருந்து தோன்றியதோ, அது இந்தப் படைப்பைத் தாங்குகிறதா, இல்லையா? மேலான விண்ணில் வாழும் இந்தப் படைப்பின் தலைவர் யாரோ அவர் கட்டாயமாக அறிவார். ஒருவேளை அவருக்கும் தெரியாதோ என்னவோ!

பரந்து கிடக்கின்ற வான வெளியையும் மின்னித் திளைக்கின்ற நட்சத்திரக் கூட்டங்களையும், நிலவையும், கதிரையும், கடலையும், மலையையும் ஒரு கணமாவது பார்த்து சிந்திப்பவர்கள் பிரமிப்பைத் தவிர வேறு எதை அடைய முடியும்? அத்தகைய பிரமிப்பில் ஆழ்ந்த முனிவர் ஒருவர் படைப்பின் ரகசியம் நமக்கும் தேவர்களுக்கும் தெரியவில்லை, அனைத்தையும் படைத்த இறைவனுக்கேகூட ஒருவேளை அது தெரியாதோ என்று மிகைப்படுத்திக் கூறுகிறார்!



# ५. पुरुषसूक्तम्

ऋग्वेद, 10.8.90

ॐ तच्छं योरावृणीमहे । गातुं यज्ञाय । गातुं यज्ञपतये । दैवी स्वस्तिरस्तु नः । स्वस्तिर्मानुषेभ्यः । ऊर्ध्वं जिगातु भेषजम् । शं नो अस्तु द्विपदे । शं चतुष्पदे ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ॐ ॥ सहस्रशीर्षा पुरुषः । सहस्राक्षः सहस्रपात् । स भूमिं विश्वतो वृत्वा । अत्यतिष्ठद्दशाङ्गुलम् । पुरुष एवेदगं सर्वम् । यद्भूतं यच्च भव्यम् । उतामृतत्वस्येशानः । यदन्नेनातिरोहति ॥ १-२ ॥

एतावानस्य महिमा । अतो ज्यायागंश्च पूरुषः । पादोऽस्य विश्वा भूतानि । त्रिपादस्यामृतं दिवि । त्रिपा-दूर्ध्व उदैत्पुरुषः । पादोऽस्येहाऽऽभवात्पुनः । ततो विष्वङ्

व्यक्रामत् । साशनानशने अभि । तस्माद्विराडजायत । विराजो अधि पूरुषः । स जातो अत्यरिच्यत । पश्चाद्भूमिमथो पुरः ॥ ३-५ ॥

यत्पुरुषेण हविषा । देवा यज्ञमतन्वत । वसन्तोअस्यासी-दाज्यम् । ग्रीष्म इध्मः शरद्धविः । सप्तास्यासन् परिधयः । त्रिः सप्त समिधः कृताः । देवा यद्यज्ञं तन्वानाः । अबध्नन् पुरुषं पशुम् । तं यज्ञं बर्हिषि प्रौक्षन् । पुरुषं जातमग्रतः । तेन देवा अयजन्त । साध्या ऋषयश्च ये ॥ ६-८ ॥

तस्माद्यज्ञात् सर्वहुतः । संभृतं पृषदाज्यम् । पशूंस्तांश्चक्रे वायव्यान् । आरण्यान् ग्राम्याश्चये । तस्माद्यज्ञात् सर्वहुतः । ऋचः सामानि जज्ञिरे । छन्दांसि जज्ञिरे तस्मात् । यजुस्तस्मादजायत ॥ ९-१० ॥

तस्मादश्वा अजायन्त । ये के चोभयादतः । गावो ह जज्ञिरे तस्मात् । तस्माज्जाता अजावयः । यत्पुरुषं व्यदधुः ।

कतिधा व्यकल्पयन् । मुखं किमस्य कौ बाहू । कावूरू पादावुच्येते । ब्राह्मणोऽस्य मुखमासीत् । बाहू राजन्यः कृतः ऊरू तदस्य यद्वैश्यः । पद्भ्यागं शूद्रो अजायत ॥ ११-१३ ॥

चन्द्रमा मनसो जातः । चक्षोः सूर्यो अजायत । मुखादिन्द्रश्चाग्निश्च । प्राणा-द्वायुरजायत । नाभ्या आसीदन्तरिक्षम् । शीर्ष्णो द्यौः समवर्तत । पद्भ्यां भूमिर्दिशः श्रोत्रात् । तथा लोकागं अकल्पयन् ॥ १४-१५ ॥

वेदाहमेतं पुरुषं महान्तम् । आदित्यवर्णं तमसस्तु पारे । सर्वाणि रूपाणि विचित्य धीरः । नामानि कृत्वाऽभिवदन् यदास्ते । धाता पुरस्ताद्यमुदाजहार । शक्रः प्रविद्वान् प्रदिशश्च-तस्रः । तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था अयनाय विद्यते । यज्ञेन यज्ञमयजन्त देवाः । तानि धर्माणि प्रथमान्यासन् । ते ह नाकं महिमानः सचन्ते । यत्र पूर्वे साध्याः सन्ति देवाः ॥ १६-१८ ॥

अद्भ्यस्संभूतः पृथिव्यै रसाच्च । विश्वकर्मणः समवर्तताधि । तस्य त्वष्टा विदधद्रूपमेति । तत्पुरुषस्य विश्वमाजानमग्रे । वेदाहमेतं पुरुषं महान्तम् । आदित्यवर्णं तमसः परस्तात् । तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था विद्यतेऽयनाय । प्रजापतिश्चरति गर्भे अन्तः । अजायमानो बहुधा विजायते । तस्य धीराः परिजानन्ति योनिम् । मरीचीनां पदमिच्छन्ति वेधसः ॥ १९-२१ ॥

यो देवेभ्य आतपति । यो देवानां पुरोहितः । पूर्वो यो देवेभ्यो जातः । नमो रुचाय ब्राह्मये । रुचं ब्राह्मं जनयन्तः । देवा अग्रे तदब्रुवन् । यस्त्वैवं ब्राह्मणो विद्यात् । तस्य देवा असन् वशे ॥ २२-२३ ॥

ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ । अहोरात्रे पार्श्वे । नक्षत्राणि रूपम् । अश्विनौ व्यात्तम् ॥ २४ ॥

इष्टं मनिषाण । अमुं मनिषाण । सर्वं मनिषाण ॥ २५ ॥

ॐ तच्छंयो....

# 5. புருஷ ஸூக்தம்

*ரிக்வேதம், 10.8.90*

வேத மந்திரங்களுள் கருத்துச் செறிவிலும் மந்திர ஆற்றலிலும் மிக முக்கியமான ஒன்று புருஷ ஸூக்தம். புருஷன் என்றால் இறைவன். இறைவனின் மகிமையைப் பாடுகின்ற ஸூக்தம் இது. கோயிலில், வீட்டில், தெய்வ வழிபாட்டில், தினசரி பாராயணத்தில், வைதீகச் சடங்குகளில், அன்றாட கர்மங்களில் எல்லாம் புருஷ ஸூக்தம் ஓதப்படுகிறது. புருஷ ஸூக்தம் வைதீக இந்துவின் வாழ்க்கையில் ஓர் அங்கமாகவே உள்ளது எனலாம். இதனை ஓதுவது வாழ்வில் மங்கலத்தைச் சேர்க்கும் என்று கூறப்படுகிறது.

வேதங்களை மூன்று முக்கியப் பிரிவுகளாகப் பிரிப்பார்கள்—

1. சம்ஹிதை: பல்வேறு தேவர்களிடம் பிரார்த்தனைகள்.

2. பிராம்மணம்: யாக விவரங்கள்

3. ஆரண்யகம் (உபநிஷதங்கள்): அறுதி உண்மையைப் பற்றிய ஆராய்ச்சி.

புருஷ ஸூக்தம் இந்த மூன்று அம்சங்களையும் உள்ளடக்கியது. இது இறைவனின் மகிமையைப் பாடுவதில் ஆரம்பிக்கிறது. பிறகு இறைவனின் தியாகத்தால் இந்த உலகமும் உயிர்களும் தோன்றியதைப் பேசுகிறது. பிறகு உயிர் இறைவனை அடைவதுதான் அஞ்ஞான

இருளைக் கடப்பதற்கான வழி என்பதைக் கூறி, அதற்கான காரணத்தையும் அந்த வழியையும் விளக்குகிறது. இவ்வாறு புருஷ ஸூக்தம் ஒரு முழுமையான சாஸ்திரமாக உள்ளது.

ஓம் தச்சம்யோராவ்ருணீமஹே । காதும் யஜ்ஞாய । காதும் யஜ்ஞபதயே । தைவீ ஸ்வஸ்திரஸ்து ந: । ஸ்வஸ்திர் மானுஷேப்ய: । ஊர்த்வம் ஜிகாது பேஷஜம் । சன்னோ அஸ்து த்விபதே । சம் சதுஷ்பதே ।

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

*முதலில் இறைவனின் மகிமை போற்றப்படுகிறது—*

ஓம் ॥ ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: । ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ர பாத் । ஸ பூமிம் விச்வதோ வ்ருத்வா । அத்யதிஷ்ட்டத்தசாங்குலம் ॥ 1 ॥

புருஷ: – *இறைவன்;* ஸஹஸ்ர சீர்ஷா: – *ஆயிரக் கணக்கான தலைகள் உடையவர்;* ஸஹஸ்ர அக்ஷ: – *ஆயிரக்கணக்கான கண்களை உடையவர்;* ஸஹஸ்ரபாத் – *ஆயிரக்கணக்கான பாதங்களை உடையவர்;* ஸ: – *அவர்;* பூமிம் – *பூமியை;* விச்வத: – *எங்கும்;* வ்ருத்வா – *வியாபித்து;* தச அங்குலம் – *பத்து அங்குலம் ஓங்கி;* அத்யதிஷ்ட்டத் – *நிற்கிறார்.*

1. இறைவன் ஆயிரக்கணக்கான தலைகள் உடையவர், ஆயிரக்கணக்கான கண்களை உடையவர், ஆயிரக்கணக்கான பாதங்களை உடையவர். அவர் பூமியை எங்கும் வியாபித்து, பத்து அங்குலம் ஓங்கி நிற்கிறார்.

இறைவன் எங்கும் நிறைந்தவர் என்பதே இவ்வாறு ஆயிரக்கணக்கான தலைகள் உடையவர் என்றெல்லாம் கூறப்படுகிறது. எங்கும் நிறைந்திருக்கின்ற அதே இறைவன் நம்முள்ளும் இருக்கிறார். மலை, மரம் போன்றவற்றைப் படம் பிடிக்கும்போது, அந்த உருவம் எவ்வளவு பெரியதாக இருந்தாலும், காமிராவிலுள்ள ஃபிலிமின் (Film) அளவே அது படத்தில் பதிகிறது. அதுபோல் எல்லையற்ற இறைவன் தியான வேளையில் இதய வெளியில் பத்து அங்குல அளவினர் போல் தெரிகிறார்.

புருஷ ஏவேதக்ம் ஸர்வம் | யத்பூதம் யச்ச பவ்யம் | உதாம்ருதத்வஸ்யேசான: | யதன்னேனாதி ரோஹதி || 2 ||

யத் பூதம் – முன்பு எது இருந்ததோ; யத் பவ்யம் ச – எது இனி வரப் போகிறதோ; இதம் – இப்பொழுது காணப்படுகிறதோ; ஸர்வம் – எல்லாம்; புருஷ: ஏவ – இறைவனே; உத – மேலும்; அம்ருதத்வஸ்ய – மரணமிலா பெருநிலைக்கு; ஈசான: – தலைவராக இருப்பவரும்; யத் – அவர்; அன்னேன – ஜடவுலகை; அதிரோஹதி – கடந்தவர்.

2. முன்பு எது இருந்ததோ, எது இனி வரப் போகிறதோ, இப்பொழுது எது காணப்படுகிறதோ எல்லாம் இறைவனே. மரணமிலா பெருநிலைக்குத் தலைவராக இருப்பவரும் அவரே. ஏனெனில் அவர் இந்த ஜடவுலகைக் கடந்தவர்.

ஏதாவானஸ்ய மஹிமா । அதோ ஜ்யாயாக்ம்ச்ச

பூருஷ: । பாதோऽஸ்ய விச்வா பூதானி । த்ரிபாதஸ்

யாம்ருதம் திவி ॥ 3 ॥

ஏதாவான் – இங்கு காணப்படுவதெல்லாம்; அஸ்ய – இறைவனின்; மஹிமா – மகிமையே; அத: – ஆனால்; புருஷ: ச – இறைவன்; ஜ்யாயான் – சிறப்பு மிக்கவர்; பூதானி விச்வா – தோன்றியவை எல்லாம்; அஸ்ய – அவருடைய; பாத: – கால் பங்கு; அஸ்ய – அவரது; த்ரிபாத் – முக்கால் பங்கு; அம்ருதம் – அழிவற்றதான; திவி – விண்ணில் இருக்கிறது.

3. இங்கு காணப்படுவதெல்லாம் இறைவனின் மகிமையே. ஆனால் அந்த இறைவன் இவற்றைவிடச் சிறப்பு மிக்கவர். தோன்றியவை எல்லாம் அவருடைய கால் பங்கு மட்டுமே; அவரது முக்கால் பங்கு அழிவற்றதான விண்ணில் இருக்கிறது.

இறைவனின் அளவிலடங்காத பெருமை இங்கு பேசப்படுகிறது. காண்கின்ற பிரபஞ்சத்தின் ஓர் அம்சத்தைக்கூட நாம் இன்னும் அறிந்தபாடில்லை. இது இறைவனின் கால் பங்கு மட்டுமே என்று அவரது எல்லையற்ற மகிமையை இந்த மந்திரம் கூறுகிறது.

இனி வருவது வேதங்கள் காட்டுகின்ற மாபெரும் கருத்துக்களுள் ஒன்றான யஜ்ஞம் அல்லது வேள்வி.

இந்தப் பிரபஞ்சத்தையே ஒரு மாபெரும் வேள்வி யாகக்கண்டனர் வேதரிஷிகள். சற்றே அமைதியாக நின்று இந்த உலகை ஒருமுறை பார்க்கத் தெரிந்த யாருக்கும் இந்த உலகின் இயக்கம் ஒரு மாபெரும் வேள்வியாக நடைபெற்றுக் கொண்டிருப்பது தெரிய வரும்.

பிறக்கின்ற அனைத்தும் இறக்கின்றன; மலர்கின்ற அனைத்தும் வாடுகின்றன; எழுகின்ற அனைத்தும் வீழ் கின்றன; தோன்றுகின்ற அனைத்தும் மறைகின்றன. இறப்பவை புதியவை பிறப்பதற்குக் காரணமாகின்றன; வாடுபவை புதியவை மலர்வதற்குக் காரணமாகின்றன; வீழ்பவை, புதியவை எழுவதற்குக் காரணமாகின்றன; மறைபவை, புதியவை தோன்றுவதற்குக் காரணமா கின்றன. இந்த மாபெரும் சுழற்சி எதைக் காட்டுகிறது? இங்கே மாபெரும் வேள்வி ஒன்று நடைபெறுகிறது என்பதைத் தானே!

நாம் இந்தப் பிரபஞ்சத்தில் ஓர் அங்கம். இங்கே நாம் வாழ வேண்டுமானால், நாம் இங்கிருந்து எடுப்பதைத் திருப்பிக் கொடுத்தாக வேண்டும். உணவு, தண்ணீர், பிராண வாயு முதலியவற்றைப் பெறு கிறோம்; கரியமில வாயு, கழிவுப் பொருட்கள் என்று அதனைத் திருப்பிக் கொடுக்கிறோம். அறிவைப் பெறுகிறோம், அதனைச் சரியான துறையில் பயன் படுத்துவதன்மூலம் திருப்பிக் கொடுக்கிறோம். ஒவ் வொரு நிலையிலும் இவ்வாறு சிலவற்றை எடுக் கிறோம், சிலவற்றைத் திருப்பிக் கொடுக்கிறோம். இதுவே வேள்வி-நியதி. சாதாரண மனிதர்கள் ஒவ் வொருவரும் இந்த நியதியைப் பின்பற்றியே ஆக வேண்டும்.

நம்மிடம் கொடுக்கப்படுகின்ற, அல்லது நாம் உலகி லிருந்து எடுத்துக்கொள்கின்ற அனைத்தும் திருப்பிக் கொடுப்பதற்காகவே என்ற இந்த வேள்வி-நியதியைப் புரிந்துகொண்டு வாழ முயற்சித்தால் வாழ்க்கை இன்ப மாக அமையும்.

இந்தப் பிரபஞ்ச வேள்வியின் ஒரு சிறிய மாதிரியே அக்கினியில் நெய்யைச் சொரிந்து செய்யப்படும் வேள்விகள். நெய் முதலான ஆஹுதிகளைக் 'கொடுக் கிறோம்', மழை, சொர்க்க பதவி முதலியவற்றைப் 'பெறுகிறோம்'. இந்தக் கருத்தையே பின்னாளில் பகவத் கீதை *(3. 11)*, 'நீங்கள் யஜ்ஞத்தால் தேவர்களைப் பேணுங்கள்; தேவர்கள் (மழை முதலியவற்றால்) உங் களைப் பேணுவார்கள். இவ்வாறு ஒருவருக்கொருவர் பேணி வாழ்வதன்மூலம் நீங்கள் மேலான நன்மையைப் பெறுவீர்கள்' என்று எடுத்துக் காட்டியது.

படைப்பும் இத்தகைய ஒரு மாபெரும் வேள்வியின் பலனாகவே தோன்றியது. இறைவன் தன்னையே ஆஹுதியாக அளித்து உலகைப் படைத்தார்.

புருஷ ஸூக்தத்தில் இரண்டு வகை படைப்புகள் கூறப்படுவதாக சாயணர் விளக்குகிறார். அவை முதல் படைப்பு (பூர்வ சிருஷ்டி), இரண்டாம் படைப்பு (உத்தர சிருஷ்டி) என்பவை. முதல் படைப்பில் இறைவன் தன்னைப் பிரபஞ்சமாகவும் பல்வேறு உயிர்களாகவும் படைத்துக் கொண்டார்; இது 4 மற்றும் 5- ஆம் மந்திரத் தில் விளக்கப்படுகிறது. இரண்டாம் படைப்பில், அந்த உயிர்கள் வாழ்வதற்கான உணவு மற்றும் அதுபோன்ற பொருட்களாக ஆனார்; இது 6-ஆம் மந்திரத்திலிருந்து விளக்கப்படுகிறது.

த்ரிபாதூர்த்வ உதைத் புருஷ: । பாதோऽ ஸ்யேஹாऽऽபவாத் புன: । ததோ விஷ்வங் வ்யக்ராமத் । ஸாசனானசனே அபி ॥ 4 ॥

த்ரிபாத் – முக்கால்; புருஷ: – பரம்பொருள்; ஊர்த்வ: – மேலே; உதைத் – விளங்குகிறார்; அஸ்ய – அவரது; பாத: – கால் பங்கு; இஹ – இங்கே; புன: – மீண்டும்; அபவாத் – தோன்றியது; தத: –பிறகு; ஸாசன அனசனே – உயிர்கள் மற்றும் ஜடப்பொருட்களில்; விஷ்வக் – எல்லாம்; அபி வ்யக்ராமத் – ஊடுருவிப் பரந்தார்.

4. பரம்பொருளின் முக்கால் பங்கு மேலே விளங்குகிறது. எஞ்சிய கால் பங்கு மீண்டும் இந்தப் பிரபஞ்சமாகத் தோன்றியது. பிறகு அவர் உயிர்கள் மற்றும் ஜடப்பொருட்களில் எல்லாம் ஊடுருவிப் பரந்தார்.

தஸ்மாத்விராட்ஜாயத । விராஜோ அதி பூருஷ: । ஸ ஜாதோ அத்யரிச்யத । பச்சாத்பூமிமதோ புர: ॥ 5 ॥

தஸ்மாத் – அந்த ஆதி புருஷனிடமிருந்து; விராட் – பிரம்மாண்டம்; அஜாயத – உண்டாயிற்று; விராஜோ அதி – பிரம்மாண்டத்தைத் தொடர்ந்து;

புருஷ: – பிரம்மா; ஜாத: – உண்டாகி; அத்யரிச்யத – எங்கும் வியாபித்தார்; பச்சாத் – பிறகு; ஸ: – அவர்; பூமிம் – பூமியை; அத: – அதன் பிறகு; புர: – உடலை.

5. அந்த ஆதி புருஷனிடமிருந்து பிரம்மாண்டம் உண்டாயிற்று. பிரம்மாண்டத்தைத் தொடர்ந்து பிரம்மா உண்டாகி எங்கும் வியாபித்தார். பிறகு அவர் பூமியைப் படைத்தார். அதன்பிறகு உயிர்களுக்கு உடலைப் படைத்தார்.

*இனி இரண்டாம் படைப்பு விளக்கப்படுகிறது—*

யத் புருஷேண ஹவிஷா । தேவா யஜ்ஞமதன்வத ।

வஸந்தோ அஸ்யாஸீதாஜ்யம் । க்ரீஷ்ம இத்ம:

சரத்தவி: ॥ 6 ॥

புருஷேண ஹவிஷா – இறைவனாகிய ஆஹுதியால்; தேவா: – தேவர்கள்; யத் – எந்த; யஜ்ஞம் – வேள்வியை; அதன்வத – செய்தார்களோ; அஸ்ய – அதற்கு; வஸந்த: – வசந்தகாலம்; ஆஜ்யம் – நெய்யாகவும்; க்ரீஷ்ம: – கோடைக் காலம்; இத்ம: – விறகாகவும்; சரத் – சரத்காலம்; ஹவி: – நைவேத்தியமாகவும்; ஆஸீத் – ஆயிற்று.

6. இறைவனை ஆஹுதிப்பொருளாகக் கொண்டு தேவர்கள் செய்த வேள்விக்கு வசந்த காலம் நெய்யாகவும், கோடைக் காலம் விறகாகவும், சரத்காலம் நைவேத்தியமாகவும் ஆயிற்று.

முதற்படைப்பில் படைக்கப்பட்ட தேவர்கள், தாங்கள் வேள்வி செய்வதற்கான பொருட்கள் எதுவும் இல்லை என்பதைக் கண்டனர். எனவே இறைவனையே ஆஹுதியாகக் கொண்டு மனத்தளவில் வேள்வி செய்தனர். இயற்கையின் அம்சங்களான காலம் போன்றவற்றைப் பயன்படுத்தினர்.

ஸப்தாஸ்யாஸன் பரிதய꞉ । த்ரி꞉ ஸப்த ஸமித꞉ க்ருதா꞉ । தேவா யத்யஜ்ஞம் தன்வானா꞉ । அபத்னன் புருஷம் பசும் ॥ 7 ॥

*அஸ்ய – இந்த வேள்விக்கு; ஸப்த – பஞ்சபூதங்கள், இரவு, பகல் ஆகிய ஏழும்; பரிதய꞉ – பரிதிகளாக; ஆஸன் – ஆயின; த்ரிஸ்ஸப்த – இருபத்தொரு தத்துவங்கள்; ஸமித꞉ – விறகுகளாக; க்ருதா꞉ – செய்யப்பட்டன; தேவா꞉ – தேவர்கள்; யஜ்ஞம் – யாகத்தை; தன்வானா꞉ – செய்பவர்களாய்; யத் புருஷம் – அந்த பிரம்மாவை; பசும் – ஹோமப் பசுவாக; அபத்னன் – கட்டினார்கள்.*

7. இந்த வேள்விக்கு பஞ்ச பூதங்கள், இரவு, பகல் ஆகிய ஏழும் பரிதிகளாக ஆயின. இருபத்தொரு தத்துவங்கள் விறகுகள் ஆயின. தேவர்கள் யாகத்தை ஆரம்பித்து, பிரம்மாவை ஹோமப் பசுவாகக் கட்டினார்கள்.

இயற்கையின் பல்வேறு அம்சங்கள் இந்தப் பிரபஞ்ச வேள்வியில் பல்வேறு அங்கங்களாக உருவகிக்கப் படுகின்றன.

முதலில் வேள்வியின் பரிதிகள். பரிதி என்பது வேள்விக் குண்டத்தின் எல்லைக் கோடு. தீய சக்திகளிலிருந்து வேள்வி குண்டத்தைக் காப்பதற்காக இது அமைக்கப்படுகிறது. குண்டத்தைச் சுற்றி குசப்புல்லை வைத்து அதன்மீது உலர்ந்த மரக் குச்சிகளை வைத்து பரிதி அமைக்கப்படுகிறது. இங்கே குசப்புல்லோ மரங்களோ இல்லை. ஏனெனில் படைப்பே ஆரம்பிக்கவில்லை. எனவே இந்தப் பிரபஞ்ச வேள்வியில் மண், நீர், தீ, காற்று, ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங்களும் இரவும் பகலும் பரிதிகளாக அமைக்கப் பட்டன. இவை புற இயற்கையைக் குறித்து நிற்கின்றன.

வேள்விக்கான விறகுகளுக்கு அக இயற்கை எடுத்துக் கொள்ளப்படுகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஞானேந்திரியங்கள் 5; கை, கால், வாய், குறி, குதம் என்ற கர்மேந்திரியங்கள் 5; பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்ற பிராணன்கள் 5; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் 4; இவற்றுடன், தர்மம், அதர்மம் ஆகிய 21 தத்துவங்களும் அக இயற்கையைக் குறித்து நிற்கின்றன.

இவ்வாறு அக இயற்கையும் புறஇயற்கையும் வேள்விக்கான விறகுகளாயின.

படைப்புக் கடவுளான பிரம்ம தேவனே, பலியிடப் படுவதற்கான பசுவாகக் கொள்ளப்பட்டார்.

*வேள்வி தொடங்குகிறது—*

தம் யஜ்ஞம் பர்ஹிஷி ப்ரௌக்ஷன் | புருஷம் ஜாதமக்ரத꞉ | தேன தேவா அயஜந்த | ஸாத்யா ரிஷயச்ச யே || 8 ||

அக்ரத: – *முதலில்;* ஜாதம் – *உண்டான;* தம் – *அந்த;* யஜ்ஞம் புருஷம் – *யஜ்ஞ புருஷனான பிரம்மாவை;* பர்ஹிஷி – *யாகத்தில்;* ப்ரௌக்ஷன் – *தண்ணீர் தெளித்தார்கள்;* தேன – *அதன்பிறகு;* தேவா – *தேவர்களும்;* ஸாத்யா: – *சாத்தியர்களும்;* ரிஷய: ச – *ரிஷிகளும்;* யே – *எவர்கள் உண்டோ அவர்களும்;* அயஜந்த – *யாகத்தை நடத்தினார்கள்.*

8. முதலில் உண்டான அந்த யஜ்ஞ புருஷனான பிரம்மாவின்மீது தண்ணீர் தெளித்தார்கள். அதன்பிறகு சாத்தியர்களும் தேவர்களும் ரிஷிகளும் இன்னும் யார்யார் உண்டோ அவர்களும் யாகத்தை நடத்தினார்கள்.

சொர்க்கத்தில் வாழ்பவர்கள் தேவர்கள், வைகுண்டத்தில் வாழ்பவர்கள் சாத்தியர்கள்.

பிரம்மாவைத் தண்ணீர் தெளித்து தூய்மைப்படுத்துவது முதலான சடங்குகளுடன் வேள்வி தொடங்குகிறது.

தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுத: । ஸம்ப்ருதம் ப்ருஷதாஜ்யம் । பசூக்ம்ஸ்தாக்ம்ச் சக்ரே வாயவ்யான் । ஆரண்யான் க்ராம்யாச்ச யே ॥ 9 ॥

ஸர்வஹுத: – *பிரபஞ்ச வேள்வியாகிய;* தஸ்மாத் யஜ்ஞாத் – *அந்த யாகத்திலிருந்து;* ப்ருஷதாஜ்யம் – *தயிர் கலந்த நெய்;* ஸம்ப்ருதம் – *உண்டாயிற்று;* வாயவ்யான் – *பறவைகளையும்;* ஆரண்யான் –

மிருகங்களையும்; யே – எவை; க்ராம்யாச்ச – வீட்டு மிருகங்களையும்; தான் பசூன் – மற்ற பிராணிகளையும்; சக்ரே – பிரம்மா படைத்தார்.

9. பிரபஞ்ச வேள்வியாகிய அந்த யாகத்திலிருந்து தயிர் கலந்த நெய் உண்டாயிற்று. பறவைகளையும், மான், புலி போன்ற காட்டு விலங்குகளையும், பசு போன்ற வீட்டு மிருகங் களையும் பிரம்மா படைத்தார்.

தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுத: । ரிச: ஸாமானி ஜஜ்ஞிரே । சந்தாக்ம்ஸி ஜஜ்ஞிரே தஸ்மாத் । யஜுஸ்தஸ்மாதஜாயத ॥ 10 ॥

ஸர்வஹுத: – பிரபஞ்ச வேள்வியாகிய; தஸ் மாத் யஜ்ஞாத் – அந்த யாகத்திலிருந்து; ரிச: – ரிக் வேத மந்திரங்களும்; ஸாமானி – சாம வேத மந்திரங்களும்; ஜஜ்ஞிரே – உண்டாயின; தஸ்மாத் – அதிலிருந்து; சந்தாம்ஸி– சந்தஸ்களும்; ஜஜ்ஞிரே – உண்டாயின; தஸ்மாத் – அதிலிருந்தே; யஜு: – யஜுர்வேதம்; அஜாயத – உண்டாயிற்று.

10. பிரபஞ்ச வேள்வியாகிய அந்த யாகத்திலிருந்து ரிக் வேத மந்திரங்களும், சாம வேத மந்திரங்களும், காயத்ரீ முதலிய சந்தஸ் களும் உண்டாயின. அதிலிருந்தே யஜுர் வேதம் உண்டாயிற்று.

சந்தஸ் என்பது பாடல் அமைப்பு முறை. எழுத்துக் களின் எண்ணிக்கையை வைத்து ஏழு சந்தஸ்கள் கூறப்

படுகின்றன. காயத்ரீ சந்தஸில் 6 எழுத்துகள் இருக்கும். அதுபோல் உஷ்ணிக் – 7, அனுஷ்டுப்– 8, ப்ருஹதி– 9, பங்க்தி – 10, த்ரிஷ்டுப் – 11, ஜகதி – 12.

தஸ்மாதச்வா அஜாயந்த । யே கே சோபயாதத: ।
காவோ ஹ ஜஜ்ஞிரே தஸ்மாத் । தஸ்மாஜ்ஜாதா
அஜாவய: ॥ 11 ॥

தஸ்மாத் – அதிலிருந்தே; அச்வா: – குதிரைகள்; அஜாயந்த – தோன்றின; யே கே உபயாதத: – இரு வரிசைப் பற்கள் உடைய மிருகங்களும்; காவ: ச – பசுக்களும்; தஸ்மாத் – அதிலிருந்தே; ஜஜ்ஞிரே – தோன்றின; தஸ்மாத் – அதிலிருந்தே; அஜா: – வெள்ளாடுகளும்; ஆவய: – செம்மறியாடுகளும்; ஜாதா: – தோன்றின.

11. அதிலிருந்தே குதிரைகளும், இரு வரிசைப் பற்கள் உடைய மிருகங்களும், பசுக்களும், வெள்ளாடுகளும், செம்மறியாடுகளும் தோன்றின.

யத் புருஷம் வ்யதது: । கதிதா வ்யகல்பயன் ।
முகம் கிமஸ்ய கௌ பாஹூ । காவூரு பாதா
வுச்யேதே ॥ 12 ॥

யத் – எப்போது; புருஷம் – பிரம்மாவை; வ்யதது: – பலியிட்டார்களோ; கதிதா – எந்தெந்த

வடிவாக; வ்யகல்பயன் – ஆக்கினார்கள்; அஸ்ய – அவரது; முகம் – முகம்; கிம் – எதுவாக; ஆஸீத – ஆயிற்று; பாஹூ – கைகளாக; கௌ – எது; உச்யேதே – சொல்லப்படுகிறது; ஊரூ – தொடைகளாகவும்; பாதௌ – பாதங்களாகவும்; கௌ – எது; உச்யேதே – கூறப்படுகிறது.

12. பிரம்மாவை தேவர்கள் பலியிட்டபோது அவரை எந்தெந்த வடிவாக ஆக்கினார்கள்? அவரது முகம் எதுவாக ஆயிற்று? கைகளாக எது சொல்லப்படுகிறது? தொடைகளாகவும் பாதங்களாகவும் எது கூறப்படுகிறது?

ப்ராஹ்மணோ஽ஸ்ய முகமாஸீத் | பாஹூ ராஜன்ய: க்ருத: | ஊரூ தததஸ்ய யத்வைச்ய: | பத்ப்யாக்ம் சூத்ரோ அஜாயத || 13 ||

அஸ்ய – அவரது; முகம் – முகம்; ப்ராஹ்மண: – பிராமணனாக; ஆஸீத் – ஆயிற்று; பாஹூ – கைகள்; ராஜன்ய: – க்ஷத்திரியனாக; க்ருத: – செய்யப்பட்டன; அஸ்ய – அவரது; ஊரூ – தொடைகள்; யத் – எவையோ; தத் – அவை; வைச்ய: – வைசியனாக ஆயின; பத்ப்யாம் – பாதங்களிலிருந்து; சூத்ர: – சூத்திரன்; அஜாயத – தோன்றினான்.

13. அவரது முகம் பிராமணனாக ஆயிற்று, கைகள் க்ஷத்திரியனாக ஆயின, தொடைகள் வைசியனாக ஆயின, அவரது பாதங்களிலிருந்து சூத்திரன் தோன்றினான்.

சந்த்ரமா மனஸோ ஜாத: | சக்ஷோ: ஸூர்யோ அஜாயத | முகாதிந்த்ரச் சாக்னிச்ச | ப்ராணாத்வாயு-ரஜாயத || 14 ||

மனஸ: – மனத்திலிருந்து; சந்த்ரமா: – சந்திரன்; ஜாத: – தோன்றினான்; சக்ஷோ: – கண்ணிலிருந்து; ஸூர்ய: – சூரியன்; அஜாயத – தோன்றினான்; முகாத் – முகத்திலிருந்து; இந்த்ர: ச – இந்திரனும்; அக்னி: ச – அக்கினியும் தோன்றினர்; ப்ராணாத் – பிராணனிலிருந்து; வாயு: – வாயு; அஜாயத – உண்டாயிற்று.

14. மனத்திலிருந்து சந்திரன் தோன்றினான். கண்ணிலிருந்து சூரியன் தோன்றினான். முகத்திலிருந்து இந்திரனும் அக்கினியும் தோன்றினர். பிராணனிலிருந்து வாயு உண்டாயிற்று.

நாப்யா ஆஸீதந்தரிக்ஷம் | சீர்ஷ்ணோ த்யௌ: ஸமவர்த்தத | பத்ப்யாம் பூமிர் திச: ச்ரோத்ராத் | ததா லோகாக்ம் அகல்பயன் || 15 ||

நாப்யா: – தொப்புளிலிருந்து; அந்தரிக்ஷம் – வானவெளி; ஆஸீத் – தோன்றிற்று; சீர்ஷ்ண: – தலையிலிருந்து; த்யௌ: – சொர்க்கம்; ஸமவர்த்தத – தோன்றியது; பத்ப்யாம் – பாதங்களிலிருந்து; பூமி: –

பூமி; ச்ரோத்ராத் – காதிலிருந்து; திச: – திசைகள்; ததா – அவ்வாறே; லோகான் – எல்லா உலகங்களும்; அகல்பயன் – உருவாக்கப்பட்டன.

15. தொப்புளிலிருந்து வானவெளி தோன்றிற்று. தலையிலிருந்து சொர்க்கம் தோன்றியது. பாதங்களிலிருந்து பூமியும் காதிலிருந்து திசைகளும் தோன்றின. அவ்வாறே எல்லா உலகங்களும் உருவாக்கப்பட்டன.

எந்த இறைவன் ஆயிரம் தலைகள் உடையவர் என்றெல்லாம் கூறப்பட்டாரோ, யார் தம்மையே வேள்விப் பொருளாக்கி இந்த உலகை நாம் வாழ்வதற்காக அமைத்துத் தந்துள்ளாரோ அந்த இறைவனுக்கும் நமக்கும் உள்ள உறவு என்ன? இந்த உலகைப் பெற்ற நாம் செய்ய வேண்டியது என்ன? அவரை அறிவதுதான்.

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் | ஆதித்ய வர்ணம் தமஸஸ்து பாரே | ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர: | நாமானி க்ருத்வாऽபிவதன், யதாஸ்தே || 16 ||

ஸர்வாணி – எல்லா; ரூபாணி – உருவங்களையும்; விசித்ய – தோற்றுவித்து; நாமானி – பெயர்களையும்; க்ருத்வா – அமைத்து; யத் – எந்த; தீர: – இறைவன்; அபிவதன் ஆஸ்தே – செயல்பட்டுக் கொண்டிருக்கிறாரோ; மஹாந்தம் – மகிமை பொருந்தியவரும்;

*ஆதித்ய வர்ணம் – சூரியனைப்போல் ஒளிர்பவரும்; தமஸ: து – இருளுக்கு; பாரே – அப்பாற்பட்டவரு மான; தம் புருஷம் – அந்த இறைவனை; அஹம் – நான்; வேத – அறிவேன்.*

16. எல்லா உருவங்களையும் தோற்றுவித்து, பெயர் களையும் அமைத்து, எந்த இறைவன் செயல்பட்டுக் கொண்டி ருக்கிறாரோ, மகிமை பொருந்தியவரும் சூரியனைப்போல் ஒளிர் பவரும் இருளுக்கு அப்பாற்பட்டவருமான அந்த இறைவனை நான் அறிவேன்.

'அந்த இறைவனை நான் அறிவேன்' என்று ரிஷி கூறுவதை 'அந்த இறைவனை நான் அறிய வேண்டும்' என்று எடுத்துக்கொண்டு நாம் செயல்பட வேண்டும். ஏனெனில் 'நிறைநிலை அடைந்த முனிவர்கள் தங்கள் வாழ்வில் வெளிப்படுத்திய உண்மையை நாம் சாதனை யாக, பயிற்சியாகச் செய்ய வேண்டும். அப்போது அந்த உண்மையை நாமும் அடைய முடியும்'[1] என்றே மகான்கள் கூறியுள்ளனர். அதுதான் நாம் செய்யத் தக்கது.

*அப்படி அந்த இறைவனை அறிவதால், அடைவ தால் என்ன கிடைக்கும்?*

தாதா புரஸ்தாத்யமுதாஜஹார | சக்ர: ப்ரவித்வான் ப்ரதிசச்சதஸ்ர: | தமேவம் வித்வானம்ருத இஹ பவதி | நான்ய: பந்தா அயனாய வித்யதே || 17 ||

---

1. பகவத்கீதை, 2. 55 முன்னுரையில் ஸ்ரீசங்கரர்.

யம் – எந்த இறைவனை; தாதா – பிரம்மா; புரஸ்தாத் – ஆதியில்; உதாஜஹார – பரமாத்மா என்று கண்டு கூறினாரோ; சக்ர: – இந்திரன்; ப்ரதிச: சதஸ்ர: – நான்கு திசைகளிலும் எங்கும்; ப்ரவித்வான் – நன்றாகக்கண்டானோ; தம் – அவரை; ஏவம் – இவ்வாறு; வித்வான் – அறிபவன்; இஹ – இங்கேயே; அம்ருத: – முக்தனாக; பவதி – ஆகிறான்; அயனாய – மோட்சத்திற்கு; அன்ய: – வேறு; பந்தா: – வழி; ந வித்யதே – இல்லை.

17. எந்த இறைவனை பிரம்மா ஆதியில் பரமாத்மா என்று கண்டு கூறினாரோ, இந்திரன் நான்கு திசைகளிலும் எங்கும் நன்றாகக் கண்டானோ அவரை இவ்வாறு அறிபவன் இங்கேயே அதாவது இந்தப் பிறவியிலேயே முக்தனாக ஆகிறான். மோட்சத்திற்கு வேறு வழி இல்லை.

யஜ்ஞேன யஜ்ஞம்யஜந்த தேவா: | தானி தர்மாணி ப்ரதமான்யாஸன் | தே ஹ நாகம் மஹிமான: ஸசந்தே | யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா: || 18 ||

தேவா: – தேவர்கள்; யஜ்ஞேன – இந்த வேள்வியால்; யஜ்ஞம் – இறைவனை; அயஜந்த – வழிபட்டார்கள்; தானி – அவை; ப்ரதமானி – முதன்மையான; தர்மாணி – தர்மங்கள்; ஆஸன் – ஆயின; யத்ர – எங்கே; பூர்வே – ஆரம்பத்தில்; ஸாத்யா: – சாத்தியர்களும்; தேவா: – தேவர்களும்; ஸந்தி – இருக்கிறார்களோ; நாகம் –

*மேலான உலகை; தே மஹிமான: – அந்த மகான்கள்; ஸசந்தே – அடைவார்கள்.*

18. தேவர்கள் இந்த வேள்வியால் இறைவனை வழி பட்டார்கள். அவை முதன்மையான தர்மங்கள் ஆயின. எங்கே ஆரம்பத்தில் வேள்வியால் இறைவனை வழிபட்ட சாத்தியர்களும் தேவர்களும் இருக்கிறார்களோ, தர்மங்களைக் கடைப்பிடிக்கின்ற மகான்கள் அந்த மேலான உலகை அடைவார்கள்.

தேவர்கள் இந்த மாபெரும் பிரபஞ்ச வேள்வியைச் செய்ததால் மேலான உலகை அடைந்தார்கள். இந்த வேள்வியைச் செய்பவர்களும் அந்த உலகை அடைவார்கள். இந்த வேள்வியைச் செய்வது முதன்மையான தர்மம் என்றும், இதைச் செய்பவர்கள் மகான்கள் என்று சிறப்பித்துப் பேசப்படுவதையும் கவனத்தில் கொள்வது இன்றியமையாதது.

இதுவரை கண்ட 18 மந்திரங்களுடன் புருஷ ஸூக்தம் நிறைவுறுகிறது. ஆனால் தென்னாட்டில் பொதுவாக புருஷ ஸூக்தத்தை உத்தர நாராயணம், நாராயண ஸூக்தம், விஷ்ணு ஸூக்தத்தின் முதல் மந்திரம் இவற்றுடன் சேர்த்தே பாராயணம் செய்கிறார்கள். எனவே அவை தொடர்ச்சியாக தரப்படுகின்றன.

உத்தர நாராயணப் பகுதி புருஷ ஸூக்தக் கருத்தையே சுருக்கமாகத் தருகிறது.

அத்ப்ய: ஸம்பூத: ப்ருதிவ்யை ரஸாச்ச | விச்வ

கர்மண: ஸமவர்த்ததாதி | தஸ்ய த்வஷ்டா விதத்ரூப

மேதி | தத் புருஷஸ்ய விச்வமாஜானமக்ரே || 19 ||

அத்ப்ய: – தண்ணீரிலிருந்தும்; ப்ருதிவ்யை – பூமியின்; ரஸாத் – சாரமான அம்சத்திலிருந்தும்; ஸம்பூத: – பிரபஞ்சம் உண்டாயிற்று; விச்வ கர்மண: – பிரபஞ்சத்தை உருவாக்கிய இறைவனிடமிருந்து; அதி – சிறந்தவர்; ஸமவர்த்தத – தோன்றினார்; த்வஷ்ட்டா – இறைவன்; தஸ்ய – அந்த பிரம்மாவின்; ரூபம் – உருவை; விதத் – உருவாக்கி; ஏதி – வியாபித்திருக்கிறார்; தத் – அந்த; புருஷஸ்ய – பிரம்மாவின்; விச்வம் – இந்தப் பிரபஞ்ச வடிவம்; அக்ரே – தொடக்கத்தில்; ஆஜானம் – உண்டாயிற்று.

19. தண்ணீரிலிருந்தும் சாரமான அம்சத்திலிருந்தும் பிரபஞ்சம் உண்டாயிற்று. பிரபஞ்சத்தை உருவாக்கிய இறைவனிடமிருந்து சிறந்தவரான பிரம்மா தோன்றினார். இறைவன் அந்த பிரம்மாவின் (பதினான்கு உலகங்களும் நிறைந்ததான) உருவை உருவாக்கி அதில் வியாபித்திருக்கிறார். பிரம்மாவின் இந்தப் பிரபஞ்ச வடிவம் படைப்பின் தொடக்கத்தில் உண்டாயிற்று.

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் | ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் | தமேவம் வித்வானம்ருத இஹ பவதி | நான்ய: பந்தா வித்யதேऽயனாய || 20 ||

மஹாந்தம் – மகிமை பொருந்தியவரும்; ஆதித்ய வர்ணம் – சூரியனைப்போல் ஒளிர்பவரும்; தமஸ: – இருளுக்கு; பரஸ்தாத் – அப்பால் இருப்பவருமாகிய; ஏதம் – இந்த; புருஷம் – இறைவனை; அஹம் – நான்;

வேத – அறிவேன்; தம் – அவரை; ஏவம் – இவ்வாறு; வித்வான் – அறிபவன்; இஹ – இங்கே ; முக்த: – முக்தனாக; பவதி – ஆகிறான்; அயனாய – முக்திக்கு; அன்ய: – வேறு; பந்தா: – வழி; ந வித்யதே – இல்லை.

20. மகிமை பொருந்தியவரும், சூரியனைப்போல் ஒளிர்ப வரும், இருளுக்கு அப்பால் இருப்பவருமாகிய இந்த இறைவனை நான் அறிவேன். அவரை இவ்வாறு அறிபவன் இங்கே இந்தப் பிறவியிலேயே முக்தனாக ஆகிறான். முக்திக்கு வேறு வழி இல்லை.

*ஒருவன் முக்தியை, இறையனுபூதியை ஏன் நாட வேண்டும்?*

ப்ரஜாபதிச்சரதி கர்பே அந்த: । அஜாயமானோ

பஹுதா விஜாயதே । தஸ்ய தீரா: பரிஜானந்தி யோனிம் ।

மரீசீனாம் பதமிச்சந்தி வேதஸ: ॥ 21 ॥

ப்ரஜாபதி: – இறைவன்; கர்பே அந்த: – பிரபஞ்சத் தின் உள்ளே; சரதி – செயல்படுகிறார்; அஜாயமான: – பிறக்காதவராக இருந்தும்; பஹுதா – பல்வேறு வடிவங்களில்; விஜாயதே – தோன்றுகிறார்; தஸ்ய – அவரது; யோனிம் – உண்மையான வடிவத்தை; தீரா: – மகான்கள்; பரிஜானந்தி – நன்றாக அறி கிறார்கள்; வேதஸ: – பிரம்மா போன்றோர்; மரிசீனாம் – மரீசி முதலிய மகான்களின்; பதம் – பதவியை; இச்சந்தி – விரும்புகிறார்கள்.

21. இறைவன் பிரபஞ்சத்தில் செயல்படுகிறார். பிறக்காத வராக இருந்தும் அவர் பல்வேறு வடிவங்களில் தோன்றுகிறார். அவரது உண்மையான வடிவத்தை மகான்கள் நன்றாக அறிகிறார்கள். பிரம்மா போன்றோர்கூட மரீசி முதலிய மகான் களின் பதவியை விரும்புகிறார்கள்.

இறையனுபூதியின் சிறப்பு இங்கே பேசப்படுகிறது. மனிதன் அடையக்கூடிய பதவிகளில் மிக உயர்ந்தது பிரம்மாவின் பதவி. கோடிக்கணக்கான ஆண்டுகள் நீடிப்பதாக இருந்தாலும் மகா பிரளயத்தின்போது, அதாவது இந்தப் படைப்பு ஒடுங்கும்போது அவரது பதவிக்காலமும் முடிந்துவிடும். ஆனால் இறையனுபூதி பெற்ற, முக்தி பெற்ற மகான்களின் நிலை அப்படியல்ல. ப்ரஹ்மவித்ப்ரஹ்மைவ பவதி— பரம்பொருளை அறிந்தவன் பரம்பொருளாகவே ஆகிறான். அவனுக்கு மரணம் இல்லை, அழிவு இல்லை. அதனால்தான் பிரம்மா போன்ற தேவர்களும்கூட பூமியில் முனிவர் களாக ஆக விரும்புகிறார்கள். எனவே மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் இறைவனை நாட வேண்டும். அதுதான் போற்றத்தக்க செயல்.

யோ தேவேப்ய ஆதபதி। யோ தேவானாம் புரோஹித:। பூர்வோ யோ தேவேப்யோ ஜாத:। நமோ ருசாய ப்ராஹ்மயே ॥ 22 ॥

*ய: – யார்; தேவேப்ய: – தேவர்களிடம்; ஆதபதி – தேஜஸாக விளங்குகிறாரோ; ய: – யார்; தேவானாம் – தேவர்களின்; புரோஹித: – குருவாக இருக்கிறாரோ;*

*ய:* – *யார்;* தேவேப்ய: – *தேவர்களுக்கும்;* பூர்வ: – *முன்பே;* ஜாத: – *தோன்றியவரோ;* ருசாய – *ஒளிமயமான;* ப்ராஹ்மயே – *பரம்பொருளுக்கு;* நம: – *நமஸ்காரம்.*

22. யார் தேவர்களிடம் தேஜஸாக விளங்குகிறாரோ, தேவர்களின் குருவாக இருக்கிறாரோ, தேவர்களுக்கு முன்பே தோன்றியவரோ அந்த ஒளிமயமான பரம்பொருளுக்கு நமஸ்காரம்.

ருசம் ப்ராஹ்மம் ஜனயந்த:। தேவா அக்ரே

ததப்ருவன்। யஸ்த்வைவம் ப்ராஹ்மணோ வித்யாத்।

தஸ்ய தேவா அஸன் வசே ॥ 23 ॥

ப்ராஹ்மம் – *பரம்பொருளைப்பற்றிய;* ருசம் – *உண்மையை;* ஜனயந்த: – *அளிக்கும்போது;* தேவா: – *தேவர்கள்;* அக்ரே – *ஆதியில்;* தத் – *அதைப்பற்றி;* அப்ருவன் – *கூறினார்கள்;* ய: து – *யாராக இருந்தாலும்;* ப்ராஹ்மண: – *பரம்பொருளை நாடுபவன்;* ஏவம் – *இவ்வாறு;* வித்யாத் – *அறிவானானால்;* தஸ்ய – *அவனுக்கு;* தேவா: – *தேவர்கள்;* வசே – *வசமாக;* அஸன் – *இருப்பார்கள்.*

23. பரம்பொருளைப்பற்றிய உண்மையை அளிக்கும் போது தேவர்கள் ஆதியில் அதைப்பற்றி பின்வருமாறு கூறினார்கள்: 'யாராக இருந்தாலும் பரம்பொருளை நாடுபவன் இவ்வாறு அறிவானானால் அவனுக்கு தேவர்கள் வசமாக இருப்பார்கள்.'

ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ன்யௌ । அஹோராத்ரே பார்ச்வே । நக்ஷத்ராணி ரூபம் । அச்விநௌ வ்யாத்தம் ॥ 24 ॥

ஹ்ரீ: ச – ஹ்ரீ தேவியும்; லக்ஷ்மீ: ச – லட்சுமி தேவியும்; தே – உமது; பத்ன்யௌ – மனைவியர்; அஹோராத்ரே – பகலும் இரவும்; பார்ச்வே – உமது பக்கங்கள்; நக்ஷத்ராணி – நட்சத்திரங்கள்; ரூபம் – திருவுருவம்; அச்விநௌ – அசுவினி தேவர்கள்; வ்யாத்தம் – மலர்ந்த திருவாய்.

24. நாணத்தின் தலைவியாகிய ஹ்ரீ தேவியும், செல்வத்தின் தலைவியாகிய லட்சுமி தேவியும் உமது மனைவியர். பகலும் இரவும் உமது பக்கங்கள், நட்சத்திரங்கள் உமது திருவுருவம், அசுவினி தேவர்கள் உமது மலர்ந்த திருவாய்.

பகலும் இரவும் என்பவை காலம் ஆகும். எப்படி ஓர் உடம்பை அதன் பக்கங்கள் தாங்குகின்றனவோ, அப்படி படைப்பிற்கு காலம் ஆதாரமாக இருக்கிறது. நட்சத்திரங்கள் என்பது படைப்பைக் குறிக்கிறது. நாம் காண்கின்ற இந்தப் படைப்பு இறைவனின் ஒரு பகுதி மட்டுமே, பெரும் பகுதி மேலுலகில் உள்ளது என்று இதே ஸூக்தத்தில் (3) கண்டோம். காணும் படைப்பே இவ்வளவு மகிமை பொருந்தியதாக, எல்லை காண முடியாததாக இருக்கும்போது இந்தப் படைப்பின் சிற்பியான இறைவனின் மகிமை எவ்வளவு மகோன்னதமாக

இருக்கும் என்று சிந்தித்து நாம் அவரது மகிமையில் ஆழ்வதற்காகவே படைப்பு அவரது உருவம் என்று கூறப்படுகிறது. நட்சத்திரம், சூரியன், சந்திரன், கடல், மலை, மரம் என்று படைப்பின் ஒவ்வோர் அம்சமும், நமக்கு அதன் பின்னின்று இயக்கும் பேரொளிப் பொருளை நினைவூட்ட வேண்டும்.

இஷ்ட்டம் மனிஷாண | அமும் மனிஷாண | ஸர்வம் மனிஷாண || 25 ||

ஓம் தச்சம் யோ ராவ்ருணீமஹே |....

இஷ்ட்டம் – *நாங்கள் விரும்புவதை;* மனிஷாண – *கொடுத்தருள்வாய்;* அமும் – *இவ்வுலக இன்பத்தை;* மனிஷாண – *கொடுத்தருள்வாய்;* ஸர்வம் – *அனைத்தையும்;* மனிஷாண – *தந்தருள்வாய்.*

25. எம்பெருமானே! நாங்கள் விரும்புவதைக் கொடுத்தருள்வாய். இவ்வுலக இன்பத்தைக் கொடுத்தருள்வாய், இகத்திலும் பரத்திலும் அனைத்தையும் தந்தருள்வாய்!



# ६. नारायण सूक्तम्

तैत्तिरीयारण्यकम्, 4.10.13

ॐ सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै ।

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ॐ ॥ सहस्रशीर्षं देवं विश्वाक्षं विश्वशम्भुवम् । विश्वं नारायणं देवमक्षरं परमं पदम् । विश्वतः परमान्नित्यं विश्वं नारायणग्ं हरिम् । विश्वमेवेदं पुरुषस्तद्विश्वमुपजीवति । पतिं विश्वस्यात्मेश्वरग्ं शाश्वतग्ं शिवमच्युतम् । नारायणं महाज्ञेयं विश्वात्मानं परायणम् ॥ १-३ ॥

नारायणपरो ज्योतिरात्मा नारायणः परः । नारायणपरं ब्रह्म तत्त्वं नारायणः परः । नारायणपरो ध्याता ध्यानं नारायणः परः । यच्च किञ्चिज्जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा ।

अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः ॥ अनन्तमव्ययं कविग्ं समुद्रेऽन्तं विश्वशम्भुवम् । पद्मकोशप्रतीकाशग्ं हृदयं चाप्यधोमुखम् ॥ ४-६ ॥

अधो निष्ट्या वितस्त्यान्ते नाभ्यामुपरि तिष्ठति । ज्वालमालाकुलं भाती विश्वस्यायतनं महत् । सन्ततग्ं शिलाभिस्तु लम्बत्याकोशसन्निभम् । तस्यान्ते सुषिरग्ं सूक्ष्मं तस्मिन् सर्वं प्रतिष्ठितम् । तस्य मध्ये महानग्निर्विश्वार्चिर्विश्वतोमुखः । सोऽग्रभुग्विभजन्तिष्ठन्नाहारमजरः कविः ॥ ७-९ ॥

तिर्यगूर्ध्वमधश्शायीरश्मयस्तस्य सन्तता । सन्तापयति स्वं देहमापादतलमस्तकः । तस्य मध्ये वह्निशिखा अणीयोर्ध्वा व्यवस्थितः । नीलतोयदमध्यस्थाद्विद्युल्लेखेव भास्वरा । नीवारशूकवत्तन्वी पीता भास्वत्यणूपमा ॥ तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः । स ब्रह्म स शिवः स हरिः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट् ॥ १०-१२ ॥

# ६. नारायण सूक्तम्

तैत्तिरीयारण्यकम्, 4.10.13

ॐ सह नाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै ।

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ॐ ॥ सहस्रशीर्षं देवं विश्वाक्षं विश्वशम्भुवम् । विश्वं नारायणं देवमक्षरं परमं पदम् । विश्वतः परमान्नित्यं विश्वं नारायणग्ं हरिम् । विश्वमेवेदं पुरुषस्तद्विश्वमुपजीवति । पतिं विश्वस्यात्मेश्वरग्ं शाश्वतग्ं शिवमच्युतम् । नारायणं महाज्ञेयं विश्वात्मानं परायणम् ॥ १-३ ॥

नारायणपरो ज्योतिरात्मा नारायणः परः । नारायणपरं ब्रह्म तत्त्वं नारायणः परः । नारायणपरो ध्याता ध्यानं नारायणः परः । यच्च किञ्चिज्जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा ।

अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः ॥ अनन्तमव्ययं कविग्ं समुद्रेऽन्तं विश्वशम्भुवम् । पद्मकोशप्रतीकाशग्ं हृदयं चाप्यधोमुखम् ॥ ४-६ ॥

अधो निष्ट्या वितस्त्यान्ते नाभ्यामुपरि तिष्ठति । ज्वालमालाकुलं भाती विश्वस्यायतनं महत् । सन्ततग्ं शिलाभिस्तु लम्बत्याकोशसन्निभम् । तस्यान्ते सुषिरग्ं सूक्ष्मं तस्मिन् सर्वं प्रतिष्ठितम् । तस्य मध्ये महानग्निर्विश्वार्चिर्विश्वतोमुखः । सोऽग्र-भुग्विभजन्तिष्ठन्नाहारमजरः कविः ॥ ७-९ ॥

तिर्यगूर्ध्वमधश्शायीरश्मयस्तस्य सन्तता । सन्तापयति स्वं देहमापादतलमस्तकः । तस्य मध्ये वह्निशिखा अणीयोर्ध्वा व्यवस्थितः । नीलतोयदमध्यस्थाद्विद्युल्लेखेव भास्वरा । नीवारशूकवत्तन्वी पीता भास्वत्यणूपमा ॥ तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः । स ब्रह्म स शिवः स हरिः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट् ॥ १०-१२ ॥

ऋतग्ं सत्यं परं ब्रह्म पुरुषं कृष्णपिङ्गलम् । ऊर्ध्वरेतं विरूपाक्षं विश्वरूपाय वै नमो नमः ॥ १३ ॥

ॐ नारायणाय विद्महे वासुदेवाय धीमहि । तन्नो विष्णुः प्रचोदयात् ॥

ॐ सह नाववतु.....

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 6. நாராயண ஸூக்தம்

*தைத்திரீய ஆரண்யகம், 4.10.13*

பொதுவாக இது புருஷ ஸூக்தத்துடன் பாராயணம் செய்யப்படுகிறது. தியானத்தின் செயல்முறையை விளக்குகின்ற ஸூக்தம் இது. தியானம் செய்வதற்கு முன்பு இந்த ஸூக்தத்தை ஓதி, இதன் பொருளைச் சிந்திப்பது தியானத்தில் ஆழ்ந்து செல்ல மிகவும் உதவியாக இருக்கும்.

முதலில் இறைவனின் மகிமை பேசப்படுகிறது. பிறகு அவரை எங்கே தியானிப்பது, எப்படி தியானிப்பது என்பது கூறப்படுகிறது. படிப்படியாக தியானத்தில் எப்படி மனத்தை ஈடுபடுத்துவது என்பது இந்த ஸூக்தத்தில் அற்புதமாக விவரிக்கப்படுகிறது.

ஓம் ஸஹ நாவவது । ஸஹ நௌ புனக்து । ஸஹ வீர்யம் கரவாவஹை । தேஜஸ்விநாவதீதமஸ்து மா வித்விஷாவஹை ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

தியானம் என்பது இறைவனின் திரு சன்னிதியில் இருப்பது; ஒரு படத்தையோ உருவத்தையோ கற்பனை செய்து கொண்டிருப்பதோ, வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பதோ அல்ல. அவரது திரு சன்னிதியில் நாம் இருப்பதை உணர வேண்டும்; அவர் பேரொளியுடன் உணர்வுடனும் திகழ்வதை மனத்தளவில் காண வேண்டும். இதற்காக முதலில் அந்த தெய்வத்தின் மகிமையை முதல் ஐந்து மந்திரங்கள் கூறுகின்றன—

ஓம் ॥ ஸஹஸ்ர சீர்ஷம் தேவம் விச்வாக்ஷம் விச்வசம்புவம் । விச்வம் நாராயணம் தேவமக்ஷரம் பரமம் பதம் ॥ 1 ॥

ஸஹஸ்ர சீர்ஷம் – ஆயிரக்கணக்கான தலைகளை உடையவரும்; தேவம் – ஒளி மிக்கவரும்; விச்வாக்ஷம் – எல்லாவற்றையும் பார்ப்பவரும்; விச்வ சம்புவம் – உலகிற்கெல்லாம் மங்கலத்தைச் செய்பவரும்; விச்வம் – உலகமாக இருப்பவரும்; அக்ஷரம்–அழிவற்றவரும்; பரமம் பதம்–மேலான நிலை

ஆனவரும்; நாராயணம் தேவம் – நாராயணன் என்னும் தெய்வத்தை.

1. ஆயிரக்கணக்கான தலைகள் உடையவரும், ஒளிமிக்க வரும், எல்லாவற்றையும் பார்ப்பவரும், உலகிற்கெல்லாம் மங்கலத்தைச் செய்பவரும், உலகமாக இருப்பவரும், அழிவற்ற வரும், மேலான நிலை ஆனவரும் ஆகிய நாராயணன் என்னும் தெய்வத்தைத் தியானம் செய்கிறேன்.

விச்வத: பரமான் நித்யம் விச்வம் நாராயணக்ம் ஹரிம் । விச்வமேவேதம் புருஷஸ்தத்விச்வ – முபஜீவதி ॥ 2 ॥

விச்வத: – இந்த உலகைவிட; பரமாத் – மேலான வரும்; நித்யம் – என்றும் உள்ளவரும்; விச்வம் – உலகமாக விளங்குபவரும்; ஹரிம் – பக்தர்களின் துன்பங்களைப் போக்குபவரும்; நாராயணம் – நாராயணனை.

2. இந்த உலகைவிட மேலானவரும், என்றும் உள்ள வரும், உலகமாக விளங்குபவரும், பக்தர்களின் துன்பங்களைப் போக்குபவருமாகிய நாராயணனை தியானம் செய்கிறேன்.

பதிம் விச்வஸ்யாத்மேச்வரக்ம் சாச்வதக்ம் சிவமச்யுதம் । நாராயணம் மஹாஜ்ஞேயம் விச்வாத்-மானம் பராயணம் ॥ 3 ॥

விச்வஸ்ய – உலகிற்கு; பதிம் – நாயகரும்; ஆத்ம ஈச்வரம் – உயிர்களின் தலைவரும்; சாச்வதம் – என்றும் உள்ளவரும்; சிவம் – மங்கல வடிவினரும்; அச்யுதம் – அழிவற்றவரும்; மஹாஜ்ஞேயம் – சிறப்பாக அறியத் தக்கவரும்; விச்வ ஆத்மானம் – எல்லாவற்றிற்கும் ஆன்மாவாக இருப்பவரும்; பராயணம் – சிறந்த புகலிடமாக இருப்பவருமான; நாராயணம் – நாராயணனை.

3. உலகிற்கு நாயகரும், உயிர்களின் தலைவரும், என்றும் உள்ளவரும், மங்கல வடிவினரும், அழிவற்றவரும், சிறப்பாக அறியத் தக்கவரும், எல்லாவற்றிற்கும் ஆன்மாவாக இருப்பவரும், சிறந்த புகலிடமாக இருப்பவருமான நாராயணனை தியானம் செய்கிறேன்.

நாராயண ப்ரோ ஜ்யோதிராத்மா நாராயண: ப்ர: ।
நாராயண ப்ரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: ப்ர: ।
நாராயண ப்ரோ த்யாதா த்யானம் நாராயண: ப்ர: ॥ 4 ॥

நாராயண: பர: ஜ்யோதி: – நாராயணனே சிறந்த ஒளி; நாராயண: பர: ஆத்மா – நாராயணனே பரமாத்மா; நாராயண: பரம் ப்ரஹ்ம – நாராயணனே பரப்பிரம்மம்; நாராயண: பர: தத்வம் – நாராயணனே மேலான உண்மை.; நாராயண: பர: த்யாதா – நாராயணனே தியானம் செய்பவர்களுள் சிறந்தவர்;

நாராயண: பர: த்யானம் – *நாராயணனே சிறந்த தியானம்.*

4. நாராயணனே சிறந்த ஒளி, நாராயணனே பரமாத்மா, நாராயணனே பரப்பிரம்மம், நாராயணனே மேலான உண்மை. நாராயணனே தியானம் செய்பவர்களுள் சிறந்தவர், நாராயணனே சிறந்த தியானம்.

இவ்வளவு மகிமைகளுடன் திகழ்கின்ற இறைவன் நம்முள்ளேயே இருக்கிறார் என்பதை அடுத்த மந்திரம் கூறுகிறது.

யச்ச கிஞ்சிஜ்ஜகத் ஸர்வம் த்ருச்யதே ச்ரூயதேऽபி வா। அந்தர்பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித: ‖ 5 ‖

ஜகத் ஸர்வம் – *உலகம் முழுவதிலும்;* யச்ச கிஞ்சித் த்ருச்யதே – *காணப்படுவது எதுவாயினும்;* அபிவா – *அல்லது;* ச்ரூயதே – *கேட்கப்படுவது எதுவாயினும்;* தத் ஸர்வம் – *அவை அனைத்தையும்;* அந்த: – *உள்ளும்;* பஹி: ச – *புறமும்;* வ்யாப்ய – *வியாபித்தபடி;* நாராயண: – *நாராயணன்;* ஸ்தித: – *இருக்கிறார்.*

5. உலகம் முழுவதிலும் காணப்படுவது எதுவாயினும் கேட்கப்படுவது எதுவாயினும் அவை அனைத்தையும் உள்ளும் புறமும் வியாபித்தபடி நாராயணன் இருக்கிறார்.

இது தியானத்தின் அடுத்த படி. முதலில் மனம் எல்லையற்று பரந்த தெய்வத்தை நினைப்பதில்

ஈடுபட்டது. இப்போது அதன் எல்லை சுருக்கப்படுகிறது. பரந்திருந்திருந்த மனம் நம்மில் ஒன்று சேர்க்கப் படுகிறது.

*தியானத்தின் இறுதிப்படியாக, மனம் இதயத்தில் குவிக்கப்படுவதுபற்றி இந்த மந்திரம் கூறுகிறது—*

அனந்தமவ்யயம் கவிக்ம் ஸமுத்ரேऽந்தம் விச்வ

சம்புவம் | பத்மகோச ப்ர்தீகாசக்ம் ஹ்ருதய்ம் சாப்யதோ

முகம் || 6 ||

அனந்தம் – *முடிவற்றவரும்;* அவ்யயம் – *அழிவற்றவரும்;* கவிம் – *அனைத்தும் அறிந்தவரும்;* ஸமுத்ரே – *சம்சாரப் பெருங்கடலின்;* அந்தம் – *இறுதியில் இருப்பவரும்;* விச்வ சம்புவம் – *உலகிற்கெல்லாம் மங்கலத்தைச் செய்பவரும்;* ஹ்ருதயம் ச அபி – *இதயம்;* அதோமுகம் – *கீழ் நோக்கிய;* பத்மகோச ப்ரதீகாசம் – *தாமரை மொட்டுபோல்.*

6. முடிவற்றவரும், அழிவற்றவரும், அனைத்தும் அறிந்தவரும், சம்சாரப் பெருங்கடலின் இறுதியில் இருப்பவரும், உலகிற்கெல்லாம் மங்கலத்தைச் செய்பவரும் ஆகிய நாராயணனை கீழ் நோக்கிய தாமரை மொட்டுபோல் இருக்கின்ற இதயத்தில் தியானம் செய்கிறேன்.

'ஸமுத்ரே அந்தம்' என்ற வார்த்தை இங்கே கவனிக்கத் தக்கது. சம்சாரப் பெருங்கடலின் இறுதியில் இருப்பவராக இறைவன் கூறப்படுகிறார். ஆசைகள்,

உணர்ச்சி வேகங்கள் போன்ற அலைகள் கொந்தளிக்கின்ற வாழ்க்கையே சம்சாரப் பெருங்கடல் என்று கூறப்படு கிறது. ஆசைகளும் உணர்ச்சிகளும் கொந்தளிக்கும் வரை தியானத்தின் மூலம் இறைவனை நெருங்க முடியாது. ஆசைகள் அடங்கி, மனம் அமைதியுற்றால் தான் தியானம் கைகூடும்.[1]

இதயத்தின் இருப்பிடம் கூறப்படுகிறது—

அதோ நிஷ்ட்ட்யா விதஸ்த்யாந்தே நாப்யாமுபரி திஷ்ட்டதி। ஜ்வாலமாலாகுலம் பாதீ விச்வஸ்யாயதனம் மஹத் ॥ 7 ॥

நிஷ்ட்ட்யா–குரல்வளைக்கு; அத: –கீழே; நாப்யாம் – தொப்புளுக்கு; உபரி – மேலே; விதஸ்த்யா: அந்தே – ஒரு சாண் தூரத்தில்; திஷ்ட்டதி – இருக்கிறது;

---

1. அப்படியானால் ஆசைகள் அடங்கப் பெற்றவர்கள்தான் தியானம் செய்ய முடியுமா? ஆம். இங்கே நாம் நினைவில் கொள்ளக்கூடிய ஒன்று உண்டு. இறைவனைப் பெறுவதற்காக, இறையனுபூதி பெறுவதற்காகச் செய்யப்படுகின்ற தியானம் உயர்வகையைச் சேர்ந்தது. பொதுவாக தியானம் என்ற பெயரில் இன்று பரவலாகப் பேசப்படுவதும், கற்பிக்கப் படுவதும் சாதாரணமானது. இது வெறும் மன ஒருமைப்பாடு மட்டுமே. இதன் நோக்கம் மன அழுத்தம் (Mental Tension), மன இறுக்கம் (Stress) போன்றவற்றிலிருந்து விடுபட்டு அமைதியான வாழ்க்கை வாழ்வ தாகும். இந்த இரண்டுவகை தியானங்கள் பற்றிய விரிவான விளக்கத்திற்கு எமது மடத்திலிருந்து வெளிவந்துள்ள 'தியானம்' (ஆசிரியர்: சுவாமி பஜனானந்தர்) பார்க்க.

விச்வஸ்ய – உலகிற்கெல்லாம்; மஹத் – சிறந்த; ஆயதனம் – உறைவிடம்; ஜ்வாலமாலாகுலம் – சுடர் வரிசையால் சூழப்பட்டாற்போல்; பாதீ – பிரகாசிக்கிறது.

7. குரல்வளைக்குக் (Adam's Apple) கீழே தொப்புளுக்கு மேலே ஒரு சாண் தூரத்தில் இதயம் இருக்கிறது. உலகிற்கெல்லாம் சிறந்த அந்த உறைவிடம் சுடர்வரிசையால் சூழப்பட்டாற் போல் பிரகாசிக்கிறது.

இதயத்தைப்பற்றி பேசப்படுகிறது. 'லப்டப்' என்று துடித்துக் கொண்டிருக்கின்ற பௌதீக இதயம் அல்ல இது. பௌதீக இதயம் என்றால் இடத்தைக் குறிப்பிட்டுச் சொல்லியிருக்க வேண்டிய தேவையில்லை, அது இருப் பது எல்லோருக்கும் தெரியும். இது ஆன்மீக இதயம். இதற்கு மூன்று அடையாளங்கள். ஒன்று, தொப்புளுக்கு மேலே ஒரு சாண் தூரத்தில் உள்ளது. பௌதீக இதயமும் அதே தூரத்தில்தான் உள்ளது, ஆனால் அது சற்று இடது புறம் உள்ளது. ஆனால் ஆன்மீக இதயம் நடுவில் உள்ளது. இரண்டு, சுடர் வரிசையால் சூழப்பட்டுள்ளது. மூன்று, அந்த இதயமும் பிரகாசிக்கிறது. இந்த மூன்று அடை யாளங்களும் பௌதீக இதயத்திற்குப் பொருந்தாது. ஆனால் இதனை நாம் உணர்வதில்லையே! உணர்வ தில்லை, ஆனாலும் அது அங்கே உள்ளது.

'இதயத்தில் தியானிக்க வேண்டும் என்று தெரிந்ததும், இந்தத் தூல இதயம் இருக்கும் பகுதியில் மனத்தைக் குவிக்க முயற்சிக்கிறார்கள் பலர். ஆனால் இது கடைசிவரை வெறும் முயற்சியாக இருக்குமே தவிர தியானத்தில் வெற்றி கிடைக்காது. ஏனெனில் தியானம் மனம் சம்பந்தப்பட்டது. நாம் தியானிக்க வேண்டியது

ஆன்மீக இதயத்தில் அல்லது இதயத் தாமரையில். அங்கு மட்டுமே உண்மையாக தியானிக்க முடியும். மிகப் பெரும்பாலோரிடம் இந்த ஆன்மீக இதயம் மலராமல் அரும்பாகவே உள்ளது. முதலில் அதை மலரச் செய்ய வேண்டும். அதற்கு ஜபம், பிரார்த்தனை, போன்ற சாதனைகள் தேவை. இந்த ஆன்மீக மையத்தைக் கண்டு பிடிக்கும் வரையில் தியான வேளையில் அவனது மனம் அலைந்து கொண்டுதான் இருக்கும். அவனைப் பொறுத்த வரையில் தியானம் என்பது வெறும் மனப் போராட்ட மாகவே இருக்கும்' என்று எழுதுகிறார் சுவாமி பஜனானந்தர்.[1]

இந்த இதயத்தின் உள்ளே உள்ளது ஓர் ஆகாசம்—

ஸந்ததக்ம் ஸிலாபிஸ்து லம்பத்யாகோஸ

ஸன்னிபம் । தஸ்யாந்தே ஸுஷிரக்ம் ஸூக்ஷ்மம்

தஸ்மின் ஸர்வம் ப்ரதிஷ்ட்டிதம் ॥ 8 ॥

ஆகோச ஸன்னிபம் – *தாமரை மொட்டுப் போன்ற இதயம்;* ஸந்ததம் – *நாற்புறங்களிலும்;* ஸிலாபி: – *நாடிகளால்;* லம்பதி – *தொங்குகிறது;* தஸ்ய – *அதன்;* அந்தே – *உள்ளே;* ஸூக்ஷ்மம் – *நுண்ணிய;* ஸுஷிரம் – *ஆகாசம்;* ஸர்வம் – *அனைத்தும்;* தஸ்மின் – *அதில்;* ப்ரதிஷ்ட்டிதம் – *நிலை பெற்றுள்ளன.*

---

1. *தியானம், 13.*

8. தாமரை மொட்டுப் போன்ற இதயம் நாற்புறங்களிலும் நாடிகளால் சூழப்பட்டு தொங்குகிறது. அதன் உள்ளே நுண்ணிய ஆகாசம் உள்ளது. அனைத்தும் அதில் நிலை பெற்றுள்ளன.

சாந்தோக்கிய உபநிஷதம் *(8.1.1)* இதனை மிக அழகாகக் கூறுகிறது: 'இந்த உடம்பினுள் தாமரை போன்ற சிறு மாளிகை உள்ளது. அதனுள் அக ஆகாசம் உள்ளது. அதில் இருப்பதைத் தேட வேண்டும்.'

'(புறத்தில் காணப்படுகின்ற) ஆகாசம் எவ்வளவு பெரியதோ இதயத்தின் உள்ளே உள்ள ஆகாசமும் அவ்வளவு பெரியது. வானுலகும் பூவுலகும் இதனுள் அடங்கும். அக்கினி, வாயு, சந்திரன், சூரியன், மின்னல், நட்சத்திரங்கள் இன்னும் இந்த உலகில் என்னென்ன உண்டோ என்னென்ன இல்லையோ அவையெல்லாம் இதனுள் உள்ளன' என்று இந்த ஆகாசத்தைப்பற்றி சாந்தோக்கிய உபநிஷதம் *(8.1.3)* கூறுகிறது.

*ஆகாசத்தினுள் பிராணன் அல்லது உயிர் உறைகிறது—*

தஸ்ய மத்யே மஹான்க்னிர் விச்வார்ச்சிர்

விச்வதோமுக:| ஸோக்ரபுக்விபஜன் திஷ்டன்னா-

ஹாரமஜர: கவி: || 9 ||

தஸ்ய – *அதன்;* மத்யே – *நடுவில்;* விச்வார்ச்சி: – *எங்கும் ஒளி வீசுவதாகவும்;* விச்வதோமுக: – *எல்லா திக்கிலும் செல்வதாகவும்;* மஹான் – *சிறந்த;* அக்னி: – *அக்கினி;* ஸ: – *அந்த அக்கினி;* அக்ரபுக் –

முதலில் உண்பதாக; ஆஹாரம் – உணவை; விபஜன் – பிரித்துக் கொடுப்பதாக; திஷ்ட்டன் – நிலைத்து நிற்பதாக; அஜர: – பழுதுபடாததாக; கவி: – அனைத்தையும் காண்பதாக.

9. எங்கும் ஒளி வீசுவதாகவும், எல்லா திக்கிலும் செல்வதாகவும் உள்ள சிறந்த அக்கினி அந்த ஆகாசத்தின் நடுவில் உள்ளது. பிராணனாகிய அந்த அக்கினி முதலில் உண்பதாகவும், உணவைப் பிரித்துக் கொடுப்பதாகவும், நிலைத்து நிற்பதாகவும், தான் பழுதுபடாததாகவும், அனைத்தையும் காண்பதாகவும் உள்ளது.

படிப்படியாக நம்மை அகமுகமாக்கும் முயற்சியில் அடுத்தபடி இது. ஆகாசத்தினுள் அக்கினி. இதுவே உயிர் அல்லது பிராணன். இதுவே நம்மிலுள்ள இயங்கு சக்தி. உணவைச் செரிப்பது, உணவிலிருந்து பெற்ற சக்தியை எல்லா இடங்களுக்கும் எடுத்துச் செல்வது, கழிவை வெளியேற்றுவது என்று உடம்பின் இயக்கத்திற்கான பல வேறு வேலைகளைப் பிராணனே செய்கிறது. இதய ஆகாசத்தின் நடுவில் இந்தப் பிராணன் நிலைகொள்கிறது. உடம்பின் அனைத்துப் பகுதிகளிலும் பரவியுள்ளதால் அனைத்தையும் காண்பதாகக் கூறப்படுகிறது.

பிராணனின் சுடராக ஜீவான்மா உள்ளது—

திர்யகூர்த்வமத: சாயீரச்மயஸ் தஸ்ய ஸந்ததா ।
ஸந்தாபயதி ஸ்வம் தேஹமாபாத தலமஸ்தக: ।
தஸ்ய மத்யே வஹ்னிசிகா அணீயோர்த்வா
வ்யவஸ்தித: ॥ 10 ॥

தஸ்ய – அந்தப் பிராணனின்; ரச்மய: – கிரணங்கள்; திர்யக் – குறுக்கிலும்; ஊர்த்வம் – மேலும்; அத: – கீழும்; சாயீ – பரவி; ஸந்ததா – எப்போதும் வியாபித்திருக்கின்றன; ஆபாத தல மஸ்தக: – உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை; ஸ்வம் தேஹம் – சொந்த உடம்பை; ஸந்தாபயதி – சூடுள்ளதாகச் செய்கிறது; தஸ்ய – அதன்; மத்யே – நடுவில்; அணீய: – மெல்லியதான; வஹ்னிசிகா – அக்கினிச் சுடர்; ஊர்த்வா – மேல்நோக்கி; வ்யவஸ்தித: – அமைந்திருக்கிறது.

10. அந்தப் பிராணனின் கிரணங்கள் குறுக்கிலும் மேலும் கீழும் பரவி எங்கும் வியாபித்திருக்கின்றன. உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை சொந்த உடலை இது சூடுள்ளதாகச் செய்கிறது. இதன் நடுவில் மெல்லியதான அக்கினிச் சுடர் மேல்நோக்கி அமைந்திருக்கிறது.

இந்தப் பிராணன் உடம்பை விட்டுப் பிரிவதே உயிர்பிரிவது அல்லது மரணம் எனப்படுகிறது. உடம்பின் சூடு நீங்கி, அது விறைப்பதை வைத்து ஒருவர் இறந்து விட்டதை ஊர்ஜிதம் செய்துகொள்வதை வழக்கத்தில் காண முடியும். உடம்பிற்கு அந்தச் சூட்டை அளிப்பது இந்தப் பிராணன். அந்த அக்கினியின் நடுவில் அதன் சுடர் மேல் நோக்கி பிரகாசிக்கிறது. இந்தச் சுடரே ஜீவான்மா.

நீல தோயத் மத்யஸ்தாத்வித்யுல்லேகேவ பாஸ்வரா। நீவார சூக்வத் தன்வீ பீதா பாஸ்வத்யணூபமா ॥ 11 ॥

நீலதோயத மத்யஸ்தாத் – *கருமேகத்தின் நடுவிலிருந்து;* பாஸ்வரா – *ஒளி வீசுகின்ற;* வித்யுத் லேகா இவ – *மின்னல்கொடி போல்;* நீவாரசூகவத் – *நெல்லின் முளைபோல்;* தன்வீ – *மெல்லியதாக;* பீதா – *பொன்னிறமாக;* அணு உபமா – *அணுவைப்போல் நுண்ணியதாக;* பாஸ்வதி – *பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.*

11. கருமேகத்தின் நடுவிலிருந்து ஒளி வீசுகின்ற மின்னல் கொடி போலவும், நெல்லின் முளைபோல் மெல்லியதாகவும், பொன்னிறமாகவும், அணுவைப்போல் நுண்ணியதாகவும் அந்த ஆன்மா பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

ஜீவான்மா என்பது நுண்மையானது. அது நுண்ணியது, ஒளி மிக்கது என்பதைப் பல்வேறு உபநிஷதங்களும் பல்வேறு விதங்களில் பேசுகின்றன. நூற்றுக்கணக்காகப் பிளந்த முடியின் ஒரு பங்கு அளவினது ஜீவான்மா என்று சுவேதாசுவதர உபநிடதம் (5.9) கூறுகிறது. அது அணு போன்றது என்று முண்டக உபநிஷதம் (3.1.9) கூறுகிறது. நுண்மையானது என்றாலே அது புலன்களுக்கும் மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதது என்று தானே பொருள்! அத்தகைய ஒன்றை விளக்குவதற்கான ரிஷிகளின் முயற்சிகள் இவை.

*ஜீவான்மாவினுள் இறைவன் திகழ்கிறார்—*

தஸ்யா꞉ சிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித꞉ ।

ஸ ப்ரஹ்ம ஸ சிவ꞉ ஸ ஹரி꞉ ஸேந்த்ர꞉ ஸோऽக்ஷர꞉ பரம꞉

ஸ்வராட் ॥ 12 ॥

தஸ்யா: – அந்த; சிகாயா: – சுடரின்; மத்யே – நடுவில்; பரமாத்மா – இறைவன்; வ்யவஸ்தித: – வீற்றிருக்கிறார்; ஸ: – அவரே; ப்ரஹ்ம – பிரம்மா; ஸ: – அவரே; சிவ: – சிவன்; ஸ: – அவரே; ஹரி: – விஷ்ணு; ஸ: – அவரே; இந்த்ர: – இந்திரன்; ஸ: – அவரே; அக்ஷர: – அழிவற்றவர்; ஸ்வராட் – சுய ஒளியுடன் பிரகாசிப்பவர்; பரம: – தனக்குமேல் யாரும் இல்லாதவர்.

12. அந்தச் சுடரின் நடுவில் இறைவன் வீற்றிருக்கிறார். அவரே பிரம்மா, அவரே சிவன், அவரே விஷ்ணு, அவரே இந்திரன். அவர் அழிவற்றவர், சுய ஒளியுடன் பிரகாசிப்பவர், தனக்குமேல் யாரும் இல்லாதவர்.

அந்த இறைவனைப் போற்றுதல்—

ரிதக்ம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்கலம் | ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாய வை நமோ நம: || 13 ||

ரிதம் – காணும் பொருட்களின் அழகாகவும்; ஸத்யம் – காட்சிக்கு ஆதாரமாகவும் உள்ள; பரம் ப்ரஹ்ம – பரம்பொருளை; புருஷம் – உடல் தோறும் உறைபவனை; க்ருஷ்ண பிங்கலம் – கருமேனித் திருமாலும் செம்மேனிச் சிவனும் ஒன்றாக இணைந்த வடிவை; ஊர்த்வரேதம் –

முற்றிலும் தூயவனை; விரூபாக்ஷம் – முக்கண்ணனை; விச்வரூபாய வை – எல்லாம் தன் வடிவாய்க் கொண்டவனை; நமோ நம: – பலமுறை வணங்குகிறேன்.

13. காணும் பொருட்களின் அழகாகவும் காட்சிக்கு ஆதாரமாகவும் உள்ள பரம்பொருளை, உடல்தோறும் உறைபவனை, கருமேனித் திருமாலும் செம்மேனிச் சிவனும் ஒன்றாக இணைந்த வடிவை, முற்றிலும் தூயவனை, முக்கண்ணனை, எல்லாம் தன் வடிவாய்க் கொண்டவனை பலமுறை வணங்குகிறேன்.

இவ்வாறு நம்மை அகமுகமாக்கி இறைவனின் சன்னிதியில் விடுகிறது இந்த ஸூக்தம். இனி தொடர்ந்து அன்புடன் அவரது சன்னிதியில் இருப்பதே உண்மையான தியானம்.

இனி வருவது விஷ்ணு காயத்ரி. நாராயண ஸூக்தத்திற்குப் பிறகு இதை ஓதுவது வழக்கம்.

ஓம் நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி। தன்னோ விஷ்ணு: ப்ரசோதயாத் ॥

ஓம் ஸஹ நாவவது। . . . .

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

நாராயணாய – நாராயணனை; வித்மஹே – அறிந்துகொள்வோம்; வாஸுதேவாய – வாசுதேவனை;

*தீமஹி – தியானிப்போம்; தத் விஷ்ணு – அந்த விஷ்ணு; ந: – நம்மை; ப்ரசோதயாத் – தூண்டட்டும்.*

நாராயணனை அறிந்துகொள்வோம். அதற்காக அந்த வாசுதேவனை தியானிப்போம். அந்த விஷ்ணு நம்மை இந்த தியான முயற்சியில் தூண்டட்டும்.



விஷ்ணோர் நுகம் வீர்யாணி
ப்ரவோசம் ய: பார்த்திவானி
விமமே ரஜாம்ஸி அஸ்கபாய–
–த்தரக்ம் ஸதஸ்த்தம் விசக்ரமாண
த்ரேதா உருகாயோ விஷ்ணோரராடமஸி
விஷ்ணோ: ப்ருஷ்டமஸி விஷ்ணோ
ச்னப்த்ரேஸ்த்தோ விஷ்ணோ: ஸ்யூ
விஷ்ணோர் த்ருவமஸி வைஷ்ணவ
விஷ்ணவே த்வா!

# ७. विष्णु सूक्तम्

ऋग्वेद

ॐ ॥ विष्णोर्नुकं वीर्याणि प्रवोचं यः पार्थिवानि विममे रजांसि यो अस्कभायदुत्तरं सधस्थं विचक्रमाणस्त्रेधोरु-गायः । विष्णोरराटमसि विष्णोः पृष्ठमसि विष्णोः श्नप्त्रेस्थो विष्णोस्स्यूरसि विष्णोर्ध्रुवमसि वैष्णवमसि विष्णवे त्वा ॥ १-२ ॥

तदस्य प्रियमभिपाथो अश्याम् । नरो यत्र देवयवो मदन्ति । उरुक्रमस्य स हि बन्धुरित्था । विष्णोः पदे परमे मध्व उत्सः । प्रतद्विष्णुस्स्तवते वीर्याय । मृगो न भीमः कुचरो गिरिष्ठाः । यस्योरुषु त्रिषु विक्रमणेषु । अधिक्षियन्ति भुवनानि विश्वा । परो मात्रया तनुवा वृधान । न ते महित्वमन्वश्नु-वन्ति ॥ ३-४ ॥

उभे ते विद्म रजसी पृथिव्या विष्णो देव त्वम् । परमस्य वित्से । विचक्रमे पृथिवीमेष एताम् । क्षेत्राय विष्णुर्मनुषे दशस्यन् । ध्रुवासो अस्य कीरयो जनासः । ऊरुक्षितिगं सुजनिमाचकार । त्रिर्देवः पृथिवीमेष एताम् । विचक्रमे शतर्चसं महित्वा । प्रविष्णुरस्तु तवसस्तवीयान् । त्वेषग्ंह्यस्य स्थविरस्य नाम ॥ ५-६ ॥

अतो देवा अवन्तु नो यतो विष्णु-र्विचक्रमे । पृथिव्यास्सप्त धामभिः । इदं विष्णु-र्विचक्रमे त्रेधा निदधे पदम् । समूढमस्य पाग्ंसुरे । त्रीणि पदा विचक्रमे विष्णुर्गोपा अदाभ्यः । ततो धर्माणि धारयन् । विष्णोः कर्माणि पश्यत यतो व्रतानि पस्पशे । इन्द्रस्य युज्यस्सखा ॥ ७-८ ॥

तद्विष्णोः परमं पदग्ं सदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम् । तद्विप्रासो विपन्यवो जागृवाग्ं सस्समिन्धते । विष्णोर्यत्परमं पदम् ॥ ९ ॥

पर्याप्त्या अनन्तरायाय सर्वस्तोमोऽतिरात्र उत्तम महर्भवति सर्वस्याप्त्यै सर्वस्य जित्त्यै सर्वमेव तेनाप्नोति सर्वं जयति ॥ १० ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 7. விஷ்ணு ஸூக்தம்

*ரிக்வேதம்*

ரிக்வேதம் முழுவதிலும் மகாவிஷ்ணு பல இடங்களில் துதிக்கப்பட்டாலும், அவருக்கென்று முழுமையாக ஐந்தோ ஆறோ துதிகள் மட்டுமே உள்ளன. அவற்றிலிருந்து தொகுக்கப்பட்டது இந்த ஸூக்தம்.

ஓம் ‖ விஷ்ணோர் நுகம் வீர்யாணி ப்ரவோசம் ய:

பார்த்திவானி விமமே ரஜாக்ம்ஸி யோ அஸ்கபாயதுத்-

தரக்ம் ஸதஸ்தம் விசக்ரமாணஸ்த்ரேதோருகாய: ‖ 1 ‖

ய: – *யார்;* பார்த்திவானி ரஜாம்ஸி – *பூமியையும் அதிலுள்ள அனைத்தையும்;* விமமே – *உருவாக்கியுள்ளாரோ;* ய: – *யார்;* உத்தரம் – *மேலே உள்ள;* ஸதஸ்தம் – *விண்ணுலகை;* அஸ்கபாயத் – *தாங்கியுள்ளாரோ;* த்ரேதா – *மூன்று அடியால்;* விசக்ரமாண: –

*அளந்தாரோ;* உருகாய: – *போற்றப்படுகிறாரோ;* விஷ்ணோ: – *விஷ்ணுவின்;* நுகம் வீர்யாணி – *மகிமை மிக்க செயல்களை;* ப்ரவோசம் – *போற்றுவோம்.*

1. யார் பூமியையும் அதிலுள்ள அனைத்தையும் உருவாக்கியுள்ளாரோ, மேலே உள்ள விண்ணுலகைத் தாங்கியுள்ளாரோ, மூன்றடியால் மூன்று உலகங்களையும் அளந்தாரோ, சான்றோரால் போற்றப்படுகிறாரோ அந்த விஷ்ணுவின் மகிமை மிக்க செயல் களைப் போற்றுவோம்!

விஷ்ணோரராடமஸி விஷ்ணோ: ப்ருஷ்ட்டமஸி விஷ்ணோ: ச்னப்த்ரேஸ்தோ விஷ்ணோஸ்ஸ்யூரஸி விஷ்ணோர் த்ருவமஸி வைஷ்ணவமஸி விஷ்ணவே த்வா || 2 ||

விஷ்ணோ: – *விஷ்ணுவின்;* ரராடம் அஸி – *நெற்றியாக விளங்குகிறாய்;* விஷ்ணோ: – *விஷ்ணுவின்;* ப்ருஷ்ட்டம் அஸி – *பின்புறமாக இருக்கிறாய்;* விஷ்ணோ: – *விஷ்ணுவின்;* ச்னப்த்ரே ஸ்த: – *இரண்டு கால்களாக உள்ளீர்கள்;* விஷ்ணோ: – *விஷ்ணுவின்;* ஸ்யூ: அஸி – *நாடிகளாக இருக்கிறாய்;* விஷ்ணோ: – *விஷ்ணுவின்;* த்ருவம் அஸி – *முடிச்சுகளாக இருக்கிறீர்கள்;* வைஷ்ணவம் அஸி – *விஷ்ணுமயமாகவே இருக்கிறாய்;* விஷ்ணவே – *விஷ்ணுவின்*

*அருளைப் பெறுவதற்காக; த்வா – உன்னை வணங்குகிறேன்.*

2. யாக மண்டபத்தின் வாசல்படி விட்டமே, நீ விஷ்ணுவின் நெற்றியாக விளங்குகிறாய், பின்புறமாக இருக்கிறாய். வாசற்கால்களே, நீங்கள் அவரது இரண்டு கால்களாக உள்ளீர்கள். கயிறே, நீ அவரது நாடிகளாக இருக்கிறாய். முடிச்சுகளே, நீங்கள் விஷ்ணுவின் முடிச்சுகளாக இருக்கிறீர்கள். யாக மண்டபமே, நீ விஷ்ணு மயமாகவே இருக்கிறாய். விஷ்ணுவின் அருளைப் பெறுவதற்காக உன்னை வணங்குகிறேன்!

யாகம் செய்யப்படுகின்ற இடத்தின் பல்வேறு அம்சங்களையும் இந்தப் பாடல் விஷ்ணுமயமாகக் காண்கிறது.

தத்ஸ்ய ப்ரியமபிபாதோ அச்யாம் । நரோ யத்ர தேவயவோ மதந்தி । உருக்ரமஸ்ய ஸ ஹி பந்துரித்தா । விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ: ॥ 3 ॥

*யத்ர – எங்கே; தேவயவ: – தேவர்கள்; மதந்தி – மகிழ்கிறார்களோ; நர: – மனிதர்கள்; ப்ரியமபிபாத: – போக விரும்புகிறார்களோ; உருக்ரமஸ்ய – விஷ்ணுவின்; ஸ ஹி பந்துரித்தா – மனத்திற்கு உகந்த இருப்பிடமோ; விஷ்ணோ: – விஷ்ணுவின்; பரமே பதே – மேலாம் திருவடியில்; மத்வ – அமுதத் தேனூற்று; உத்ஸ: – பெருகுகிறதோ; ததஸ்ய – அங்கே; அச்யாம் – அடைவேனாக.*

3. எங்கே தேவர்கள் மகிழ்கிறார்களோ, எங்கே மனிதர்கள் போக விரும்புகிறார்களோ, எது விஷ்ணுவின் மனத்திற்கு உகந்த இருப்பிடமோ, எங்கே அமுதத் தேனூற்று பெருகுகின்றதோ விஷ்ணுவின் அந்த மேலாம் திருவடிகளை நான் அடைவேனாக!

ப்ரதத்விஷ்ணு: ஸ்தவதே வீர்யாய । ம்ருகோ ந பீம: குசரோ கிரிஷ்ட்டா: । யஸ்யோருஷு த்ரிஷு விக்ரமணேஷு । அதிக்ஷியந்தி புவனானி விச்வா ॥ பரோ மாத்ரயா தனுவா வ்ருதான । ந தே மஹித்வமன்வச்னுவந்தி ॥ 4 ॥

கிரிஷ்ட்டா: – *மலைமீது;* குசர – *திரிகின்ற;* பீம: ம்ருக: – *பெரிய யானை;* யஸ்ய – *யாருடைய;* உருஷு த்ரிஷு விக்ரமணேஷு – *மூன்று பெரிய அடிகளுள்;* விச்வா – *எல்லா;* புவனானி – *உலகங்களும்;* அதிக்ஷியந்தி – *அடங்கியுள்ளதோ;* ப்ரதத் விஷ்ணு: – *அந்த விஷ்ணுவை;* வீர்யாய – *மகிமைக்காக;* ஸ்தவதே – *போற்றுவோம்;* தனுவா – *திருமேனி;* மாத்ரயா பர: வ்ருதான – *அளவில் அடங்காதது;* தே – *உமது;* மஹித்வம் – *மகிமையை;* ந அனு அச்னுவந்தி – *அறிய முடியாது.*

4. மலைமீது திரிகின்ற பெரிய யானைபோல் சுதந்திரமான வரும், மூன்று பெரிய அடிகளுள் எல்லா உலகங்களையும் அடக்கிய வருமான அந்த விஷ்ணுவை அவரது மகிமைக்காகப் போற்றுவோம்.

எம்பெருமானே, உமது திருமேனி அளவில் அடங்காதது, உமது மகிமை அறிய முடியாதது.

உபே தே வித்ம ரஜஸீ ப்ருதிவ்யா விஷ்ணோ தேவ த்வம் | பரமஸ்ய வித்ஸே | விசக்ரமே ப்ருதிவீமேஷ ஏதாம் | க்ஷேத்ராய விஷ்ணுர் மனுஷே தசஸ்யன் || 5 ||

தே – *உமது;* ரஜஸீ ப்ருதிவ்யா – *மணம் நிறைந்த* óÔ1 ÜÄ ; உபே – *இரண்டை;* வித்ம – *நாங்கள் அறிவோம்;* விஷ்ணோ தேவ – *ஒளி பொருந்திய திருமாலே;* த்வம் – *நீர் மட்டுமே;* பரமஸ்ய – *மேலான உலகை;* வித்ஸே – *அறிவீர்;* ஏஷ – *இந்த;* ப்ருதிவீம் – *பூமியில்;* விஷ்ணு: – *விஷ்ணு;* விசக்ரமே – *நடந்து;* ஏதாம் – *அதனை;* க்ஷேத்ராய – *இருப்பிடமாகக் கொள்வதற்கு;* மனுஷே – *மனிதர்களுக்கு;* தசஸ்யன் – *கொடுத்துள்ளார்.*

5. உமது மணம் நிறைந்ததான பூமி மற்றும் விண்ணுலகம் இரண்டையே நாங்கள் அறிவோம். ஒளி பொருந்திய திருமாலே, நீர் மட்டுமே மேலான உலகை அறிவீர். இந்த பூமியில் நீர் நடந்து, அதனை இருப்பிடமாகக் கொள்வதற்கு மனிதர்களுக்குக் கொடுத்துள்ளீர்.

த்ருவாஸோ அஸ்ய கீரயோ ஜனாஸ: | ஊருக்ஷிதிக்ம் ஸுஜனிமாசகார | த்ரிர் தேவ: ப்ருதிவீமேஷ ஏதாம் |

விச்க்ரமே சதர்ச்சஸம் மஹித்வா । ப்ரவிஷ்ணுரஸ்து தவஸஸ்தவீயான் । த்வேஷக்ம் ஹ்யஸ்ய ஸ்தவிரஸ்ய நாம ॥ 6 ॥

கீரய: ஜனாஸ: – *பணிவுமிக்க ஜனங்கள்;* அஸ்ய – *அவரில்;* த்ருவாஸ – *பாதுகாப்பான உறைவிடத்தைத் தேடுகிறார்கள்;* ஏதாம் – *இந்த;* ஊருக்ஷிதம் – *பூமியை;* ஸுஜனிமா – *பரந்த வாழ்விடமாக;* சகார – *செய்துள்ளார்;* சதவர்ச்சஸம் – *எண்ணற்ற அழகுகள் பொருந்திய;* ஏஷ – *இந்த* ப்ருதிவீம் – *பூமியை;* தேவ: – *விஷ்ணு;* மஹித்வா – *தமது மகிமையினால்;* த்ரி: – *மூன்று முறை;* விசக்ரமே – *அளந்துள்ளார்;* தவ – *உமது;* ஸ: ஸ்தவீயான் – *மேலான பெருமை;* ப்ரவிஷ்ணு: – *விஷ்ணு;* அஸ்து – *உள்ளது;* து – *மேலும்;* ஏஷம் ஹி – *இதுவே;* அஸ்ய ஸ்தவிரஸ்ய – *இந்த மாபெரும் மகிமையின்;* நாம – *பெயர்.*

6. பணிவுமிக்க ஜனங்கள் அவரில் பாதுகாப்பான உறைவிடத்தைத் தேடுகிறார்கள். அவர் இந்த பூமியை அவர்களுக்காக பரந்த வாழ்விடமாகச் செய்துள்ளார். எண்ணற்ற அழகுகள் பொருந்திய இந்த பூமியை விஷ்ணு தமது மகிமையினால் மூன்று முறை அளந்துள்ளார். மகா விஷ்ணுவே! உமது மேலான பெருமை காரணமாக நீர் விஷ்ணு என்று பெயர் பெறுகிறீர். மேலும், இது உமது மகிமைக்குப் பொருத்தமாகவே உள்ளது.

அதோ தேவா அவந்து நோ யதோ விஷ்ணுர் விசக்ரமே | ப்ருதிவ்யாஸ் ஸப்த தாமபி: | இதம் விஷ்ணுர் விசக்ரமே த்ரேதா நிததே பதம் | ஸமூடமஸ்ய பாம்ஸுரே || 7 ||

ய: – எந்த; ப்ருதிவ்யா: – பூமியின்; ஸப்த தாமபி: – ஏழு பகுதிகளிலும்; விஷ்ணு: – விஷ்ணு; விசக்ரமே – நடந்தாரோ; அத: – அந்த பூமியின்; தேவா: – தேவர்கள்; ந: – நம்மை; அவந்து – காக்கட்டும்; விஷ்ணு: – விஷ்ணு; இதம் விசக்ரமே – இப்படி நடந்தபோது; பதம் – தமது திருவடிகளை; த்ரேதா – மூன்றுமுறை; நிததே – வைத்தார்; அஸ்ய – அவரது; பாம்ஸுரே – தூசியால்; ஸமூடம் – மூடப்பட்டது.

7. எந்த பூமியின் ஏழு பகுதிகளிலும் விஷ்ணு நடந்தாரோ அந்த பூமியின் பாவங்களிலிருந்து தேவர்கள் நம்மைக் காக்கட்டும். விஷ்ணு நடந்தபோது தமது திருவடிகளை மூன்று முறை வைத்தார். அவரது திருப்பாத தூசியால் பூமி மூடப்பட்டது.

த்ரீணி பதா விசக்ரமே விஷ்ணுர் கோபா அதாப்ய: | ததோ தர்மாணி தாரயன் | விஷ்ணோ: கர்மாணி பச்யத யதோ வ்ரதானி பஸ்பசே | இந்த்ரஸ்ய யுஜ்யஸ்ஸகா || 8 ||

விஷ்ணு: – விஷ்ணு; கோபா: – அனைத்தையும் காப்பவரும்; அதாப்ய: – ஏமாற்றப்பட முடியாதவரும்; த்ரீணி பதா: – மூன்று அடிகளால்; விசக்ரமே – அளந்து; அத: – இங்கே; தர்மாணி – தர்மங்களை; தாரயன் – நிறுவினார்; இந்த்ரஸ்ய – இந்திரனின்; யுஜ்ய: ஸகா – நெருங்கிய நண்பனான; விஷ்ணோ – விஷ்ணுவின்; கர்மாணி – செயல்களை; பச்யத – பாருங்கள்; யத: – அவற்றின் மூலம்; வ்ரதானி – வாழ்க்கை நியதிகளை; பஸ்பசே – வெளிப்படுத்தியுள்ளார்.

8. விஷ்ணு அனைத்தையும் காப்பவரும் யாராலும் ஏமாற்றப்பட முடியாதவரும் ஆவார். அவர் தமது மூன்று அடிகளால் உலகை அளந்து இங்கே தர்மங்களை நிறுவியுள்ளார். இந்திரனின் நெருங்கிய நண்பரான விஷ்ணுவின் செயல்களைப் பாருங்கள். அவற்றின்மூலம் வாழ்க்கை நியதிகளை அவர் வெளிப்படுத்தியுள்ளார்.

தத்விஷ்ணோ: பரமம் பதக்ம் ஸதா பச்யந்தி ஸூரய: । திவீவ சக்ஷுராததம் । தத் விப்ராஸோ விபன்யவோ ஜாக்ருவாக்ம் ஸஸ்ஸமிந்ததே । விஷ்ணோர்யத் பரமம் பதம் ॥ 9 ॥

ஆததம் – பரந்த; திவி இவ – வானம்போல்; சக்ஷு: – கண்களை உடையவர்கள்; ஸூரய: – ரிஷிகள்; தத் விஷ்ணோ: – அந்த விஷ்ணுவின்;

பரமம் பதம் - மேலான உறைவிடத்தை; ஸதா - எப்போதும்; பச்யந்தி - காண்கிறார்கள்; விப்ராஸ: - கவிதையை விரும்புபவர்களும்; விபன்யவ: - முனிவர்களும்; ஜாக்ருவாம்ஸ: - விழிப்புற்றவர்களு மான; யத் - இவர்களே; விஷ்ணோ: - விஷ்ணுவின்; யத் பரமம் பதம் - மேலான உறைவிடத்தை; ஸமிந்ததே - ஒளி பெறச் செய்கிறார்கள்.

9. பரந்த வானம்போல் கண்களை உடையவர்களான ரிஷிகள் விஷ்ணுவின் மேலான உறைவிடத்தை எப்போதும் காண்கிறார்கள். கவிதையை விரும்புபவர்களும், முனிவர் களும், விழிப்புற்றவர்களுமான இவர்களே விஷ்ணுவின் மேலான அந்த உறைவிடத்தை ஒளிபெறச் செய்கிறார்கள்.

பர்யாப்த்யா அனந்தராயாய ஸர்வஸ்தோமோऽதி ராத்ர உத்தம மஹர் பவதி ஸர்வஸ்யாப்த்யை ஸர்வஸ்ய ஜித்யை ஸர்வமேவ தேனாப்னோதி ஸர்வம் ஜயதி || 10 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

பர்யாப்த்யா - அளவற்ற; அனந்த ஆயாய - வற்றாத செல்வம் பெறுவதற்கும்; ஸர்வ ஸ்தோம: - மங்கா புகழ் பெறுவதற்கும்; அதிராத்ர: - அதி ராத்ரம்; உத்தம - மிக மேலான; மஹ: - யாகம்;

*பவதி – ஆகிறது; தேன – அந்த யாகத்தால்; ஸர்வஸ்ய ஆப்த்யை – எல்லாம் கிடைக்கிறது; ஸர்வஸ்ய ஜித்யை – எல்லா வெற்றியும் கிடைக்கிறது; ஸர்வம் ஏவ – எல்லாமே; ஆப்னோதி – அடையப்படுகிறது; ஸர்வம் – எல்லாம்; ஜயதி – வளம் பெறுகிறது.*

10. அளவற்ற வற்றாத செல்வம் பெறுவதற்கும், மங்கா புகழ் பெறுவதற்கும் அதிராத்ரம் எனப்படும் யாகமே மிக மேலான யாகம் ஆகிறது. அந்த யாகத்தால் எல்லாம் கிடைக்கிறது, எல்லா வெற்றியும் கிடைக்கிறது, எல்லாமே அடையப்படுகிறது, எல்லாம் வளம் பெறுகிறது.



# ८. हिरण्यगर्भ सूक्तम्

ऋग्वेद, 10.8.121

ॐ हिरण्यगर्भः समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् । स दाधार पृथिवीं द्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम ॥ १ ॥

य आत्मदा बलदा यस्य विश्व उपासते प्रशिषं यस्य देवाः । यस्य छायामृतं यस्य मृत्युः कस्मै देवाय हविषा विधेम ॥ २ ॥

यः प्राणतो निमिषतो महित्वैक इद्राजा जगतो बभूव । य ईशे अस्य द्विपदश्चतुष्पदः कस्मै देवाय हविषा विधेम ॥ ३ ॥

यस्येमे हिमवन्तो महित्वा यस्य समुद्रं रसया सहाहुः । यस्येमाः प्रदिशो यस्य बाहू कस्मै देवाय हविषा विधेम ॥ ४ ॥

येन द्यौरुग्रा पृथिवी च दृढा येन स्वः स्तभितं येन नाकः । यो अन्तरिक्षे रजसो विमानः कस्मै देवाय हविषा विधेम ॥ ५ ॥

यं क्रन्दसी अवसा तस्तभाने अभ्यैक्षेतां मनसा रेजमाने । यत्राधि सूर उदितो विभाति कस्मै देवाय हविषा विधेम ॥ ६ ॥

आपो ह यद्बृहतीर्विश्वमायन् गर्भं दधाना जनयंतीरग्निम् । ततो देवानां समवर्ततासुरेकः कस्मै देवाय हविषा विधेम ॥ ७ ॥

यश्चिदापो महिना पर्यपश्यद् दक्षं दधाना जनयंतीर्यज्ञम् । यो देवेष्वधि देव एक आसीत्कस्मै देवाय हविषा विधेम ॥ ८ ॥

मा नो हिंसीज्जनिता यः पृथिव्या यो वा दिवं सत्यधर्मा जजान । यश्चापश्चन्द्रा बृहतीर्जजान कस्मै देवाय हविषा विधेम ॥ ९ ॥

प्रजापते न त्वदेतान्यन्यो विश्वा जातानि परि ता बभूव । यत्कामास्ते जुहुमस्तन्नो अस्तु वयं स्याम पतयो रयीणाम् ॥ १० ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 8. ஹிரண்யகர்ப்ப ஸூக்தம்

*ரிக்வேதம், 10.8.121*

ஹிரண்யகர்ப்பன் என்றால் பொன் முட்டை போன்ற இந்தப் பிரபஞ்சத்தை உடலாகக் கொண்ட இறைவன். உலக இன்பம் ஆகட்டும், மரணமிலா பெருநிலை ஆகட்டும்— அது வேண்டுமானால், இறைவனை அறிய வேண்டும், அவரை வழிபட வேண்டும் என்பதை இந்த ஸூக்தம் வலியுறுத்துகிறது.

ஓம் ஹிரண்யகர்ப: ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத் । ஸ தாதார ப்ருதிவீம் த்யாமுதேமாம் கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ॥ 1 ॥

*ஹிரண்யகர்ப: – இறைவனே; அக்ரே – முதலில்; ஸமவர்த்த – இருந்தார்; ஜாத: – பிறந்தவரான அவர்; பூதஸ்ய – உயிர்களின்; ஏக பதி: – ஒரே தலைவராக;*

*ஆஸீத் – உள்ளார்; ஸ: – அவர்; இமாம் – இந்த; ப்ருதிவீம் – பூமியையும்; உத த்யாம் – வானத்தையும்; தாதார: – காப்பவர்; கஸ்மை தேவாய – அந்த இறைவனை; ஹவிஷா – ஆஹுதிகளால்; விதேம – வழிபடுவோம்.*

1. இறைவனே படைப்பிற்கு முன்னால் இருந்தார். முதலில் பிறந்தவரான அவர் உயிர்களின் ஒரே தலைவராக உள்ளார். இந்த பூமியையும் வானத்தையும் காப்பவர் அவர். அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

ய ஆத்மதா பலதா யஸ்ய விச்வ உபாஸதே ப்ரசிஷம் யஸ்ய தேவா: । யஸ்ய சாயாம்ருதம் யஸ்ய ம்ருத்யு: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ॥ 2 ॥

*ய: – யார்; ஆத்மதா – நம்மைத் தந்தாரோ; பலதா – வலிமையைத் தந்தாரோ; யஸ்ய – யாருடைய; ப்ரசிஷம் – ஆணையை; விச்வ தேவா: – எல்லா தேவர்களும்; உபாஸதே – ஏற்றுப் பணிகின்றார்களோ; யஸ்ய – யாருடைய; சாயா – நிழல்; அம்ருதம் – மரணமிலா பெருநிலையோ; யஸ்ய – யாருடைய; ம்ருத்யு: – மரணமோ; கஸ்மை... விதேம – அந்த.... வழிபடுவோம்.*

2. யார் நம்மையே நமக்குத் தந்தாரோ, நமக்கு வலிமையைத் தந்தாரோ, யாருடைய ஆணையை எல்லா தேவர்களும் ஏற்றுப் பணிகின்றார்களோ, யாருடைய நிழல் மரணமிலா பெருநிலையோ, அதேபோல், யாருடைய நிழல் மரணமோ அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

யః ப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இத்ராஜா ஜகதோ பபூவ | ய ஈசே அஸ்ய த்விபதச் சதுஷ்பதః கஸ்மை தேவாய ஹவிஷா விதேம || 3 ||

ப்ராணதః – மூச்சு விடுவனவும்; நிமிஷதః – கண் இமைப்பனவுமாகிய; இத் ஜகதః – இந்த உயிர்க் குலத்தின்; ஏகః ராஜா – ஒரே தலைவனாக; யः – யார்; மஹித்வா – தமது மகிமையால்; பபூவ – ஆகியுள்ளாரோ; அஸ்ய – இந்த; த்விபதः – இரண்டு கால் உயிரினங்களை யும்; சதுஷ்பதः ச – மற்றும் நான்கு கால் உயிரினங் களையும்; யः ஈசே – ஆள்பவர் யாரோ; கஸ்மை... விதேம – அந்த... வழிபடுவோம்.

3. மூச்சு விடுவனவும், கண் இமைப்பனவுமாகிய இந்த உயிர்க்குலத்தின் ஒரே தலைவனாக யார் தமது மகிமையால் ஆகியுள்ளாரோ, இரண்டு கால் உயிரினங்கள் மற்றும் நான்கு கால் உயிரினங்களையும் ஆள்பவர் யாரோ அந்த இறைவனை ஆஹுதி களால் வழிபடுவோம்.

யஸ்யேமே ஹிமவந்தோ மஹித்வா யஸ்ய ஸமுத்ரம் ரஸயா ஸஹாஹுஃ | யஸ்யேமாః ப்ரதிசோ யஸ்ய பாஹூ கஸ்மை தேவாய ஹவிஷா விதேம || 4 ||

இமே ஹிமவந்த: – *பனிச் சிகரங்களுடன் கூடிய இந்த மலைகளும்;* ரஸயா ஸஹ – *ஆறுகளுடன்;* ஸமுத்ரம் – *கடலும்;* யஸ்ய – *யாருடைய;* மஹித்வா – *மகிமையை;* ஆஹு: – *போற்றுகின்றனவோ;* யஸ்ய – *யாருடைய;* பாஹூ – *இரண்டு கைகளும்;* இமா: ப்ரதிச: – *இந்த திசைகளாக உள்ளனவோ;* கஸ்மை.... விதேம – *அந்த.... வழிபடுவோம்.*

4. பனிச் சிகரங்களுடன் கூடிய இந்த மலைகளும் ஆறுகளும் கடலும் யாருடைய மகிமையைப் போற்றுகின்றனவோ, யாருடைய இரண்டு கைகளும் திசைகளாக உள்ளனவோ அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

யேன த்யௌருக்ரா ப்ருதிவீ ச த்ருடா யேன ஸ்வ: ஸ்தபிதம் யேன நாக: । யோ அந்தரிக்ஷே ரஜஸோ விமான: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ॥ 5 ॥

யேன – *யாரால்;* த்யௌ: – *வானம்;* உக்ரா – *மகிமை பொருந்தியதாகவும்;* ப்ருதிவீ – *பூமி;* த்ருடா – *திடமானதாகவும்;* ஸ்வ: – *பிரம்ம லோகமும்;* நாக: – *சொர்க்க லோகமும்;* ஸ்தபிதம் – *நிலை நிறுத்தப்பட்டதோ;* ய: – *யாரால்;* அந்தரிக்ஷே – *வானவெளியில்;* ரஜஸ: – *வாயுக்களை;* விமான: –

படைத்தவரோ; கஸ்மை... விதேம - அந்த... வழி படுவோம்.

5. யாரால் வானம் மகிமை பொருந்தியதாகவும் பூமி திடமான தாகவும் உள்ளதோ, யாரால் பிரம்ம லோகமும் சொர்க்க லோகமும் நிலைநிறுத்தப்பட்டதோ, யார் வானவெளியில் வாயுக்களைப் படைத்தாரோ அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

யம் க்ரந்தஸீ அவஸா தஸ்தபானே அப்யைக்ஷேதாம் மனஸா ரேஜமானே । யத்ராதி ஸூர உதிதோ விபாதி கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ॥ 6 ॥

யம் - *யாரால்;* க்ரந்தஸீ - *வானும் மண்ணும்;* அவஸா தஸ்தபானே - *படைக்கப்பட்டு, நிலை பெற்றுள்ளதோ;* மனஸா அபி ஏக்ஷேதாம் - *எதிர் பார்த்து நிற்கிறதோ;* உதித: ஸூர்ய: - *உதித்த சூரியன்;* யத்ர - *யாரில்;* அதி விபாதி - *அதிகமாக ஒளிர்கிறானோ;* கஸ்மை... விதேம - *அந்த..... வழிபடுவோம்.*

6. யாரால் வானும் மண்ணும் படைக்கப்பட்டு நிலை பெற்றுள்ளதோ, வானும் மண்ணும் யாரை எதிர் பார்த்து நிற்கிறதோ, உதித்த சூரியன் யாரில் அதிகமாக ஒளிர்கிறானோ அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

ஆபோ ஹ யத் ப்ருஹதீர் விச்வமாயன் கர்பம் ததானா ஜனயந்திரக்னிம் | ததோ தேவானாம் ஸமவர்த்ததாஸுரேக: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம || 7 ||

*கர்ப்பம் – முளையை; ததானா – தன்னுள் கொண்டவாறு; அக்னிம் – அக்கினியை; ஜனயந்தீ: – உருவாக்கியவாறு; யத் – எப்போது; ப்ருஹதீ: ஆப: ஹ – பிரளய கால வெள்ளம்; விச்வம் – பிரபஞ்சத்தை; ஆயன் – வியாபித்திருந்ததோ; தத: – அப்போது; தேவானாம் – தேவர்களுடைய; ஏக: ஆஸு: – ஒரே மூச்சு; ஸமவர்த்தத – வெளிப்பட்டது; கஸ்மை.... விதேம – அந்த..... வழிபடுவோம்.*

7. படைப்பிற்கான முளையைத் தன்னுள் கொண்டவாறும் அக்கினியை உருவாக்கியவாறும் பிரளய கால வெள்ளம் எப்போது பிரபஞ்சத்தை வியாபித்திருந்ததோ அப்போது எல்லா தேவர் களுடைய ஒரே மூச்சு வெளிப்பட்டது. அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

யச்சிதாபோ மஹினா பர்யபச்யத் தக்ஷம் ததானா ஜனயந்தீர் யஜ்ஞம் | யோ தேவேஷ்வதி தேவ ஏக ஆஸீத் கஸ்மை தேவாய ஹவிஷா விதேம || 8 ||

யச்சித் – *யார்;* மஹினா – *வலிமையினால்;* பரி அபச்யத் – *சுற்றிலும் பார்த்து;* ஆப: – *வெள்ளத்தை நிலை நிறுத்தினாரோ;* தக்ஷம் – *படைப்பாற்றலை;* ததானா – *தன்னுள் கொண்டிருந்தாரோ;* யஞ்ஜம் – *வேள்வியை;* ஜனயந்தீ: – *உருவாக்கினாரோ;* ய: – *யார்;* தேவேஷு – *தேவர்களின்;* அவதி தேவ: – *தலைமை தெய்வமோ;* ஏக: ஆஸீத் – *ஒரே ஒருவராக இருப்பவரோ;* கஸ்மை... விதேம – *அந்த.... வழிபடுவோம்.*

8. யார் தன் வலிமையினால் படைப்பின் ஆரம்பத்தில் சுற்றிலும் ஊழிக்கால வெள்ளத்தை நிலைநிறுத்தினாரோ, யார் படைப்பாற்றலைத் தன்னுள் கொண்டிருந்தாரோ, யார் வேள்வியை உருவாக்கினாரோ, யார் தேவர்களின் தலைமை தெய்வமோ, யார் ஒரே ஒருவராக இருப்பவரோ அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

மா நோ ஹிம்ஸீஜ்ஜனிதா ய: ப்ருதிவ்யா யோ வா திவம் ஸத்ய தர்மா ஜஜான । யச்சாபச்சந்த்ரா ப்ருஹதீர்ஜஜான கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ॥ 9 ॥

ய: – *யார்;* ந: – *நம்மை;* மா ஹிம்ஸீ: – *துன்புறுத்துவதில்லையோ;* ப்ருதிவ்யா வா – *பூமியையும்;* திவம் – *ஆகாயத்தையும்;* ஜனிதா – *படைத்தவர்;* ய: – *யாரோ;* ஸத்யதர்மா ஜஜான – *தவறாத ஆதாரமாக இருப்பவர் யாரோ;* ய: – *யார்;* ப்ருஹதீ: – *பரந்ததும்;*

சந்த்ரா: – இன்பம் தருவதுமான; ஆப: – கடல்களை; ஜஜான – உருவாக்கியவரோ; கஸ்மை.... விதேம – அந்த..... வழிபடுவோம்.

9. யார் நம்மைத் துன்புறுத்துவதில்லையோ, பூமியையும் ஆகாயத்தையும் படைத்தவர் யாரோ, தவறாத ஆதாரமாக இருப்பவர் யாரோ, பரந்ததும் இன்பம் தருவதுமான கடல்களை அதாவது பிரபஞ்ச வாழ்க்கையை உருவாக்கியவர் யாரோ அந்த இறைவனை ஆஹுதிகளால் வழிபடுவோம்.

ப்ரஜாபதே ந த்வதேதான்யன்யோ விச்வா ஜாதானி

பரி தா பபூவ। யத் காமாஸ்தே ஜுஹுமஸ்தன்னோ

அஸ்து வயம் ஸ்யாம பதயோ ரயீணாம் ॥ 10 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

ப்ராஜபதே – உயிர்களின் தலைவனான எம் பெருமானே; ஏதானி – இந்த; விச்வா – எல்லா; ஜாதானி – உயிர்களையும்; பரிதா பபூவ – சூழ்ந்திருக்கிறாய்; த்வத் அன்ய: – உன்னைத் தவிர; ந – இல்லை; ஜுஹும: – வேள்விக்கு; யத் காமா: தத் – உரிய பலன்கள்; ந: அஸ்து – எங்களுக்குக் கிடைக்கட்டும்; வயம் – நாங்கள்; ரயீணாம் – செல்வங்களுக்கு; பதய: – அதிபதிகளாக; ஸ்யாம – திகழ்வோமாக.

10. உயிர்களின் தலைவனான எம்பெருமானே, எல்லா உயிர்களையும் நீயே சூழ்ந்திருக்கிறாய். உன்னைத் தவிர யாரும் இல்லை. நாங்கள் செய்த வேள்விகளுக்கு உரிய பலன்கள் எங்களுக்குக்கிடைக்கட்டும். நாங்கள் செல்வங்களுக்கு அதிபதிகளாகத் திகழ்வோமாக.



# ९. दुर्गा सूक्तम्

तैत्तिरीय आरण्यकम्, 4.10.2

ॐ जातवेदसे सुनवाम सोममरातीयतो निदहाति वेदः ।
स नः पर्षदति दुर्गाणि विश्वा नावेव सिन्धुं दुरिताऽत्यग्निः ।
तामग्निवर्णां तपसा ज्वलन्तीं वैरोचनीं कर्मफलेषु जुष्टाम् ।
दुर्गां देवीगं शरणमहं प्रपद्ये सुतरसि तरसे नमः ॥ १-२ ॥

अग्ने त्वं पारया नव्यो अस्मान्स्वस्तिभिरति दुर्गाणि विश्वा । पूश्च पृथ्वी बहुला न उर्वी भवा तोकाय तनयाय शंयोः ॥ विश्वानि नो दुर्गहा जातवेद-स्सिन्धुं न नावा दुरिताऽतिपर्षि । अग्ने अत्रिवन्मनसा गृणानोऽस्माकं बोध्यविता तनूनाम् ।

पृतना जितगं सहमानमुग्रमग्निगं हुवेम परमाथ्सधस्थात् ।
स नः पर्षदति दुर्गाणि विश्वा क्षामद्देवो अति दुरिताऽत्यग्निः ।

प्रत्नोषि कमीड्यो अध्वरेषु सनाच्च होता नव्यश्च सत्सि ।
स्वांञ्चाग्ने तनुवं पिप्रयस्वास्मभ्यं च सौभगमायजस्व ॥ ५-६ ॥

गोभिर्जुष्टमयुजो निषिक्तं तवेन्द्र विष्णोरनुसंचरेम ।
नाकस्यपृष्ठमभिसंवसानो वैष्णवीं लोक इह मादयन्ताम् ॥ ७ ॥

ॐ कात्यायनाय विद्महे कन्यकुमारि धीमहि । तन्नो दुर्गिः
प्रचोदयात् ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 9. துர்க்கா ஸூக்தம்

*தைத்திரீய ஆரண்யகம், 4. 10. 2*

வாழ்க்கையில் வரும் இடர்பாடுகள் இந்த ஸூக்தத்தை ஓதுவதால் விலகும் என்று நம்பப்படுகிறது. ரிக்வேதத்தில் பல இடங்களில் காணப்படுகின்ற இந்தத் துதிகளுள் பலவும் அக்கினி தேவனைப் போற்றிப் பிரார்த்திப்பவையாக அமைந்துள்ளன. தைத்திரீய ஆரண்யகத்தில் இவை ஒருங்கிணைக்கப் பட்டு துர்க்கா ஸூக்தம் என்ற பெயரில் அமைக்கப் பட்டுள்ளது.

ஓம் ஜாதவேதஸே ஸுனவாம ஸோமமராதீயதோ நிதஹாதி வேத: । ஸ ந: பர்ஷததி துர்காணி விச்வா நாவேவ ஸிந்தும் துரிதாத்யக்னி: ॥ 1 ॥

ஜாதவேதஸே – *அக்கினி தேவனே;* ஸோமம் – *சோமத்தை;* ஸுனவாம – *பிழிந்து படைக்கிறோம்;* வேத: – *அக்கினி தேவன்;* அராதீயத: – *தடைகளை;* நிதஹாதி – *எரிக்கட்டும்;* நாவா – *படகின்மூலம்;* ஸிந்தும் இவ – *கடலைக் கடத்துவிப்பதுபோல்;* ந: – *எங்களை;* விச்வா – *எல்லா;* துர்காணி – *துன்பங் களிலிருந்தும்;* பர்ஷததி – *காக்கட்டும்;* துரிதா – *தவறுகளிலிருந்து;* அக்னி – *அக்கினி தேவன்;* அதி – *காக்கட்டும்.*

1. அக்கினி தேவனே, சோமத்தைப் பிழிந்து ரசத்தை உனக்குப் படைக்கிறோம். வாழ்க்கையில் வரும் தடைகளை அக்கினி தேவன் எரிக்கட்டும். படகின்மூலம் கடலைக் கடத்துவிப்பது போல் எங்களை எல்லா துன்பங்களிலிருந்தும் தவறுகளிலிருந்தும் அக்கினி தேவன் காக்கட்டும்!

தாமக்னிவர்ணாம் தபஸா ஜ்வலந்தீம் வைரோசனீம் கர்மஃபலேஷு ஜுஷ்டாம் । துர்காம் தேவீம் சரணமஹம் ப்ரபத்யே ஸுதரஸி தரஸே நம: ॥ 2 ॥

அக்னி வர்ணாம் – தீ வண்ணம் கொண்டவளும்; தபஸா – தவத்தினால்; ஜ்வலந்தீம் – ஒளிர்பவளும்; வைரோசனீம் – இறைவனுக்கு உரியவளும்; கர்ம ∴பலேஷு – செயல்கள் மற்றும் அதன் பலன்களில்; ஜுஷ்ட்டாம் – ஆற்றலாக உறைபவளுமான; துர்காம்தேவீம் – துர்க்கா தேவியை; அஹம் – நான்; சரணம் ப்ரபத்யே – சரணடைகிறேன்; தரஸே – கரை சேர்ப்பவளே; ஸுதரஸி – கரை சேர்ப்பாய்; நம: – நமஸ்காரம்.

2. தீ வண்ணம் கொண்டவளும், தவத்தினால் ஒளிர் பவளும், இறைவனுக்கு உரியவளும், செயல்கள் மற்றும் அதன் பலன்களில் ஆற்றலாக உறைபவளுமான துர்க்கா தேவியை நான் சரணடைகிறேன். துன்பக் கடலிலிருந்து எங்களைக் கரைசேர்ப்பவளே, எங்களைக் காப்பாய். உனக்கு நமஸ்காரம்!

அக்னே த்வம் ப்ாரயா நவ்யோ அஸ்மான்

ஸ்வஸ்தி பிரதி துர்காணி விச்வா। பூச்ச ப்ருத்வீ

பஹுலா ந உர்வீ பவா தோகாய தன்யாய

சம்யோ: ॥ 3 ॥

அக்னே – அக்கினி தேவனே; த்வம் – நீ; நவ்ய: – போற்றுதலுக்கு உரியவன்; ஸ்வஸ்திபி: – மகிழ்ச்சியான வழிகளின்மூலம்; அஸ்மான் – எங்களை; விச்வா – எல்லா; துர்காணி – துன்பங்களுக்கும்;

*அதி பாரய – அப்பால் எடுத்துச் செல்வாய்; ந: – எங்கள்; பூ: – ஊரும்; ப்ருத்வி – நாடும்; உர்வீ ச – உலகும்; பஹுலா – வளம் கொழிக்கட்டும்; தோகாய – பிள்ளைகளுக்கும்; தனயாய – பிள்ளைகளுக்கும்; சம்யோ: – மகிழ்ச்சியைத் தருபவனாக; பவா – இருப்பாய்.*

3. அக்கினி தேவனே, நீ போற்றுதலுக்கு உரியவன். மகிழ்ச்சியான வழிகளின்மூலம் எங்களை எல்லா துன்பங்களுக்கும் அப்பால் எடுத்துச் செல்வாய். எங்கள் ஊரும், நாடும், உலகும் வளம் கொழிக்கட்டும். எங்கள் பிள்ளைகளுக்கும், அவர்களின் பிள்ளைகளுக்கும் மகிழ்ச்சியைத் தருபவனாக நீ இருப்பாய்!

விச்வானி நோ துர்கஹா ஜாதவேதஸ் ஸிந்தும்
ந நாவா துரிதாதிபர்ஷி । அக்னே அத்ரிவன் மனஸா
க்ருணானோऽஸ்மாகம் போத்யவிதா தனூனாம் ॥ 4 ॥

*ஜாதவேத: – அக்கினிதேவனே; விச்வானி – எல்லா; துர்கஹா – துன்பங்களையும் அழிப்பவனே; ஸிந்தும் நாவா – கடலில் படகின்மூலம்; துரிதா: – துன்பங்களிலிருந்து; ந: – எங்களை; அதிபர்ஷி – காப்பாய்; அக்னே – அக்கினி தேவனே; அஸ்மாகம் – எங்கள்; தனூனாம் – உடம்புகளை; அவிதா – காப்பவனே; மனஸா – மனத்தால்; க்ருணான: –*

மீண்டும்மீண்டும் சொல்கின்ற; அத்ரிவத் – அத்ரி முனிவரைப்போல்; போதி – மனத்தில் கொள்வாய்.

4. அக்கினிதேவனே, எல்லா துன்பங்களையும் அழிப்பவனே, கடலில் தத்தளிப்பவனைப் படகின்மூலம் காப்பாற்றுவதுபோல் துன்பங்களிலிருந்து எங்களைக் காப்பாய். எங்கள் உடம்புகளைக் காப்பவனே! ‘எல்லோரும் மகிழ்ச்சியாக இருக்கட்டும்’ என்று மனத்தால் மீண்டும்மீண்டும் சொல்கின்ற அத்ரி முனிவரைப்போல் எங்கள் நன்மையை மனத்தில் கொள்வாய்!

வேதங்களிலும் புராணங்களிலும் அத்ரி முனிவரின் பெயர் பலமுறை பேசப்படுகிறது. துன்பங்களைக் கடந்தவராக இருந்த அவர், மற்றவர்களும் அவ்வாறே துன்பங்களுக்கு அப்பால் செல்ல வேண்டும் என்ற கருணைவசப்பட்டவராக இருந்தார்.

ப்ருதனா ஜிதக்ம் ஸஹமானமுக்ரமக்னிக்ம்

ஹுவேம பரமாத் ஸதஸ்தாத் | ஸ ந: பர்ஷததி துர்காணி

விச்வா க்ஷாமத்தேவோ அதி துரிதாத்யக்னி: || 5 ||

ப்ருதனாஜிதம் – எதிரிப் படைகளை அழிப்பவனும்; ஸஹமானம் – தாக்குபவனும்; உக்ரம் – உக்கிரமானவனுமான; அக்னிம் – அக்கினி தேவனை; பரமாத் ஸதஸ்யாத் – சபையின் மிக உயர்ந்த இடத்திலிருந்து; ஹுவேம – அழைக்கிறோம்; ஸ: – அந்த; அக்னி: தேவ: – அக்கினி தேவன்; ந: – எங்களை;

விச்வா – எல்லா; துர்காணி – துன்பங்களுக்கும்; க்ஷாமத் – அழியக் கூடியவற்றிற்கும்; துரிதாத் – தவறுகளுக்கும்; அதி – அப்பால்; பர்ஷத் – காக்கட்டும்.

5. எதிரிப் படைகளைத் தாக்குபவனும், அவற்றை அழிப்பவனும், உக்கிரமானவனுமான அக்கினி தேவனை சபையின் மிக உயர்ந்த இடத்திலிருந்து இங்கே எழுந்தருளுமாறு அழைக்கிறோம். அவன் எங்களை எல்லா துன்பங்களுக்கும், அழியக் கூடியவற்றிற்கும், தவறுகளுக்கும் அப்பால் எடுத்துச் செல்லட்டும்; எங்களைக் காக்கட்டும்!

ப்ரத்னோஷி கமீட்யோ அத்வரேஷு ஸனாச்ச
ஹோதா நவ்யச்ச ஸத்ஸி । ஸ்வாம் சாக்னே தனுவம்
பிப்ரயஸ்வாஸ்மப்யம் ச ஸௌபகமாயஜஸ்வ ॥ 6 ॥

அக்னே – அக்கினி தேவனே; அத்வரேஷு – வேள்விகளில்; ஈட்ய: – புகழப்படுகின்ற; கம் – ஆனந்தத்தை; ப்ரத்னோஷி – அதிகரிக்கிறாய்; ஹோதா – வேள்வி செய்பவர்களுள்; ஸனாத் ச – பழைய மற்றும்; நவ்ய ச – புதியவனாக; ஸத்ஸி – இருக்கிறாய்; ஸ்வாம் – உனது; தனுவம் ச – வடிவாக இருக்கின்ற; அஸ்மப்யம் – எங்களுக்கு; பிப்ரயஸ்வ – மகிழ்ச்சியைத் தருவாய்; ச – மேலும்; ஸௌபகம் – நன்மையை; ஆயஜஸ்ய – எல்லா பக்கங்களிலிருந்தும் கொண்டு வருவாய்.

6. அக்கினி தேவனே, வேள்விகளில் புகழப்படுகின்ற நீ எங்கள் ஆனந்தத்தை அதிகரிக்கிறாய். வேள்வி செய்பவர்களுள் பழைய வனாகவும் புதியவனாகவும் நீ இருக்கிறாய். உனது வடிவாக இருக்கின்ற எங்களுக்கு மகிழ்ச்சியைத் தருவாய். எங்களுக்கு எல்லா பக்கங்களிலிருந்தும் நன்மையைக் கொண்டு வருவாய்!

கோபிர்ஜுஷ்ட்டமயுஜோ நிஷிக்தம் தவேந்த்ர விஷ்ணோரனு ஸஞ்சரேம । நாகஸ்ய ப்ருஷ்ட்டமபி ஸம்வஸானோ வைஷ்ணவீம் லோக இஹ மாதயந் தாம் ॥ 7 ॥

இந்த்ர – இறைவா; அயுஜ: – *பாவம் கலவாதவன்;* விஷ்ணோ: – *எங்கும் நிறைந்தவன்;* கோபி: – *பசுக்களுடன்;* ஜுஷ்டம் – *பேரானந்தம்;* நிஷிக்தம் – *ஏராளமாகப் பெற;* தவ – *உன்னை;* அனுஸஞ்சரேம – *பின்தொடர்கிறோம்;* ப்ருஷ்ட்டம் அபி – *உயர்ந்த;* நாகஸ்ய – *தேவருலகில்;* ஸம்வஸான: – *வாழ்கின்ற;* வைஷ்ணவீம் – *விஷ்ணு உருவான தேவியிடம்;* இஹ – *இந்த;* லோகே – *உலகில்;* மாதயந்தாம் – *மகிழ்ச்சியைத் தரட்டும்.*

7. இறைவா, நீ பாவம் கலவாதவன், எங்கும் நிறைந்தவன். ஏராளம் பசுக்களுடன் கூடிய செல்வத்தைப் பெற்று, பேரானந்தம் அனுபவிப்பதற்காக நாங்கள் உன்னைப் பின்தொடர்கிறோம். விஷ்ணு உருவான தேவியிடம் நான் கொண்டுள்ள பக்திக்காக, உயர்ந்த தேவருலகில் வாழ்கின்ற தேவர்கள் இந்த உலகில் எனக்கு மகிழ்ச்சியைத் தரட்டும்!

ஓம் காத்யாயனாய வித்மஹே கன்யகுமாரி தீமஹி । தன்னோ துர்கி: ப்ரசோதயாத் ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

காத்யாயனாய – காத்யாயனி தேவியை; வித்மஹே – அறிந்துகொள்வோம்; கன்யகுமாரி – கன்னியாகுமரி தேவியை; தீமஹி – தியானிப்போம்; தத் துர்கி: – அந்த துர்க்கா தேவி; ந: – நம்மை; ப்ரசோதயாத் – தூண்டட்டும்.

ஓம். காத்யாயனி·தேவியை அறிந்துகொள்வோம். அதற்காக அந்த கன்னியாகுமரி தேவியை தியானிப்போம். அந்த துர்க்கா தேவி நம்மைத் தூண்டுவாளாக!



# १०. देवी सूक्तम्

ऋग्वेद, 10.8.125

ॐ ॥ अहं रुद्रेभिर्वसुभिश्चराम्यहमादित्यैरुत विश्वदेवैः । अहं मित्रावरुणोभा बिभर्म्यहमिन्द्राग्नी अहमश्विनोभा ॥ १ ॥

अहं सोममाहनसं बिभर्म्यहं त्वष्टारमुत पूषणं भगम् । अहं दधामि द्रविणं हविष्मते सुप्राव्ये ए ३ यजमानाय सुन्वते ॥ २ ॥

अहं राष्ट्री संगमनी वसूनां चिकितुषी प्रथमा यज्ञियानाम् । तां मा देवा व्यदधुः पुरुत्रा भूरिस्थात्रां भूर्यावेशयन्तीम् ॥ ३ ॥

मया सोऽअन्नमत्ति यो विपश्यति यः प्राणिति यईं शृणोत्युक्तम् । अमन्तवोमान्त उपक्षियन्ति श्रुधिश्रुत श्रद्धिवं तें वदामि ॥ ४ ॥

अहमेव स्वयमिदं वदामि जुष्टं देवेभिरुत मानुषेभिः । यं कामये तं तमुग्रं कृणोमि तं ब्रह्माणं तमृषिं तं सुमेधाम् ॥ ५ ॥

अहं रुद्राय धनुरातनोमि ब्रह्मद्विषे शरवेहन्त वा उ । अहं जनाय समदं कृणोम्यहं द्यावापृथिवी आविवेश ॥ ६ ॥

अहं सुवे पितरमस्य मूर्धन् मम योनिरप्स्व (अ)१न्तः समुद्रे । ततो वितिष्ठे भुवनानु विश्वो तामूं द्यां वर्ष्मणोप-स्पृशामि ॥ ७ ॥

अहमेव वातइव प्रवाम्यारभमाणा भुवनानि विश्वा । परो दिवापर एना पृथिव्यै तावती महिना संबभूव ॥ ८ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

# 10. தேவீ ஸூக்தம்

*ரிக்வேதம், 10. 8. 125*

தேவிக்கு மிகவும் உகந்ததாக இந்த ஸூக்தம் சொல்லப்படுகிறது. இதன் காரணமாக ஆயிரக்கணக் கானோரால் இந்த ஸூக்தம் தினமும் ஓதப்படுகிறது.

இதனை எழுதியவர் அம்ப்ருணர் என்ற ரிஷியின் மகளாகிய வாக் என்ற பெண் ரிஷி. தனது சாதனைகளின் பலனாக, தேவியுடன் தன்னை ஒன்றாகக் காணுமளவிற்கு உயர்நிலையை அடைந்தவர். அந்த நிலையிலிருந்தே இதனைப் பாடுகிறார்.

ஓம் || அஹம் ருத்ரேபிர் வஸுபிச்சராம்யஹமாதித்-யைருத விச்வ தேவை: | அஹம் மித்ரா வருணோபா பிபர்ம்யஹமிந்த்ராக்னீ அஹமச்வினோபா || 1 ||

அஹம் – நான்; ருத்ரேபி: – ருத்திரர்களுடனும்; வஸுபி: – வசுக்களுடனும்; ஆதித்யை: – ஆதித்தர் களுடனும்; உத – மேலும்; விச்வதேவை: – எல்லா தேவர்களுடனும்; சராமி – சஞ்சரிக்கிறேன்; அஹம் – நான்; மித்ர: – மித்ரன்; வருண: – வருணன்; இந்த்ர: – இந்திரன்; அக்னி: – அக்கினி தேவன்; உபௌ அச்விநௌ – இரண்டு அச்வினி தேவர்களையும்; பிபர்மி – தாங்குகிறேன்.

1. நான் ருத்திரர்களுடனும், வசுக்களுடனும், ஆதித்தர்களுட னும், எல்லா தேவர்களுடனும் சஞ்சரிக்கிறேன். மித்ரன், வருணன், இந்திரன், அக்கினி தேவன் மற்றும் இரண்டு அச்வினி தேவர்களையும் நானே தாங்குகிறேன்.

அஹம் ஸோமமாஹனஸம் பிபர்ம்யஹம்

த்வஷ்ட்டாரமுத பூஷணம் பகம் । அஹம் த்தாமி

த்ரவிணம் ஹவிஷ்மதே ஸுப்ராவ்யேஏ3 யஜமானாய

ஸுன்வதே ॥ 2 ॥

ஆஹனஸம் – *எதிரிகளை அழிப்பவனான;* ஸோமம் – *சோமனையும்;* த்வஷ்ட்டாரம் – *த்வஷ்ட்டாவை யும்;* பூஷணம் – *பூஷணையும்;* பகம் – *பகனையும்;* பிபர்மி – *தாங்குகிறேன்;* ஹவிஷ்மதே – *ஆஹுதி அளிப்பவனும்;* ஸுன்வதே – *பிழிபவனும்;* ஸுப்ராவ்யே – *பெறச் செய்பவனுமான;* யஜமானாய – *எஜமானுக்கு;* அஹம் – *நான்;* த்ரவிணம் – *செல்வத்தை;* ததாமி – *அளிக்கிறேன்.*

2. எதிரிகளை அழிப்பவனான சோமனையும், த்வஷ்ட்டாவை யும், பூஷணையும், பகனையும் நானே தாங்குகிறேன். வேள்வியில் ஆஹுதி அளிப்பவனும், சோமரசத்தைப் பிழிபவனும், ஆஹுதியை தேவர்கள் பெறச் செய்பவனுமான யாக எஜமானுக்கு, அதாவது யாகம் செய்பவனுக்கு நான் செல்வத்தை அளிக்கிறேன்.

அஹம் ராஷ்ட்ரீ ஸங்கமனீ வஸூனாம் சிகிதுஷீ ப்ரதமா யஜ்ஞியானாம்। தாம் மா தேவா வ்யததுः புருத்ரா பூரிஸ்தாத்ராம் பூர்யாவேசயந்தீம் ॥ 3 ॥

அஹம் – *நான்;* ராஷ்ட்ரீ – *பிரபஞ்சத்தின் தலைவி;* ஸங்கமனீ – *அளிக்கிறேன்;* வஸூனாம் – *செல்வத்தை;* சிகிதுஷீ – *எல்லாம் அறிந்தவள்;* யஜ்ஞியானாம் – *வழிபடத்தக்கவர்களுள்;* ப்ரதமா – *முதன்மையானவள்;* பூரிஸ்தாத்ராம் – *பல வடிவங்களைத் தாங்கி;* பூர்யா ஆவேசயந்தீம் – *பல வழிகளில் நுழைகிறேன்;* தாம் மா – *அதனால் என்னை;* தேவாः – *தேவர்கள்;* புருத்ரா – *பல இடங்களில்;* வ்யததுः – *நிறுவியுள்ளனர்.*

3. நான் பிரபஞ்சத்தின் தலைவி. என்னை வழிபடுபவர்களுக்கு நான் செல்வத்தை அளிக்கிறேன். நான் எல்லாம் அறிந்தவள், வழிபடத்தக்கவர்களுள் முதன்மையானவள். பல வடிவங்களைத் தாங்கி, பல வழிகளில் உயிர்களில் ஆன்மாவாக நான் நுழைகிறேன். அதனால் என்னை தேவர்கள் பல இடங்களில் நிறுவியுள்ளனர்.

மயா ஸோऽன்னமத்தி யோ விபச்யதி யः ப்ராணிதி ய ஈம் ச்ருணோத்யுக்தம்। அமந்தவோமாந்த உபக்ஷியந்தி ச்ருதிச்ருத ச்ரத்திவந்தே வதாமி ॥ 4 ॥

யஃ-யார்; அன்னம்-உணவை; அத்தி-உண்கிறாரோ; விபச்யதி - பார்க்கிறாரோ; யஃ - யார்; ப்ராணிதி - சுவாசிக்கிறாரோ; உக்தம் - பேசப்பட்டதை; யஃ ஈம் - யார்; ச்ருணோதி - கேட்கிறாரோ; ஸஃ - அவர்; மயா - என்மூலமே; மாம் - என்னை; தே அமந்தவஃ - அறியாதவர்கள்; உபக்ஷியந்தி - அழிகிறார்கள்; ச்ருத - அன்பனே; ச்ரத்திவன் - சிரத்தை உடைய; தே - உனக்கு; வதாமி - சொல்கிறேன்; ச்ருதி - கேள்.

4. யார் உணவை உண்கிறாரோ, யார் பார்க்கிறாரோ, சுவாசிக்கிறாரோ, பேசப்பட்டதைக் கேட்கிறாரோ, அவர் என்மூலமே அதையெல்லாம் செய்கிறார். என்னை அறியாதவர்கள் அழிகிறார்கள். அன்பனே, சிரத்தை உடைய உனக்குச் சொல்கிறேன் கேள்.

அஹமேவ ஸ்வயமிதம் வதாமி ஜுஷ்டம் தேவேபிருத மானுஷேபிஃ । யம் காமயே தம் தமுக்ரம் க்ருணோமி தம் ப்ரஹ்மாணம் தம் ரிஷிம் தம் ஸுமேதாம் ॥ 5 ॥

இதம் - இவையெல்லாம்; ஸ்வயம் அஹம் ஏவ - நானே; வதாமி - சொல்கிறேன்; தேவேபிஃ - தேவர்களாலும்; உத மானுஷேபிஃ - மனிதர்களாலும்; ஜுஷ்டம் - வழிபடப்பட்டவள்; யம் - யாரை; காமயே - விரும்புகிறேனோ; தம்தம் - அவனை;

உக்ரம் – அனைவரிலும் உயர்ந்தவனாக; தம் – அவனை; ப்ரஹ்மாணம் – பிரம்ம நிலை அடைந்தவனாக; தம் – அவனை; ரிஷிம் – ரிஷியாக; தம் – அவனை; ஸுமேதாம் – சிறந்த மேதையாக; க்ருணோமி – ஆக்குகிறேன்.

5. இவையெல்லாம் நானே என்று சொல்கிறேன். தேவர்களாலும் மனிதர்களாலும் வழிபடப்பட்டவள் நானே. யாரை நான் விரும்புகிறேனோ அவனை அனைவரிலும் உயர்ந்தவனாக, பிரம்ம நிலை அடைந்தவனாக, ரிஷியாக, சிறந்த மேதையாக ஆக்குகிறேன்.

அஹம் ருத்ராய தனுராதனோமி ப்ரஹ்மத்விஷே
சரவேஹந்த வா உ । அஹம் ஜனாய ஸமதம்
க்ருணோம்யஹம் த்யாவா ப்ருதிவீ ஆவிவேச ॥ 6 ॥

ப்ரஹ்ம த்விஷே – நன்மையை வெறுக்கின்ற; சரவே – எதிரிகளை; ஹந்தவா உ – கொல்வதற்காக; ருத்ராய – ருத்திரனின்; தனு: – வில்லை; அஹம் – நான்; ஆதனோமி – வளைக்கிறேன்; அஹம் – நான்; ஜனாய – மக்களுக்காக; ஸமதம் க்ருணோமி – எதிரிகளை எதிர்க்கிறேன்; அஹம் – நான்; த்யாவா – விண்ணிலும்; ப்ருத்வீ – மண்ணிலும்; ஆவிவேச – புகுந்து நிறைந்திருக்கிறேன்.

6. நன்மையை வெறுக்கின்ற எதிரிகளைக் கொல்வதற்காக ருத்திரனின் வில்லை நான் வளைக்கிறேன். நான் மக்களுக்காகவே எதிரிகளை எதிர்க்கிறேன். நான் விண்ணிலும் மண்ணிலும் புகுந்து நிறைந்திருக்கிறேன்.

அஹம் ஸுவே பிதரமஸ்ய மூர்தன் மம யோனி-
ரப்ஸ்வ (அ)ந்த: ஸமுத்ரே | ததோ விதிஷ்ட்டே
புவனானு விச்வோ தாமூம் த்யாம் வர்ஷ்மணோப-
ஸ்ப்ருசாமி || 7 ||

அஸ்ய – இந்த பூமிக்கு; மூர்தன் – மேலே உள்ள; பிதரம் – தந்தைக்குச் சமமான; ஸுவே – வானத்தை; அஹம் – நான்; மம – எனது; யோனி: – படைப்பாற்றல்; அப்ஸு – நீரிலும்; ஸமுத்ரே – கடலிலும்; அந்த: – உள்ளே உள்ளது; தத: – அதனால்; விச்வ: புவனானு – எல்லா உலகங்களிலும்; விதிஷ்ட்டே – நிறைந்திருக்கிறேன்; தாமூம் – அதுபோல்; த்யாம் – வானையும்; வர்ஷ்மண: – உடலால்; உப ஸ்ப்ருசாமி – தொடுகிறேன்.

7. இந்தப் பூமிக்கு மேலே உள்ளதும் தந்தைக்குச் சமமானதுமான வானத்தை நான் படைத்தேன். எனது படைப்பாற்றல் நீரிலும் கடலிலும் உள்ளே உள்ளது. அதனால் எல்லா உலகங்களிலும் நான் நிறைந்திருக்கிறேன். அதுபோல் வானையும் என் உடலால் தொடுகிறேன்.

அஹமேவ வாதஇவ ப்ரவாம்யாரபமாணா

புவனானி விச்வா । பரோ திவாபர ஏனா ப்ருதிவ்யை

தாவதீ மஹினா ஸம்பபூவ ॥ 8 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

விச்வா புவனானி – *உலகங்களையெல்லாம்;* ஆரபமாணா – *படைக்கத் தொடங்கும்போது;* அஹம் ஏவ – *நானே;* வாத இவ – *காற்றைப்போல்;* ப்ரவாமி – *இயங்குகிறேன்;* திவாபர: – *வானைவிட மேலானவள்;* தாவதீ – *இவ்வாறெல்லாம்;* மஹினா – *என் மகிமை;* ஸம்பபூவ – *உள்ளது.*

8. உலகங்களையெல்லாம் படைக்கத் தொடங்கும்போது நானே காற்றைப்போல் இயங்குகிறேன். நான் வானைவிட உயர்ந்தவள், இந்த பூமியைவிட மேலானவள். இவ்வாறெல்லாம் என் மகிமை உள்ளது.



# ११. श्री सूक्तम्

ॐ ॥ हिरण्यवर्णां हरिणीं सुवर्णरजतस्रजाम् । चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह ॥ तां म आवह जात-वेदो लक्ष्मीमनपगामिनीम् । यस्यां हिरण्यं विन्देयं गामश्वं पुरुषानहम् ॥ १-२ ॥

अश्वपूर्वां रथमध्यां हस्तिनादप्रबोधिनीम् । श्रियं देवीमुपह्वये श्रीर्मा देवीर्जुषताम् ॥ कां सोस्मितां हिरण्यप्राकारामार्द्रां ज्वलन्तीं तृप्तां तर्पयन्तीम् । पद्मे स्थितां पद्मवर्णां तामिहोपह्वये श्रियम् ॥ ३-४ ॥

चन्द्रां प्रभासां यशसा ज्वलंतीं श्रियं लोके देवजुष्टामुदाराम् । तां पद्मिनीमीं शरणमहं प्रपद्येऽलक्ष्मीर्मे नश्यतां त्वां वृणे ॥ आदित्यवर्णे तपसोऽधिजातो वनस्पतिस्तव वृक्षोऽथ

बिल्वः । तस्य फलानि तपसा नुदन्तु मायान्तरायाश्च बाह्या अलक्ष्मीः ॥ ५-६ ॥

उपैतु मां देवसखः कीर्तिश्च मणिना सह । प्रादुर्भूतोस्मि राष्ट्रेऽस्मिन् कीर्तिमृद्धिं ददातु मे ॥ क्षुत्पिपासामलां ज्येष्ठामलक्ष्मीं नाशयाम्यहम् । अभूतिमसमृद्धिं च सर्वां निर्णुद मे गृहात् ॥ ६-७ ॥

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् । ईश्वरीगं सर्वभूतानां तामिहोपह्वये श्रियम् । मनसः काममाकूतिं वाचस्सत्यमशीमहि । पशूनां रूपमन्नस्य मयि श्रीः श्रयतां यशः ॥ ८-१० ॥

कर्दमेन प्रजाभूता मयि संभव कर्दम । श्रियं वासय मे कुले मातरं पद्ममालिनीम् ॥ आपः सृजन्तु स्निग्धानि चिक्लीत वस मे गृहे । नि च देवीं मातरं श्रियं वासय मे कुले ॥ ११-१२ ॥

आर्द्रां पुष्करिणीं पुष्टिं पिङ्गलां पद्ममालिनीम् । चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह ॥ आर्द्रां यः करिणीं यष्टिं सुवर्णां हेममालिनीम् । सूर्यां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह । तां म आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम् । यस्यां हिरण्यं प्रभूतं गावो दास्योऽश्वान्, विन्देयं पुरुषानहम् ॥ १३-१५ ॥

यः शुचिः प्रयतो भूत्वा जुहुयादाज्य मन्वहम् । श्रियः पञ्चदशर्चं च श्रीकामः सततं जपेत् । आनन्दः कर्दमश्चैव चिक्लीत इति विश्रुताः । ऋषयस्ते त्रयः प्रोक्तास्स्वयं श्रीरेव देवता ॥ १६-१७ ॥

पद्मानने पद्म ऊरू पद्माक्षी पद्मसंभवे । त्वं मां भजस्व पद्माक्षी येन सौख्यं लभाम्यहम् ॥ अश्वदायी गोदायी धनदायी महाधने । धनं मे जुषतां देवि सर्वकामांश्च देहि मे ॥ पुत्रपौत्र धनं धान्यं हस्त्यश्वादिगवे रथम् । प्रजानां भवसि माता आयुष्मन्तं करोतु माम् ॥ १८-२० ॥

धनमग्निर्धनं वायुर्धनं सूर्यो धनं वसुः । धनमिन्द्रो बृहस्पतिर्वरुणं धनमश्नु ते ॥ २१ ॥

चन्द्राभां लक्ष्मीमीशानां सूर्याभां श्रियमीश्वरीम् । चन्द्रसूर्याग्निवर्णाभां श्रीमहालक्ष्मीमुपास्महे ॥ २२ ॥

वैनतेय सोमं पिब सोमं पिबतु वृत्रहा । सोमं धनस्य सोमिनो मह्यं ददातु सोमिनः ॥ न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभा मतिः । भवन्ति कृतपुण्यानां भक्तानां श्रीसूक्तं जपेत्सदा ॥ वर्षन्तु ते विभावरि दिवो अभ्रस्य विद्युतः । रोहन्तु सर्वबीजान्यव ब्रह्म द्विषो जहि ॥ २३-२५ ॥

पद्मप्रिये पद्मिनि पद्महस्ते पद्मालये पद्मदलायताक्षि । विश्वप्रिये विष्णु मनोऽनुकूले त्वत्पादपद्मं मयि सन्निधत्स्व ॥ २६ ॥

या सा पद्मासनस्था विपुलकटितटी पद्मपत्रायताक्षी । गम्भीरा वर्तनाभिः स्तनभर नमिता शुभ्र वस्त्रोत्तरीया ॥

लक्ष्मीर्दिव्यै र्गजेन्द्रैर्मणिगण खचितैस्स्नापिता हेमकुम्भैः । नित्यं सा पद्महस्ता मम वसतु गृहे सर्वमाङ्गल्ययुक्ता ॥ २७ ॥

लक्ष्मीं क्षीरसमुद्र राजतनयां श्रीरङ्गधामेश्वरीम् । दासी-भूतसमस्त देव वनितां लोकैक दीपांकुराम् । श्रीमन्मन्द-कटाक्षलब्ध विभव ब्रह्मेन्द्रगङ्गाधरां । त्वां त्रैलोक्य कुटुम्बिनीं सरसिजां वन्दे मुकुन्दप्रियाम् ॥ २८ ॥

सिद्धलक्ष्मी र्मोक्षलक्ष्मी र्जयलक्ष्मीस्सरस्वती । श्रीलक्ष्मीर्वर लक्ष्मीश्च प्रसन्ना मम सर्वदा । वरांकुशौ पाशमभीतिमुद्रां करैर्वहन्तीं कमलासनस्थाम् । बालार्क कोटि प्रतिभां त्रिणेत्रां भजेहमाद्यां जगदीश्वरीं त्वाम् ॥ २९-३० ॥

सर्वमङ्गलमाङ्गल्ये शिवे सर्वार्थ साधिके । शरण्ये त्र्यम्बके देवि नारायणि नमोऽस्तु ते । नारायणि नमोऽस्तु ते । नारायणि नमोऽस्तु ते ॥ ३१ ॥

सरसिज-निलये सरोजहस्ते धवलतरांशुक गन्धमाल्य-शोभे । भगवति हरिवल्लभे मनोज्ञे त्रिभुवनभूतिकरि प्रसीद मह्यम् ॥ ३२ ॥

विष्णुपत्नीं क्षमां देवीं माधवीं माधवप्रियाम् । विष्णोः प्रियसखीं देवीं नमाम्यच्युतवल्लभाम् ॥ ३३ ॥

ॐ महालक्ष्मी च विद्महे विष्णुपत्नी च धीमहि । तन्नो लक्ष्मीः प्रचोदयात् ॐ ॥ ३४ ॥

श्रीवर्चस्यमायुष्यमारोग्यमाविधात् पवमानं महीयते । धनं धान्यं पशुं बहुपुत्रलाभं शतसंवत्सरं दीर्घमायुः ॥ ऋणरोगादिदारिद्र्यपापक्षुदपमृत्यवः । भयशोकमनस्तापा नश्यन्तु मम सर्वदा ॥ ३५ ॥

श्रिये जात श्रिय आनिर्याय श्रियं वयो जरितृभ्यो दधातु । श्रियं वसाना अमृतत्वमायन् भजंति सद्यः संविता विदध्यून् ॥ श्रिय एवैनं तच्छ्रियामादधाति ।

सन्ततमृचा वंषट्कृत्यं सन्धत्तं संधीयते प्रजया पशुभिः ।

य एवं वेद ॥ ३६-३७ ॥

ॐ महादेव्यै च विद्महे विष्णुपत्नी च धीमहि । तन्नो लक्ष्मीः

प्रचोदयात् ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 11. ஸ்ரீஸூக்தம்

வேதங்களிலும் புராணங்களிலும் காணப்படுகின்ற மகாலட்சுமி துதிகளின் தொகுப்பே ஸ்ரீஸூக்தம். இது தென்னாட்டில் மிகவும் பிரபலமானது. இதனைப் பாராயணம் செய்வது மகாலட்சுமியின் பரிபூரண அருளைப் பெற்றுத் தரும் என்பது நம்பிக்கை.

ஓம் ॥ ஹிரண்ய வர்ணாம் ஹரிணீம் ஸுவர்ண

ரஜதஸ்ரஜாம் । சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம்

ஜாதவேதோ ம ஆவஹ ॥ 1 ॥

ஜாதவேத: - *அக்கினி தேவனே; ஹிரண்ய* வர்ணாம் - *பொன் நிறத்தவளும்;* ஹரிணீம் - *பாவங்களைப் போக்குபவளும்;* ஸுவர்ண ரஜத

ஸ்ரஜாம் – *பொன் வெள்ளி மாலைகளை அணிந்த வளும்;* சந்த்ராம் – *நிலவு போன்றவளும்;* ஹிரண் மயீம் – *பொன்மயமானவளுமான;* லக்ஷ்மீம் – *மகா லட்சுமியை;* மே – *என்னிடம்;* ஆவஹ – *எழுந்தருளச் செய்வாய்.*

1. அக்கினி தேவனே, பொன் நிறத்தவளும், பாவங்களைப் போக்குபவளும், பொன் வெள்ளி மாலைகளை அணிந்தவளும், நிலவு போன்றவளும், பொன்மயமானவளுமான மகாலட்சுமியை என்னிடம் எழுந்தருளச் செய்வாய்!

தாம் ம ஆவ்ஹ ஜாதவேதோ லக்ஷ்மீ

மனபகாமினீம் । யஸ்யாம் ஹிர்ண்யம் விந்தேயம்

காமச்வம் புருஷானஹம் ॥ 2 ॥

ஜாதவேத: – *அக்கினி தேவனே;* அஹம் – *நான்;* ஹிரண்யம் – *பொன்னையும்;* காம் – *பசுக்களையும்;* அச்வம் – *குதிரைகளையும்;* புருஷான் – *உறவினரை யும்;* விந்தேயம் – *பெறுவேனோ;* தாம் – *அந்த;* லக்ஷ்மீம் – *மகாலட்சுமியை;* யஸ்யாம் அனபகாமினீம் – *என்னிடமிருந்து விலகாதிருப்பவளை;* மே – *என்னிடம்;* ஆவஹ – *எழுந்தருளச் செய்வாய்.*

2. அக்கினிதேவனே, யாருடைய அருளால் நான் பொன்னையும் பசுக்களையும் குதிரைகளையும் உறவினரையும் பெறுவேனோ, அந்த மகாலட்சுமியை என்னிடம் எழுந்தருளச் செய்வாய், அவள் என்னிடமிருந்து விலகாதிருக்கச் செய்வாய்!

அச்வ பூர்வாம் ரதமத்யாம் ஹஸ்திநாத ப்ரபோதினீம் | ச்ரியம் தேவீமுபஹ்வயே ஸ்ரீர்மா தேவீர் ஜுஷதாம் || 3 ||

அச்வ பூர்வாம் – *முன்னால் குதிரைகளும்;* ரத மத்யாம் – *நடுவில் ரதங்களும்;* ஹஸ்தி நாத ப்ரபோதினீம் – *யானைகளின் ஒலியை அறிகுறியாகக் கொண்டவளு மான;* ச்ரியம் தேவீம் – *ஸ்ரீதேவியை;* உபஹ்வயே – *அழைக்கிறேன்;* ஸ்ரீ: தேவீ – *திருமகளே;* மா ஜுஷதாம் – *என்னிடம் மகிழ்ந்து உறைவாய்.*

3. முன்னால் குதிரைகள் நடுவில் ரதங்கள் புடைசூழ வருபவளும், யானைகளின் ஒலியைத் தன் வரவின் அறிகுறியாகக் கொண்டவளுமான ஸ்ரீதேவியை அழைக்கிறேன். திருமகளே, நீ என்னிடம் மகிழ்ந்து உறைவாய்!

காம் ஸோஸ்மிதாம் ஹிரண்ய ப்ராகாராமார்த்ராம் ஜ்வலந்தீம் த்ருப்தாம் தர்ப்பயந்தீம் | பத்மே ஸ்திதாம் பத்ம வர்ணாம் தாமிஹோபஹ்வயே ச்ரியம் || 4 ||

ஸ்மிதாம் – *புன்முறுவல் தவழ்பவளும்;* ஹிரண்ய ப்ராகாராம் – *பொன்கோட்டையில் உறைபவளும்;* ஆர்த்ராம் – *கருணை நிறைந்தவளும்;* ஜ்வலந்தீம் – *ஒளி பொருந்தியவளும்;* த்ருப்தாம் – *மகிழ்ச்சி நிறைந்த வளும்;* தர்ப்பயந்தீம் – *மகிழ்ச்சியைத் தருபவளும்;*

பத்மே – *தாமரையில்;* ஸ்திதாம் – *வீற்றிருப்பவளும்;* பத்ம வர்ணாம் – *தாமரை நிறத்தவளும்;* காம் – *யாரோ;* தாம் ச்ரியம் – *அந்தத் திருமகளை;* இஹ – *இங்கே* உபஹ்வயே – *பிரார்த்திக்கிறேன்.*

4. புன்முறுவல் தவழ்பவளும், பொன்கோட்டையில் உறைபவளும், கருணை நிறைந்தவளும், ஒளி பொருந்தியவளும், மகிழ்ச்சி நிறைந்தவளும், மகிழ்ச்சியைத் தருபவளும், தாமரையில் வீற்றிருப்பவளும், தாமரை நிறத்தவளும் ஆனவள் யாரோ அந்தத் திருமகளை இங்கே எழுந்தருளுமாறு பிரார்த்திக்கிறேன்!

சந்த்ராம் ப்ரபாஸாம் யசஸா ஜ்வலந்தீம் ச்ரியம் லோகே தேவ ஜுஷ்ட்டாமுதாராம் । தாம் பத்மினீமீம் சரணமஹம் ப்ரபத்யேऽலக்ஷ்மீர்மே நச்யதாம் த்வாம் வ்ருணே ॥ 5 ॥

லோகே – *உலகினருக்கு;* சந்த்ராம் – *சந்திரனைப் போன்றவளும்;* ப்ரபாஸாம் – *ஒளிமிக்கவளும்;* யசஸா – *மகிமையால்;* ஜ்வலந்தீம் – *சுடர்விட்டுப் பிரகாசிப்பவளும்;* தேவ ஜுஷ்ட்டாம் – *தேவர்களால் வழிபடப் பெறுபவளும்;* உதாராம் – *கருணை மிக்கவளும்;* பத்மினீம் – *தாமரையைத் தாங்கிய வளும்;* ஈம் – *ஈம் என்ற பீஜமந்திரத்தின் பொருளாகத் திகழ்பவளுமான;* தாம் ச்ரியம் – *அந்த மஹாலட்சுமியை;* அஹம் – *நான்;* சரணம் ப்ரபத்யே – *சரணடைகிறேன்;*

த்வாம் –உன்னை; வ்ருணே – வேண்டுகிறேன்; மே – என்னிடமிருந்து; அலக்ஷ்மீ: – வறுமை; நச்யதாம் – விலக்கட்டும்.

5. சந்திரனைப் போன்றவளும், ஒளிமிக்கவளும், தன் மகிமையால் சுடர்விட்டுப் பிரகாசிப்பவளும், தேவர்களால் வழிபடப் பெறுபவளும், கருணை மிக்கவளும், தாமரையைத் தாங்கியவளும், ஈம் என்ற பீஜமந்திரத்தின் பொருளாகத் திகழ்பவளுமான அந்த மகாலட்சுமியை நான் சரணடைகிறேன். தேவியே உன்னை வேண்டுகிறேன்— எனது வறுமை விலகுமாறு அருள்வாய்!

ஆதித்ய வர்ணே தபஸோऽதிஜாதோ வனஸ்பதிஸ்தவ வ்ருக்ஷோऽத பில்வ: । தஸ்ய ∴பலானி தபஸா நுதந்து மாயாந்தராயாச்ச பாஹ்யா அலக்ஷ்மீ: ॥ 6 ॥

ஆதித்ய வர்ணே – சூரியனின் நிறத்தவளே; தவ – உனது; தபஸ: – தவத்தால்; வனஸ்பதி: – காட்டிற்குத் தலைவனாகிய; பில்வ: வ்ருக்ஷ: – வில்வ மரம்; அதிஜாத: – உண்டாயிற்று; அத – அதுபோல்; தபஸா – தவத்தால்; தஸ்ய – அதன்; ∴பலானி – பழங்கள்; மாயா – அறியாமையாகிய; அந்தராயா: – அகத் தடையையும்; அலக்ஷ்மீ – அமங்கலமாகிய; பாஹ்யா – புறத் தடையையும்; நுதந்து – அழிக்கட்டும்.

6. சூரியனின் நிறத்தவளே, காட்டிற்குத் தலைவனாகிய வில்வ மரம் உன் தவத்தால் உண்டாயிற்று. அதன் பழங்கள் அறியாமை யாகிய அகத் தடையையும், அமங்கலமாகிய புறத் தடையையும் உன் தவத்தாலேயே அழிக்கட்டும்!

உபைது மாம் தேவஸக: கீர்த்திச்ச மணினா ஸஹ ।
ப்ராதுர் பூதோऽஸ்மி ராஷ்ட்ரேऽஸ்மின் கீர்த்திம்ருத்திம்
ததாது மே ॥ 7 ॥

தேவஸக: – குபேரனும்; கீர்த்தி: ச – *புகழின் தேவனும்;* மணினா ஸஹ – *செல்வங்களுடன்;* மாம் – *என்னை;* உபைது – *நாடி வர வேண்டும்;* அஸ்மின் – *இந்த;* ராஷ்ட்ரே – *நாட்டில்;* ப்ராதுர் பூத:அஸ்மி – *பிறந்திருக்கிறேன்;* மே – *எனக்கு;* கீர்த்திம் – *பெருமையும்;* ரித்திம் – *செல்வமும்;* ததாது – *தருவாய்.*

7. குபேரனும், புகழின் தேவனும் செல்வங்களுடன் என்னை நாடி வர வேண்டும். உன் அருள் நிறைந்த இந்த நாட்டில் பிறந்திருக்கிறேன். எனக்குப் பெருமையும் செல்வமும் தருவாய்!

க்ஷுத்பிபாஸாமலாம் ஜ்யேஷ்டாமலக்ஷ்மீம்
நாசயாம்யஹம் । அபூதிமஸம்ருத்திம் ச ஸர்வாம்
நிர்ணுத மே க்ருஹாத் ॥ 8 ॥

க்ஷுத்பிபாஸாமலாம் – பசி தாகத்தினால் மெலிந்தவளும்; ஜ்யேஷ்ட்டாம் – முன்னால் பிறந்தவளுமான; அலக்ஷ்மீம் – மூதேவியை; அஹம் – நான்; நாசயாமி – விலக்குகிறேன்; மே க்ருஹாத் – என் வீட்டிலிருந்து; ஸர்வாம் – எல்லா; அபூதிம் – ஏழ்மையையும்; அஸம்ருத்திம் ச – வறுமையையும்; நிர்ணுத – அகற்றி அருள்வாய்.

8. பசி தாகத்தினால் மெலிந்தவளும், ஸ்ரீதேவிக்கு முன்னால் பிறந்தவளுமான மூதேவியை நான் விலக்குகிறேன். என் வீட்டிலிருந்து எல்லா ஏழ்மையையும் வறுமையையும் அகற்றி அருள்வாய்!

கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்ய புஷ்ட்டாம் கரீஷிணீம் । ஈச்வரீக்ம் ஸர்வபூதானாம் தாமி-ஹோபஹ்வயே ச்ரியம் ॥ 9 ॥

கந்த த்வாராம் – நறுமணத்தின் இருப்பிடமானவளும்; துராதர்ஷாம் – வெல்லப்பட முடியாதவளும்; நித்ய புஷ்ட்டாம் – என்றும் வலிமையைத் தருபவளும்; கரீஷிணீம் – எல்லாம் நிறைந்தவளும்; ஸர்வ பூதானாம் – எல்லா உயிர்களின்; ஈச்வரீம் – தலைவியுமான; தாம் ச்ரியம் – அந்த மகாலட்சுமியை; இஹ – இங்கே; உபஹ்வயே – எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன்.

9. நறுமணத்தின் இருப்பிடமானவளும், வெல்லப்பட முடியாதவளும், என்றும் வலிமையைத் தருபவளும், எல்லாம் நிறைந்தவளும், எல்லா உயிர்களின் தலைவியுமான மகா லட்சுமியை இங்கே எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன்.

மனஸ: காமமாகூதிம் வாசஸ்ஸத்யமசீமஹி ।
பசூனாம் ரூபமன்னஸ்ய மயி ஸ்ரீ: ச்ரயதாம் யச: ॥ 10 ॥

ஸ்ரீ: – *திருமகளே;* மனஸ: – *மனத்தில் எழும்;* காமம் – *ஆசைகளையும்;* ஆகூதிம் – *மகிழ்ச்சியையும்;* வாச: – *வாக்கில்;* ஸத்யம் – *உண்மையையும்;* பசூனாம் – *பசுக்களினாலும்;* அன்னஸ்ய – *உணவினாலும்;* அசீமஹி – *அனுபவிக்க வேண்டும்;* மயி – *எனக்கு;* யச: – *கீர்த்தி;* ச்ரயதாம் – *உண்டாகட்டும்.*

10. திருமகளே, மனத்தில் எழுகின்ற நல்ல ஆசைகளையும், மகிழ்ச்சியையும், வாக்கில் உண்மையையும், பசுக்களின் நிறைவால் மற்றும் உணவின் நிறைவால் ஏற்படுகின்ற இன்பத்தையும் நான் அனுபவிக்க வேண்டும். எனக்கு கீர்த்தி உண்டாகட்டும்!

கர்தமேன ப்ரஜா பூதா மயி ஸம்பவ கர்தம । ச்ரியம்
வாஸய மே குலே மாதரம் பத்மமாலினீம் ॥ 11 ॥

கர்தம – *கர்தம முனிவரே;* கர்தமேன – *கர்தமராகிய உமக்கு;* ப்ரஜா பூதா – *மகளாகப் பிறந்த மகாலட்சுமி;*

மயி – என்னிடம்; ஸம்பவ – தோன்ற வேண்டும்; பத்மமாலினீம் – தாமரை மாலை அணிந்தவளும்; ச்ரியம் – செல்வத்தின் தலைவியும்; மாதரம் – அன்னையும்; மே – என்; குலே – குலத்தில்; வாஸய – தங்கச்செய்ய வேண்டும்.

11. கர்தம முனிவரே! உமக்கு மகளாகப் பிறந்த மகாலட்சுமி என்னிடம் வர வேண்டும். தாமரை மாலை அணிந்தவளும், செல்வத்தின் தலைவியும், அன்னையும் ஆகிய அவளை என் குலத்தில் தங்கச் செய்ய வேண்டும்!

ஆப: ஸ்ருஜந்து ஸ்னிக்தானி சிக்லீத வஸ மே க்ருஹே । நி ச தேவீம் மாதரம் ச்ரியம் வாஸய மே குலே ॥ 12 ॥

சிக்லீத – சிக்லீதரே; ஆப: – தண்ணீர்; ஸ்னிக்தானி – நல்ல உணவுப் பொருட்களை; ஸ்ருஜந்து – உற்பத்தி செய்யட்டும்; மே – என்; க்ருஹே – வீட்டில்; வஸ – வசிக்க வேண்டும்; ச – மேலும்; தேவீ – தேவியும்; மாதரம் – அன்னையுமான; ச்ரியம் – திருமகளை; மே – என்; குலே – குலத்தில்; நிவாஸய – வாழும்படி அருள வேண்டும்.

12. திருமகளின் மகனான சிக்லீதரே! தண்ணீர் நல்ல உணவுப் பொருட்களை உற்பத்தி செய்யட்டும். என் வீட்டில் நீங்கள் வசிக்க வேண்டும். தேவியும் உமது அன்னையுமான திருமகளை என் குலத்தில் வாழும்படி அருள வேண்டும்!

ஆர்த்ராம் புஷ்கரிணீம் புஷ்ட்டிம் பிங்கலாம் பத்மமாலினீம் | சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ ம ஆவஹ || 13 ||

ஜாதவேத: - *அக்கினி தேவனே;* ஆர்த்ராம் - *கருணை மனத்தவளும்;* புஷ்கரிணீம் - *தாமரையில் உறைபவளும்;* புஷ்ட்டிம் - *உணவூட்டி வளர்ப்பவளும்;* பிங்கலாம் - *குங்கும நிறத்தவளும்;* பத்ம மாலினீம் - *தாமரை மாலை அணிந்தவளும்;* சந்த்ராம் - *சந்திரனைப் போன்றவளும்;* ஹிரண்மயீம் - *பொன்மயமானவளுமான;* லக்ஷ்மீம் - *மகாலட்சுமியை;* மே - *என்னிடம்;* ஆவஹ - *எழுந்தருளச் செய்ய வேண்டும்.*

13. அக்கினி தேவனே! கருணை மனத்தவளும், தாமரையில் உறைபவளும், உலகை உணவூட்டி வளர்ப்பவளும், குங்கும நிறத்தினளும், தாமரை மாலை அணிந்தவளும், பொன்மயமானவளுமான மகாலட்சுமியை என்னிடம் எழுந்தருளச் செய்ய வேண்டும்!

ஆர்த்ராம் ய: கரிணீம் யஷ்ட்டிம் ஸுவர்ணாம் ஹேமமாலினீம் | ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ ம ஆவஹ || 14 ||

ஜாதவேத: - அக்கினி தேவனே; ய: - யார்; ஆர்த்ராம் - கருணை மனத்தவளும்; கரிணீம் - கம்பீரமானவளும்; யஷ்ட்டிம் - செங்கோல் ஏந்திய வளும்; ஸுவர்ணாம் - அழகிய நிறத்தவளும்; ஹேமமாலினீம் - பொன்மாலை அணிந்தவளும்; ஸூர்யாம் - சூரியனைப்போல் பிரகாசிப்பவளும்; ஹிரண்மயீம் - பொன்மயமானவளுமான; லக்ஷ்மீம் - மகாலட்சுமியை; மே - என்னிடம்; ஆவஹ - எழுந் தருளச் செய்ய வேண்டும்.

14. அக்கினி தேவனே! கருணை மனத்தவளும், கம்பீரமானவளும், செங்கோல் ஏந்தியவளும், அழகிய நிறத் தவளும், சூரியனைப்போல் பிரகாசிப்பவளும், பொன்மய மானவளுமான மகா லட்சுமியை என்னிடம் எழுந்தருளச் செய்ய வேண்டும்!

தாம் ம ஆவஹ ஜாதவேதோ லக்ஷ்மீ-
மனபகாமினீம் । யஸ்யாம் ஹிரண்யம் ப்ரபூதம்
காவோ தாஸ்யோऽச்வான், விந்தேயம்
புருஷானஹம் ॥ 15 ॥

ஜாதவேத: - அக்கினி தேவனே; யஸ்யாம் - யாரால்; ப்ரபூதம் - ஏராளமான; ஹிரண்யம் - பொன்னும்; காவ: - பசுக்களும்; தாஸ்ய: -

*பணிப் பெண்களும்; அச்வான் – குதிரைகளும்; புருஷான் – ஆட்களும்; அஹம் – நான்; விந்தேயம் – பெறுவேனோ; தாம் – அந்த; லக்ஷ்மீம் – திருமகளை; மே அனபகாமினீம் – என்னைவிட்டு விலகாதிருக்குமாறு; ஆவஹ – செய்தருள வேண்டும்.*

15. அக்கினி தேவனே! யாரால் ஏராளமான பொன்னும், பசுக்களும், பணிப்பெண்களும், குதிரைகளும், ஆட்களும் நான் பெறுவேனோ அந்தத் திருமகள் என்னை விட்டு விலகாதிருக்குமாறு செய்தருள வேண்டும்!

ய: சுசி: ப்ரயதோ பூத்வா ஜுஹுயாதாஜ்ய-மன்வஹம் । ச்ரிய: பஞ்சதசர்ச்சம் ச ஸ்ரீகாம: ஸததம் ஜபேத் ॥ 16 ॥

*ய: – யார்; ஸ்ரீகாம: – திருமகளின் அருளை வேண்டுகிறானோ; சுசி: – தூயவனாகவும்; ப்ரயத: – புலன்களை அடக்கியவனாகவும்; பூத்வா – இருந்து கொண்டு; அன்வஹம் – தினமும்; ஆஜ்யம் – நெய்யால்; ஜுஹுயாத் – ஹோமம் செய்ய வேண்டும்; ச – மேலும்; ச்ரிய: – திருமகளின்; பஞ்சதசர்ச்சம் – பதினைந்து மந்திரங்களையும்; ஸததம் – எப்போதும்; ஜபேத் – ஜபம் செய்ய வேண்டும்.*

16. யார் திருமகளின் அருளை வேண்டுகிறானோ, அவன் தூயவனாகவும் புலன்களை அடக்கியவனாகவும் இருந்துகொண்டு

தினமும் நெய்யால் ஹோமம் செய்ய வேண்டும். திருமகளின் மேற்கண்ட பதினைந்து மந்திரங்களையும் எப்போதும் ஜபம் செய்யவேண்டும்.

ஆனந்த꞉ கர்தமச்சைவ சிக்லீத இதி விச்ருதா꞉ ।

ரிஷயஸ்தே த்ரய꞉ ப்ரோக்தாஸ்ஸ்வயம் ஸ்ரீரேவ

தேவதா ॥ 17 ॥

விச்ருதா꞉ – *பிரபலமானவர்களும்;* ரிஷய꞉ – *முனிவர்களுமான;* ஆனந்த꞉ – *ஆனந்தர்;* கர்தம꞉ – *கர்தமர்;* ச ஏவ – *மற்றும்;* சிக்லீத꞉ – *சிக்லீதர்;* தே த்ரய꞉ – *ஆகிய மூவரும்;* ப்ரோக்தா – *ரிஷிகள்;* ஸ்வயம் ஸ்ரீ꞉ ஏவ – *மகாலட்சுமியே;* தேவதா – *தேவதை.*

17. பிரபலமானவர்களும் முனிவர்களுமான ஆனந்தர், கர்தமர், சிக்லீதர் ஆகிய மூவரும் இந்த ஸூக்தத்தின் ரிஷிகள்; மகாலட்சுமியே தேவதை.

பத்மானனே பத்ம ஊரு பத்மாக்ஷீ பத்ம ஸம்பவே ।

த்வம் மாம் பஜஸ்வ பத்மாக்ஷீ யேன ஸௌக்யம்

லபாம்யஹம் ॥ 18 ॥

பத்மானனே – *தாமரைபோன்ற முகத்தவளே;* பத்ம ஊரு – *தாமரைபோன்ற கால்களை உடையவளே;*

பத்மாக்ஷீ – *தாமரை போன்ற கண்களை உடையவளே;* பத்ம ஸம்பவே – *தாமரையில் தோன்றியவளே;* அஹம் – *நான்;* யேன – *எதனால்;* ஸௌக்யம் – *வளம்;* லபாமி – *பெறுவேனோ;* மாம் – *எனக்கு;* த்வம் – *நீ;* பஜஸ்வ – *அருள்வாய்.*

18. தாமரை போன்ற முகத்தவளே, தாமரை போன்ற கால்களை உடையவளே, தாமரை போன்ற கண்களை உடையவளே, தாமரையில் தோன்றியவளே, நான் எதனால் வளம் பெறுவேனோ அதை எனக்கு நீ அருள்வாய்!

அச்வதாயீ கோதாயீ தனதாயீ மஹாதனே। தனம் மே ஜுஷ்தாம் தேவி ஸர்வ காமாம்ச்ச தேஹி மே ॥ 19 ॥

அச்வதாயீ – *குதிரைகளைத் தருபவளும்;* கோதாயீ – *பசுக்களைத் தருபவளும்;* தனதாயீ – *செல்வத்தைத் தருபவளும்;* மஹாதனே – *செல்வத்தின் தலைவியுமான;* தேவி – *மகாலட்சுமியே;* மே – *எனக்கு;* ஸர்வ காமான் – *எல்லா ஆசைகள்;* ஜுஷ்தாம் – *இன்பத்தைத்தருகின்ற;* தனம் – *செல்வத்தை;* மே – *எனக்கு;* தேஹி – *அருள்வாய்.*

19. குதிரைகளைத் தருபவளும், பசுக்களைத் தருபவளும், செல்வத்தைத் தருபவளும், செல்வத்தின் தலைவியுமான மகாலட்சுமியே! எல்லா ஆசைகளும் நிறைவேறுவதால் வரும் இன்பத்தைத் தருகின்ற செல்வத்தை எனக்கு அருள்வாய்!

புத்ர பௌத்ர தனம் தான்யம் ஹஸ்த்யச்வாதி

கவே ரதம் । ப்ரஜானாம் பவஸி மாதா ஆயுஷ்மந்தம்

கரோது மாம் ॥ 20 ॥

புத்ர – *பிள்ளைகள்;* பௌத்ர – *பேரப் பிள்ளைகள்;* தனம் – *செல்வம்;* தான்யம் – *தானியம்;* ஹஸ்தி – *யானை;* அச்வ: ஆதி – *குதிரை முதலியவையும்;* கவே – *பசுக்கள்;* ரதம் – *தேர்கள்;* ப்ரஜானாம் – *மக்களுக்கு;* மாதா – *தாயாக;* பவஸி – *இருக்கிறாய்;* மாம் – *என்னை;* ஆயுஷ்மந்தம் – *நீண்ட ஆயுள் உள்ளவனாக;* கரோது – *செய்வாய்.*

20. பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், செல்வம், தானியம், யானை, குதிரை, முதலியவையும் பசுக்கள், தேர்கள் எல்லாம் தருவாய்! மக்களுக்கு நீ தாயாக இருக்கிறாய். என்னை நீண்ட ஆயுள் உள்ளவனாக ஆக்குவாய்!

தனமக்னிர் தனம் வாயுர்தனம் ஸூர்யோ தனம்

வஸு: । தனமிந்த்ரோ ப்ருஹஸ்பதிர் வருணம்

தனமச்னு தே ॥ 21 ॥

அக்னி: – *அக்கினி தேவனும்;* வாயு: – *வாயுதேவனும்;* ஸூர்ய: – *சூரிய பகவானும்;* வஸு: – *வசுக்களும்;* இந்த்ர: – *இந்திரனும்;* ப்ருஹஸ்பதி: – *பிருகஸ்பதியும்;*

வருணம் – வருண தேவனும்; தனம் – செல்வத்தை; அச்னுதே – அனுபவிக்கிறார்கள்.

21. அக்கினி தேவனும், வாயுதேவனும், சூரிய பகவானும், வசுக்களும், இந்திரனும், பிருகஸ்பதியும், வருண தேவனும் தத்தம் செல்வத்தை உன் அருளாலேயே அனுபவிக்கிறார்கள்.

சந்த்ராபாம் லக்ஷ்மீமீசானாம் ஸூர்யாபாம்

ச்ரியமீச்வரீம் । சந்த்ர ஸூர்யாக்னி வர்ணாபாம்

ஸ்ரீமஹாலக்ஷ்மீமுபாஸ்மஹே ॥ 22 ॥

சந்த்ராபாம் – சந்திரனைப்போல் குளிர்ந்து பிரகாசிப்பவளும்; ஈசானாம் – தெய்வங்களின்; லக்ஷ்மீம் – ஆற்றலாக விளங்குபவளும்; ஸூர்யாபாம் – சூரியனைப்போல் பிரகாசிப்பவளும்; ச்ரியம் – திருமகளும்; ஈச்வரீம் – தலைவியும்; சந்த்ர ஸூர்ய அக்னி: – சந்திரன், சூரியன், அக்கினி ஆகிய மூவரையும்; வர்ணாபாம் – மகிமையாகக் கொண்டவளுமான; ஸ்ரீமஹாலக்ஷ்மீம் – ஸ்ரீமகாலட்சுமியை; உபாஸ்மஹே – வழிபடுகிறோம்.

22. சந்திரனைப்போல் குளிர்ந்து பிரகாசிப்பவளும், தெய்வங்களின் ஆற்றலாக விளங்குபவளும், சூரியனைப்போல் பிரகாசிப்பவளும், திருமகளும், தலைவியும், சந்திரன் சூரியன் அக்கினி ஆகிய மூவரையும் மகிமையாகக் கொண்டவளுமான ஸ்ரீமகாலட்சுமியை வழிபடுகிறோம்!

வைனதேய ஸோமம் பிப ஸோமம் பிபது வ்ருத்ரஹா । ஸோமம் தனஸ்ய ஸோமினோ மஹ்யம் ததாது ஸோமின: ॥ 23 ॥

வைனதேய – கருடனே; ஸோமம் – சோம ரசத்தை; பிப – பருகு; வ்ருத்ரஹா – விருத்திராசுரனைக் கொன்றவனான இந்திரன்; ஸோமம் – சோம ரசத்தை; பிபது – பருகட்டும்; ஸோமின: – சோமயாகம் செய்ய விரும்புகின்ற; மஹ்யம் – எனக்கு; தனஸ்ய ஸோமம் – ஏராளமான செல்வத்தை; ததாது – தரட்டும்.

23. கருடனே! சோம ரசத்தைப் பருகு. விருத்திராசுரனைக் கொன்றவனான இந்திரன் சோம ரசத்தைப் பருகட்டும். சோம யாகம் செய்ய விரும்புகின்ற எனக்கு ஏராளமான செல்வத்தைத் தரட்டும்!

ந க்ரோதோ ந ச மாத்ஸர்யம் ந லோபோ நாசுபா மதி: । பவந்தி க்ருத புண்யானாம் பக்தானாம் ஸ்ரீஸூக்தம் ஜபேத்ஸதா ॥ 24 ॥

க்ருத புண்யானாம் – புண்ணியம் செய்த; பக்தானாம் – பக்தர்களுக்கு; க்ரோத: – கோபம்; ந பவந்தி – வருவதில்லை; ந மாத்ஸர்யம் – பொறாமை வருவதில்லை; ச – மேலும்; ந லோப: –

கருமித் தனம் வருவதில்லை; ந அசுபா மதி: – கெட்ட புத்தி வருவதில்லை; ஸ்ரீ ஸூக்தம் – ஸ்ரீ ஸூக்தத்தை; ஸதா – எப்போதும்; ஜபேத் – ஜபிக்க வேண்டும்.

24. புண்ணியம் செய்த பக்தர்களுக்குக் கோபம் வருவதில்லை, பொறாமை வருவதில்லை, கருமித்தனம் வருவதில்லை, கெட்ட புத்தி வருவதில்லை. பக்தி பெறுவதற்காக அவர்கள் ஸ்ரீஸூக்தத்தை எப்போதும் ஜபிக்க வேண்டும்.

வர்ஷந்து தே விபாவரி திவோ அப்ரஸ்ய வித்யுத: ।

ரோஹந்து ஸர்வ பீஜான்யவ ப்ரஹ்ம த்விஷோ

ஜஹி ॥ 25 ॥

விபாவரி – இரவும்; திவ: – பகலும்; தே – உனது கருணையால்; அப்ரஸ்ய வித்யுத: – மின்னலுடன் மேகங்கள்; வர்ஷந்து – மழை பொழியட்டும்; ஸர்வ பீஜானி – எல்லா விதைகளும்; அவரோஹந்து – நன்றாக முளைத்து வளரட்டும்; ப்ரஹ்ம த்விஷ: – கடவுளை நிந்திப்பவர்களை; ஜஹி – விலக்கி விடு.

25. உன் கருணையால் மேகங்கள் மின்னலுடன் இரவும் பகலும் மழை பொழியட்டும். எல்லா விதைகளும் நன்றாக முளைத்து வளரட்டும். கடவுளை நிந்திப்பவர்கள் விலகி விடட்டும்!

பத்மப்ரியே பத்மினி பத்மஹஸ்தே பத்மாலயே பத்மதலாயதாக்ஷி । விச்வப்ரியே விஷ்ணு மனோऽனுகூலே த்வத்பாத பத்மம் மயி ஸன்னிதத்ஸ்வ ॥ 26 ॥

பத்மப்ரியே – தாமரையை விரும்புபவளே; பத்மினி – தாமரை மகளே; பத்மஹஸ்தே – தாமரையைக் கையில் ஏந்தியவளே; பத்மாலயே – தாமரையில் வீற்றிருப்பவளே; பத்ம தல ஆயத அக்ஷி – தாமரையிதழ் போன்ற அகன்ற கண்கள் உடையவளே; விச்வ ப்ரியே – உலகிற்குப் பிரியமானவளே; விஷ்ணு மன: அனுகூலே – விஷ்ணுவின் மனத்திற்கு உகந்தவளே; த்வத் – உனது; பாதபத்மம் – திருவடித் தாமரைகளை; மயி – என்மீது; ஸன்னிதத்ஸ்வ – வைத்தருள்வாய்.

26. தாமரையை விரும்புபவளே, தாமரை மகளே, தாமரையைக் கையில் ஏந்தியவளே, தாமரையில் வீற்றிருப்பவளே, தாமரையிதழ் போன்ற அகன்ற கண்களை உடையவளே, உலகிற்குப் பிரியமானவளே, விஷ்ணுவின் மனத்திற்கு உகந்தவளே உனது திருவடித் தாமரைகளை என்மீது வைத்தருள்வாய்!

யா ஸா பத்மாஸனஸ்தா விபுல கடிதடீ பத்ம பத்ராயதாக்ஷி । கம்பீராவர்த்தநாபி: ஸ்தனபர நமிதா

சுப்ர வஸ்த்ரோத்தரீயா || லக்ஷ்மீர் திவ்யைர் கஜேந்த்ரைர்

மணிகண கசிதை: ஸ்னாபிதா ஹேம கும்பை: | நித்யம்

ஸா பத்மஹஸ்தா மம வஸது க்ருஹே ஸர்வ மாங்கல்ய

யுக்தா || 27 ||

யா – *யார்;* பத்ம ஆஸனஸ்தா – *தாமரையில் வீற்றிருப்பவளோ;* விபுல – *பருத்த;* கடிதட – *பின்புறங்களை உடையவளோ;* பத்ம பத்ர ஆயத அக்ஷி – *தாமரையிதழ் போன்ற கண்களை உடையவளோ;* கம்பீர ஆவர்த்த நாபி: – *கம்பீரமான தொப்புள் உடையவளோ;* ஸ்தனபர – *மார்பகங்களின் பாரத்தால்;* நமிதா – *தலை குனிந்தவளோ;* சுப்ர வஸ்த்ர உத்தரீயா – *வெண்ணிற ஆடையும் மேலாடையும் தரித்தவளோ;* மணிகண கசிதை: – *ரத்தினங்கள் பதித்த;* ஹேம கும்பை: – *பொறகலசநீரால்;* திவ்யை: – *தேவ லோகத்தைச் சார்ந்த;* கஜேந்த்ரை: – *சிறந்த யானைகளால்;* ஸ்னாபிதா – *அபிஷேகம் செய்யப்படுபவளோ;* பத்ம ஹஸ்தா – *தாமரையைக் கையில் தாங்கியவளோ;* ஸர்வ மாங்கல்ய யுக்தா – *எல்லா மங்கலமும் நிறைந்தவளோ;* ஸா – *அந்த;* லக்ஷ்மீ: – *மகாலட்சுமி;* மம – *என்;* க்ருஹே – *வீட்டில்;* நித்யம் – *என்றென்றும்;* வஸது – *வசிக்க வேண்டும்.*

27. யார் தாமரையில் வீற்றிருப்பவளோ, பருத்த பின் புறங்களை உடையவளோ, தாமரையிதழ் போன்ற கண்களை உடையவளோ, கம்பீரமான தொப்புள் உடையவளோ, மார்பகங்களின் பாரத்தால் தலைகுனிந்தவளோ, வெண்ணிற மான ஆடையும் மேலாடையும் தரித்தவளோ, ரத்தினங்கள் பதித்த பொற்கலச நீரைக் கொண்டு தேவலோகத்தின் சிறந்த யானைகளால் அபிஷேகம் செய்யப்படுபவளோ, தாமரையைக் கையில் தாங்கியவளோ, எல்லா மங்கலமும் நிறைந்தவளோ அந்த மகாலட்சுமி என் வீட்டில் என்றென்றும் வசிக்கவேண்டும்!

லக்ஷ்மீம் க்ஷீரஸமுத்ர ராஜதனயாம் ஸ்ரீரங்க

தாமேச்வரீம் । தாஸீபூத ஸமஸ்த தேவ வனிதாம்

லோகைக தீபாங்குராம் । ஸ்ரீமன்மந்த கடாக்ஷ

லப்த விபவ ப்ரஹ்மேந்த்ர கங்காதராம் । த்வாம்

த்ரைலோக்ய குடும்பினீம் ஸரஸிஜாம் வந்தே

முகுந்தப்ரியாம் ॥ 28 ॥

லக்ஷ்மீம் – அதிர்ஷ்டத்திற்கு இருப்பிடமான வளும்; க்ஷீர ஸமுத்ர ராஜ தனயாம் – பாற்கடலரசனின் மகளும்; ஸ்ரீரங்கதாம ஈச்வரீம் – ஸ்ரீரங்கத்தில் உறை கின்ற தேவியும்; தாஸீபூத ஸமஸ்த தேவ வனிதாம் – தேவலோகப் பெண்கள் அனைவரையும் பணிப் பெண்களாகக் கொண்டவளும்; லோக ஏக தீப

அங்குராம் – உலகிற்கு ஒரே தீபமாக இருப்பவளும்; ஸ்ரீமன் மந்த கடாக்ஷ லப்த விபவ ப்ரஹ்ம இந்த்ர கங்காதராம் – யாருடைய மென்மையான கடைக் கண் பார்வையைப் பெற்றதால் பிரம்மனும் இந்திரனும் சிவபெருமானும் பெருமை பெற்றார் களோ அவளும்; த்ரைலோக்ய குடும்பினீம் – மூன்று உலகங்களையும் குடும்பமாகக் கொண்டவளும்; ஸரஸிஜாம் – தாமரைக் குளத்தில் தோன்றியவளும்; முகுந்த ப்ரியாம் – மகா விஷ்ணுவுக்குப் பிரிய மானவளுமான; த்வாம் – உன்னை; வந்தே – வணங்குகிறேன்.

28. அதிர்ஷ்டத்திற்கு இருப்பிடமானவளும், பாற்கடலரசனின் மகளும், ஸ்ரீரங்கத்தில் உறைகின்ற தேவியும், தேவலோகப் பெண்கள் அனைவரையும் பணிப்பெண்களாகக் கொண்ட வளும், உலகிற்கு ஒரே தீபமாக இருப்பவளும், யாருடைய மென்மையான கடைக்கண் பார்வையைப் பெற்றதால் பிரம்மனும் இந்திரனும் சிவபெருமானும் பெருமை பெற்றார்களோ அவளும், மூன்று உலகங்களையும் குடும்பமாகக் கொண்டவளும், தாமரைக் குளத்தில் தோன்றியவளும், மகாவிஷ்ணுவுக்குப் பிரியமானவளு மான உன்னை வணங்குகிறேன்.

ஸித்த லக்ஷ்மீர் மோக்ஷ லக்ஷ்மீர் ஜயலக்ஷ்மீஸ் ஸரஸ்வதீ । ஸ்ரீலக்ஷ்மீர் வரலக்ஷ்மீச்ச ப்ரஸன்னா மம ஸர்வதா ॥ 29 ॥

ஸித்த லக்ஷ்மீ: – ஸித்த லட்சுமியாகவும்; மோக்ஷ லக்ஷ்மீ: – மோட்ச லட்சுமியாகவும்; ஜய லக்ஷ்மீ: – ஜய லட்சுமியாகவும்; ஸரஸ்வதீ: – தாமரைக் குளத்தில் தோன்றியவளாகவும்; ஸ்ரீலக்ஷ்மீ: – திருமகளாகவும்; வரலக்ஷ்மீ: – வரலட்சுமியாகவும்; மம – எனக்கு; ஸர்வதா – எப்போதும்; ப்ரஸன்னா – அருள் நிறைந்தவளாக இரு.

29. நினைத்ததை நிறைவேற்றவல்ல ஸித்த லட்சுமியாகவும், முக்தியைத் தரவல்ல மோட்ச லட்சுமியாகவும், வெற்றியைத் தரவல்ல ஜய லட்சுமியாகவும், தாமரைக் குளத்தில் தோன்றியவளாகவும், செல்வத்தைத் தரவல்ல திருமகளாகவும், வரங்களைத் தரவல்ல வரலட்சுமியாகவும் இருக்கின்ற நீ எனக்கு எப்போதும் அருள் நிறைந்தவளாக இருப்பாய்.

வராங்குசௌ பாசமபீதி முத்ராம் கரைர்
வஹந்தீம் கமலாஸனஸ்தாம் । பாலார்க்க கோடி
ப்ரதிபாம் த்ரிணேத்ராம் பஜேஹமாத்யாம் ஜகதீச்வரீம்
த்வாம் ॥ 30 ॥

வர: அபீதி முத்ராம் – வரம் மற்றும் அபய முத்திரைகளைத் தாங்கியவளும்; பாசம் அங்குசௌ – பாச அங்குசங்களை; கரை: – கைகளில்; வஹந்தீம் – தாங்கியவளும்; கமலாஸனஸ்தாம் – தாமரையில் வீற்றிருப்பவளும்; கோடி பால அர்க்க: ப்ரதிபாம் – கோடி உதய சூரிய பிரகாசம் பொருந்தியவளும்; த்ரிணேத்ராம் –

மூன்று கண்களை உடையவளும்; ஆத்யாம் – ஆதி சக்தியும்; ஜகதீச்வரீம் – உலகின் இறைவியுமான; தாம் – அவளை; அஹம் – நான்; பஜே – துதிக்கிறேன்.

30. வரம் மற்றும் அபய முத்திரைகளைக் கைகளில் தாங்கியவளும், பாசம் அங்குசம் ஆகிய ஆயுதங்களைக் கைகளில் தாங்கியவளும், தாமரையில் வீற்றிருப்பவளும், கோடி உதயசூரியப் பிரகாசம் பொருந்தியவளும், மூன்று கண்களை உடையவளும், ஆதி சக்தியும், உலகின் இறைவியுமான அவளை நான் துதிக்கிறேன்.

ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே ஸர்வார்த்த ஸாதிகே । சரண்யே த்ர்யம்பகே தேவி நாராயணி நமோऽஸ்து தே । நாராயணி நமோऽஸ்து தே । நாராயணி நமோऽஸ்து தே ॥ 31 ॥

ஸர்வ மங்கல மாங்கல்யே – மங்கலம் அனைத்திற்கும் மங்கலமானவளே; சிவே – மங்கலத்தைத் தருபவளே; ஸர்வ அர்த்த – எல்லா நன்மைகளையும்; ஸாதிகே – தருபவளே; சரண்யே – சரணடைவதற்கு உரியவளே; த்ர்யம்பகே – மூன்று கண்களை உடையவளே; தேவி – தேவீ; நாராயணி – நாராயணீ; தே – உனக்கு; நம: அஸ்து – நமஸ்காரம்.

31. மங்கலம் அனைத்திற்கும் மங்கலமானவளே, மங்கலத்தைத் தருபவளே, எல்லா நன்மைகளையும் தருபவளே,

சரணடைவதற்கு உரியவளே, மூன்று கண்களை உடையவளே, தேவீ, நாராயணீ உனக்கு நமஸ்காரம்.

ஸரஸிஜ நிலயே ஸரோஜ ஹஸ்தே

தவளதராம்சுக கந்தமால்ய சோபே । பகவதி

ஹரிவல்லபே மனோஜ்ஞே த்ரிபுவனபூதிகரி ப்ரஸீத

மஹ்யம் ॥ 32 ॥

ஸரஸிஜ நிலயே - *தாமரையை இருப்பிடமாகக் கொண்டவளே;* ஸரோஜ ஹஸ்தே - *தாமரையைக் கையில் தாங்கியவளே;* தவளதர அம்சுக - *தூய வெள்ளாடை அணிந்து;* கந்த மால்ய சோபே - *நறுமணமாலையை அணிந்து அழகாய் விளங்குபவளே;* பகவதி - *பகவதீ;* ஹரி வல்லபே - *திருமாலின் துணைவியே;* மனோஜ்ஞே - *விருப்பங்களை அறிந்து நிறைவேற்றுபவளே;* த்ரிபுவனபூதிகரி - *மூவுலகையும் வளமளித்துக் காப்பவளே;* மஹ்யம் - *எனக்கு;* ப்ரஸீத - *அருள் புரிவாய்.*

32. தாமரையை இருப்பிடமாகக் கொண்டவளே, தாமரையைக் கையில் தாங்கியவளே, தூய வெள்ளாடையும் நறுமண மாலையும் அணிந்து அழகாய் விளங்குபவளே, பகவதீ, திருமாலின் துணைவியே, விருப்பங்களை அறிந்து நிறைவேற்று பவளே, மூவுலகையும் வளமளித்துக் காப்பவளே எனக்கு அருள் புரிவாய்.

விஷ்ணுபத்னீம் க்ஷமாம் தேவீம் மாதவீம் மாதவப்ரியாம் | விஷ்ணோ: ப்ரிய ஸகீம் தேவீம் நமாம்யச்யுத வல்லபாம் || 33 ||

விஷ்ணுபத்னீம் – திருமாலின் தேவியும்; க்ஷமாம் தேவீம் – பூமாதேவியாக இருப்பவளும்; மாதவீம் – துளசிச் செடியாக இருப்பவளும்; மாதவ ப்ரியாம் – மாதவனுக்குப் பிரியமானவளும்; விஷ்ணோ: – விஷ்ணுவின்; ப்ரிய ஸகீம் – மனத்திற்கு உகந்த துணைவியும்; அச்யுத வல்லபாம் – திருமாலுடன் இணைந்தவளுமான; தேவீம் – தேவியை; நமாமி – வணங்குகிறேன்.

33. திருமாலின் தேவியும், பூமாதேவியாக இருப்பவளும், துளசிச்செடியாக இருப்பவளும், மாதவனுக்குப் பிரியமானவளும், அவனது மனத்திற்கு உகந்த துணைவியும், அவனுடன் இணைந்தவளுமான தேவியை வணங்குகிறேன்.

ஓம் || மஹாலக்ஷ்மீ ச வித்மஹே விஷ்ணுபத்னீ ச தீமஹி | தன்னோ லக்ஷ்மீ: ப்ரசோதயாத் | ஓம் || 34 ||

34. மஹாலட்சுமியை அறிந்துகொள்வோம். திருமாலின் துணைவியான அவளை அதற்காக தியானிப்போம். அந்த லட்சுமி தேவி நம்மைத் தூண்டுவாளாக!

ஸ்ரீவர்ச்சஸ்யமாயுஷ்ய மாரோக்யமாவிதாத் பவமானம் மஹீயதே। தனம் தான்யம் பசும் பஹூபுத்ரலாபம் சதஸம்வத்ஸரம் தீர்கமாயு:। ரிண ரோகாதி தாரித்ர்ய பாபக்ஷூதபம்ருத்யவ: । பய சோக மனஸ்தாபா நச்யந்து மம ஸர்வதா ॥ 35 ॥

ஸ்ரீ – *மஹாலட்சுமியே;* ஸர்வதா – *எப்போதும்;* மம – *எனக்கு;* வர்ச்சஸ்யம் – *ஆற்றல்;* ஆயுஷ்யம் – *வளமான வாழ்க்கை;* ஆரோக்யம் – *நல்ல உடல் நிலை;* ஆவிதாத் – *தந்தபடி;* பவமானம் – *காற்று;* மஹீயதே – *வீசட்டும்;* தனம் – *செல்வம்;* தான்யம் – *உணவுப் பொருட்கள்;* பசும் – *மிருகங்கள்;* பஹூபுத்ர லாபம் – *பிள்ளைச் செல்வங்கள்;* சத ஸம்வத்ஸரம் – *நூறாண்டுகள்;* தீர்கம் ஆயு: – *நீண்ட ஆயுள்;* ரிண: – *கடன்;* ரோக: ஆதி – *நோய் முதலியவை;* தாரித்ர்ய: – *வறுமை;* க்ஷூத் – *பசி;* அபம்ருத்யவ: – *அகால மரணம் போன்றவை;* பய: – *பயம்;* சோக: – *கவலை;* மன: தாபா: – *மனத்தின் துன்பங்கள்;* நச்யந்து – *ஒழியட்டும்.*

35. மகாலட்சுமியே, ஆற்றல், வளமான வாழ்க்கை, நல்ல உடல்நிலை இவற்றை எனக்குத் தந்தபடி எப்போதும் காற்று வீசட்டும். செல்வம், உணவுப் பொருட்கள், மிருகங்கள், பிள்ளைச் செல்வங்கள், நூறாண்டுகள் நீண்ட ஆயுள் எல்லாம் எனக்குக்

கிடைக்கட்டும். கடன், நோய், வறுமை, பசி, அகால மரணம், பயம், கவலை, மனத்தின் துன்பங்கள் எல்லாம் ஒழியட்டும்!

ச்ரியே ஜாத ச்ரிய ஆனிர்யாய

ச்ரியம் வயோ ஜரித்ருப்யோ ததாது |

ச்ரியம் வஸானா அம்ருதத்வமாயன்

பஜந்தி ஸத்ய: ஸவிதா விதத்யூன் || 36 ||

ச்ரிய ஆனிர்யாய – திருமகள் சேர்பவர்களுக்கு; ச்ரியே ஜாத: – செல்வம் சேர்கிறது; ச்ரியம் – ஐசுவரியமும்; வய: ஜரித்ருப்ய: – நீண்ட ஆயுளும்; ததாது – தருகிறது; ச்ரியம் – *(அவர்கள்)* செல்வத்தில்; வஸானா – திளைத்தபடி; அம்ருதத்வமாயன் – *மரண மற்ற நிலையை அடைகிறார்கள்*; ஸத்ய: – விரைவாக; ஸவிதா – *புகழையும்*; விதத்யூன் – வெற்றியையும்; பஜந்தி – *அடைகிறார்கள்*.

36. திருமகள் சேர்பவர்களுக்கு செல்வம் சேர்கிறது; ஐசுவரியமும் நீண்ட ஆயுளும் கிடைக்கிறது. அவர்கள் செல்வத்தில் திளைத்தபடி மரணமற்ற நிலையை அடைகிறார்கள். விரைவாக புகழையும் வெற்றியையும் அடைகிறார்கள்.

ச்ரிய ஏவைனம் தச்ச்ரியாமாததாதி |

ஸந்ததம்ருசா வஷட்க்ருத்யம்

ஸந்தத்தம் ஸந்தீயதே ப்ரஜயா பசுபி: ।

ய ஏவம் வேத ॥ 37 ॥

ஏனம் – இவை; ச்ரிய ஏவ – திருமகளே தான்; தத் – இவ்வாறு அறிபவன்; ச்ரியாம் – திருமகளை; ஆததாதி – அடைகிறான்; ருசா – மந்திரங்களுடன்; வஷட் – யாகம்; ஸந்ததம் – எப்போதும்; க்ருத்யம் – செய்ய வேண்டும்; ஸந்தத்தம் – அப்படி செய்பவனுக்கு; ப்ரஜயா – மக்கட் செல்வமும்; பசுபி: – கால்நடைச் செல்வமும்; ஸந்தீயதே – கிடைக்கிறது; ய ஏவம் வேத – இவ்வாறு அறிய வேண்டும்.

37. எல்லா நன்மையும் திருமகளேதான்— இவ்வாறு அறிபவன் திருமகளை அடைகிறான். மந்திரங்களுடன் யாகம் எப்போதும் செய்ய வேண்டும். அப்படி செய்பவனுக்கு மக்கட் செல்வமும் கால்நடைச் செல்வமும் கிடைக்கிறது. இவ்வாறு அறிய வேண்டும்.

ஓம் மஹா தேவ்யை ச வித்மஹே

விஷ்ணுபத்னீ ச தீமஹி ।

தன்னோ லக்ஷ்மீ: ப்ரசோதயாத் ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

மகா தேவியான திருமகளை அறிந்துகொள்வோம். திருமாலின் துணைவியான அவளை அதற்காக தியானிப்போம். அந்த லட்சுமி தேவி நம்மைத் தூண்டுவாளாக!



# १२. सूर्य सूक्तम्

ऋग्वेद, 10.37

ॐ ॥ नमो॑ मि॒त्रस्य॒ वरु॑णस्य॒ चक्ष॑से म॒हो दे॒वाय॒ तदृ॒तं स॑पर्यत ।
दू॒रे॒दृ॒शे॑ दे॒वजा॑ताय के॒तवे॑ दि॒वस्पु॒त्राय॒ सूर्या॑य शंसत ॥ १ ॥
सा मा॑ स॒त्योक्ति॒: परि॑ पातु वि॒श्वतो॒ द्यावा॑ च॒ यत्र॑ त॒तन॒न्नहा॑नि च ।
विश्व॑म॒न्यन्नि वि॑शते॒ यदेज॑ति वि॒श्वाहापो॒ वि॒श्वाहोदे॑ति॒ सूर्य॑: ॥ २ ॥
न ते॒ अदे॑व: प्र॒दिवो॒ नि वा॑सते॒ यदे॑त॒शेभि॑: पत॒रै र॑थ॒र्यसि॑ ।
प्रा॒चीन॑म॒न्यदनु॑ वर्तते॒ रज॒ उद॒न्येन॒ ज्योति॑षा यासि सूर्य ॥ ३ ॥
येन॑ सूर्य॒ जयोति॑षा॒ बाध॑से॒ तमो॒ जग॑च्च॒ विश्व॑मुदि॒यर्षि॑ भा॒नुना॑ ।
तेना॒स्मद्विश्वा॒मनि॑रा॒मना॑हुति॒मपामी॑वा॒मप॑ दु॒ष्वप्न्यं॑ सुव ॥ ४ ॥
विश्व॑स्य॒ हि प्रेषि॑तो॒ रक्ष॑सि व्र॒तमहे॑ळयन्नु॒च्चर॑सि स्व॒धा अनु॑ ।
यद॒द्य त्वा॑ सूर्योप॒ब्रवा॑महे॒ तं नो॑ दे॒वा अनु॑ मंसीरत॒ क्रतु॑म् ॥ ५ ॥

तं नो द्यावापृथिवी तन्न आप इन्द्रः शृण्वन्तु मरुतो हवं वचः ।

मा शूनें भूम सूर्यस्य संदृशि भद्रं जीवन्तो जरणामशीमहि ॥ ६ ॥

विश्वाहा त्वा सुमनसः सुचक्षसः प्रजावन्तो अनमीवा अनागसः ।

उद्यन्तं त्वा मित्रमहो दिवेदिवे ज्योग्जीवाः प्रति पश्येम सूर्य ॥ ७ ॥

महि ज्योतिर्बिभ्रतं त्वा विचक्षण भास्वन्तं चक्षुषे चक्षुषे मयः ।

आरोहन्तं बृहतः पाजसस्परि वयं जीवाः प्रति पश्येम सूर्य ॥ ८ ॥

यस्य ते विश्वा भुवनानि केतुना प्र चेरते नि च विशन्ते अक्तुभिः ।

अनागास्त्वेन हरिकेश सूर्याऽह्नाह्ना नो वस्यसावस्यसोदिहि ॥ ९ ॥

शं नो भव चक्षसा शं नो अह्ना शं भानुना शं हिमा शं घृणेन ।

यथा शमध्वञ्छमसद् दुरोणे तत् सूर्य द्रविणं धेहि चित्रम् ॥ १० ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 12. ஸூர்ய ஸூக்தம்

*ரிக் வேதம், 10.37.*

வேத கால மக்கள் சூரியனை வானில் உதித்து மறைகின்ற ஒரு நட்சத்திரமாக மட்டும் காணவில்லை.

வாழ்க்கையின் ஆதாரமாக, ஆற்றல் உணவு இவற்றைத் தருபவனாக, பிரபஞ்சத்தைப் படைத்தவனாக, நல் எண்ணங்களைத் தூண்டுபவனாக, எல்லா செயல்களை யும் இயக்குபவனாகக்கருதப்பட்டான் சூரியன். அந்த சூரிய தேவனிடம் இவ்வுலக வாழ்க்கைக்கான பொருளையும், உயர்வாழ்க்கைக்கான ஆற்றலையும் பிரார்த்திக்கிறது இந்த ஸூக்தம்.

ஓம் || நமோ மித்ரஸ்ய வருணஸ்ய சக்ஷஸே
மஹோ தேவாய தத்ரிதம் ஸ்பர்யத |
தூரேத்ருசே தேவஜாதாய கேதவே
திவஸ்புத்ராய ஸூர்யாய சம்ஸத || 1 ||

மித்ரஸ்ய – மித்திரனுடைய; வருணஸ்ய – வருணனுடைய; சக்ஷஸே – கண்களாக; நம: – வணக்கம்; தூரத்ருசே – தொலை தூரங்களிலும் பார்க்கக் கூடிய; தேவஜாதாய – தெய்வீகப் பிறப்பை உடைய; கேதவே – அனைத்தையும் பிரகாசிக்கச் செய்கின்ற; தத் – அந்த; மஹ: தேவாய – மகாதேவனுக்கு; ரிதம் – யஜ்ஞமாக; ஸபர்யத – சமர்ப்பிப்போம்; திவஸ்புத்ராய – வான மகனாகிய; ஸூர்யாய – சூரியனை; சம்ஸத – போற்றுவோம்.

1. மித்திரன் மற்றும் வருணனுடைய கண்களாக இருக்கின்ற சூரியபகவானே, உமக்குவணக்கம். தொலைதூரங்களிலும்பார்க்கக் கூடிய தெய்வீகப் பிறப்பை உடைய, அனைத்தையும் பிரகாசிக்கச் செய்கின்ற அந்த மகாதேவனுக்கு நமது செயல்களையெல்லாம்

ஒரு யஜ்ஞமாகச் சமர்ப்பிப்போம். வான மகனாகிய சூரியனைப் போற்றுவோம்.

ஸா மா ஸத்யோக்தி: பரி பாது விச்வதோ

த்யாவா ச யத்ர ததனன்னஹானி ச ।

விச்வமன்யன் நி விசதே யதேஜதி

விச்வாஹாபோ விச்வாஹோதேதி

ஸூர்ய: ॥ 2 ॥

ஸா ஸத்ய உக்தி: – *அந்த சத்திய வாக்கு;* விச்வத: – *எல்லா இடங்களிலும்;* மா – *என்னை;* பரி பாது – *காக்கட்டும்;* த்யாவா ச – *வானமும் பூமியும்;* அனன் அஹானி ச – *இரவும் பகலும்;* யத்ர தத் – *எல்லாமே;* விச்வம் அன்யன் – *பிரபஞ்சம் அனைத்தும்;* நி விசதே – *நிலைபெறுகிறது;* விச்வாஹா ஆப: – *ஆறுகள் எல்லாம்;* ஏஜதி – *ஓடுவதும்;* விச்வாஹ ஸூர்ய: – *சூரியன்;* உதேதி – *உதிப்பதும்;* யத் – *அந்த சத்திய வாக்கினால்தான்.*

2. சத்திய வாக்கு எல்லா இடங்களிலும் என்னைக் காக்கட்டும். வானமும் பூமியும் இரவும் பகலும் எல்லாமே அந்த சத்திய வாக்கினாலேயே தாங்கப்படுகின்றன. பிரபஞ்சம் அனைத்தும் அதிலேயே நிலைபெறுகிறது. ஆறுகள் ஓடுவதும் சூரியன் உதிப்பதும் அந்த சத்திய வாக்கினால்தான்.

ந தே அதேவ: ப்ரதிவோ நி வாஸதே

யதேதசேபி: பதரை ரதர்யஸி ।

ப்ராசீனமன்யதனுவர்த்ததே ரஜ

உதன்யேன ஜ்யோதிஷா யாஸி ஸூர்ய ॥ 3 ॥

ஸூர்ய – சூரிய தேவனே; பதரை – விரைவாகச் செல்கின்ற; அசேபி: – குதிரைகளை; யதேத் ரதர்யஸி – ரதத்தில் பூட்டினால்; ப்ரதிவ: அதேவ: – பண்டைய அரக்கர்களும்; தே – உன்; ந நிவாஸதே – அருகில் இருக்க மாட்டார்கள்; அன்யேன ஜ்யோதிஷா – ஓர் ஒளியால்; யாஸி – பயணிக்கும்போது; அன்யம் உத் – மற்ற ஒன்றாகிய; ப்ராசீனம் ரஜ – காரிருள்; அனுவர்த்ததே – மறைகிறது.

3. சூரிய தேவனே, விரைவாகச் செல்கின்ற குதிரைகளை நீ ரதத்தில் பூட்டினால் பண்டைய அரக்கர்களும் உன் அருகில் இருக்க மாட்டார்கள். ஓர் ஒளியால் நீ பயணிக்கும்போது மற்ற ஒன்றாகிய காரிருள் மறைகிறது.

யேன ஸூர்ய ஜ்யோதிஷா பாதஸே தமோ

ஜகச்ச விச்வமுதியர்ஷி பானுனா ।

தேனாஸ்மத் விச்வாமனிராமனாஹுதிம்

அபாமீவாமப துஷ்ஷ்வப்ன்யம் ஸுவ ॥ 4 ॥

ஸூர்ய – சூரிய தேவா; யேன ஜ்யோதிஷா – எந்த ஒளியால்; தம: – இருளை; பாதஸே – விலக்கு கிறாயோ; பானுனா – ஒளியால்; விச்வம் ஜகத் ச – அசைகின்ற ஒவ்வொன்றையும்; உதியர்ஷி – தூண்டுகிறாயோ; தேன – அந்த ஒளியால்; அஸ்மத் – எங்கள்; அனிராம் – வறுமை; அனாஹுதிம் – யஜ்ஞம் செய்யாமை; அமீவாம் – நோய்; துஷ்ஷ்வப்ன்யம் – தீய கனவுகள்; விச்வாம் – அனைத்தையும்; அப ஸுவ – போக்குவாய்.

4. சூரிய தேவா, எந்த ஒளியால் இருளை விலக்குகிறாயோ, அசைகின்ற ஒவ்வொன்றையும் எந்த ஒளியால் தூண்டுகிறாயோ, அந்த ஒளியால் எங்கள் வறுமை, யஜ்ஞம் செய்யாமையால் வரும் தோஷம், நோய், தீய கனவுகள் அனைத்தையும் போக்குவாய்!

விச்வஸ்ய ஹி ப்ரேஷிதோ ரக்ஷஸி
வ்ரதமஹேளயன்னுச்சரஸி ஸ்வதா அனு |
யதத்ய த்வா ஸூர்யோபப்ரவாமஹே
தம் நோ தேவா அனு மம்ஸீரத க்ரதும் || 5 ||

ஸூர்ய – சூரிய தேவனே; ப்ரேஷித: – போற்றினால்; விச்வஸ்ய – உலகினரின்; வ்ரதம் – வழிபாட்டை; அஹேளயன் – மென்மையாக; ரக்ஷஸி – காக்கிறாய்; ஸ்வதா – ஸ்வதா மந்திரத்துடன்; உத்சரஸி – மேலே

எழுகிறாய்; அத்ய – இன்று; த்வா – உன்னை; யதி உபப்ரவாமஹே – துதிக்கும்போது; தேவா: – தேவர்கள்; ந: – எங்கள்; க்ரதும் – நற்செயல்களை; அனு மம்ஸீரத – காக்கட்டும்.

5. சூரிய தேவனே, உன்னைப் போற்றினால் உலகினரின் வழிபாட்டை மென்மையாக நீ காக்கிறாய். ஸ்வதா மந்திரத்துடன் ஆஹுதிகள் அளிக்கும்போது நீ மேலே எழுகிறாய். இன்று உன்னைத் துதிக்கும்போது தேவர்கள் எங்கள் நற்செயல்களைக் காக்கட்டும்!

தம் நோ த்யாவா ப்ருதிவீ தன்ன ஆப

இந்த்ர: ச்ருண்வந்து மருதோ ஹவம் வச: ।

மா சூனே பூம ஸூர்யஸ்ய ஸந்த்ருசி

பத்ரம் ஜீவந்தோ ஜரணாமசீமஹி ॥ 6 ॥

த்யாவா – வானம்; ப்ருதிவீ – பூமி; ஆப: – நீர்; இந்த்ர: – இந்திரன்; மருத: – மருத்துக்கள்; ந: – எங்கள்; ஹவம் – வழிபாட்டை; ந: – எங்கள்; வச: – பிரார்த்தனைகளை; ச்ருண்வந்து – கேட்கட்டும்; ஸூர்யஸ்ய – சூரியனை; ஸந்த்ருசி – கண்டு; மா சூனே பூம – பயப்படாமல் இருப்போமாக; ஜீவந்த: – வாழ்ந்து; ஜரணாம் – வயதான காலத்தில்; பத்ரம் அசீமஹி – ஆரோக்கியமாக வாழ்வோமாக.

6. வானம், பூமி, நீர், இந்திரன், மருத்துக்கள் எல்லோரும் எங்கள் வழிபாட்டை ஏற்றுக்கொள்ளட்டும். எங்கள் பிரார்த்தனைகளைக் கேட்கட்டும். நாம் சூரியனைக் கண்டு பயப்படாமல் இருப்போமாக! நீண்ட காலம் வாழ்ந்து வயதான காலத்திலும் ஆரோக்கியமாக வாழ்வோமாக!

விச்வாஹா த்வா ஸுமனஸ: ஸுசக்ஷஸ:

ப்ரஜாவந்தோ அனமீவா அனாகஸ: ।

உத்யந்தம் த்வா மித்ரமஹோ திவேதிவே

ஜ்யோக்ஜீவா: ப்ரதி பச்யேம ஸூர்ய ॥ 7 ॥

*திவே திவே – தினந்தோறும்; உத்யந்தம் – உதித்து; மித்ரம் – நண்பர்களை; ஜ்யோக்ஜீவா: – வாழவைக்கின்ற; ஸூர்ய – சூரிய தேவனே; த்வா – உன்னை; ப்ரதி அஹ: – தினமும்; பச்யேம – நாங்கள் காண வேண்டும்; ஸுமனஸ: – மகிழ்ச்சியான மனத்துடனும்; ஸுசக்ஷஸ: – தெளிவான பார்வையுடனும்; ப்ரஜாவந்த: – சந்ததியுடனும்; அனாமீவா: – நோயின்றியும்; அனாகஸா: – பாவமின்றியும்; த்வா – உன்னை; விச்வாஹா – என்றென்றும்.*

7. தினந்தோறும் உதித்து நண்பர்களை வாழ வைக்கின்ற சூரிய தேவனே, உன்னை தினமும் நாங்கள் காண வேண்டும். மகிழ்ச்சியான மனத்துடனும் தெளிவான பார்வையுடனும் சந்ததியுடனும் நோயின்றியும் பாவமின்றியும் உன்னை என்றென்றும் போற்ற வேண்டும்.

மஹி ஜ்யோதிர் பிப்ரதம் த்வா விசக்ஷண
பாஸ்வந்தம் சக்ஷுஷே சக்ஷுஷே மய: ।
ஆரோஹந்தம் ப்ருஹத: பாஜஸஸ்பரி
வயம் ஜீவா: ப்ரதி பச்யேம ஸூர்ய ॥ 8 ॥

விசக்ஷண - அனைத்தையும் பார்ப்பவனும்; ஜ்யோதிர் பிப்ரதம் - பெரு நெருப்பாக இருப்பவனும்; பாஸ்வந்தம் - ஒளி மிக்கவனும்; சக்ஷுஸே சக்ஷுஸே மய: - ஒவ்வொரு கண்ணுக்கும் மகிழ்ச்சியை அளிப்பவனும்; ப்ருஹத: - பரந்த; பாஜஸ்பரி - பெரிய கடல்மீது; ஆரோஹந்தம் - உதிப்பவனுமாகிய; ஸூர்ய - சூரிய தேவனே; ஜீவா: - நீண்ட ஆயுளுடன்; வயம் - நாங்கள்; த்வா - உன்னை; ப்ரதி பச்யேம - தினமும் தரிசிக்க வேண்டும்.

8. அனைத்தையும் பார்ப்பவனும், பெரு நெருப்பாக இருப்பவனும், ஒளிமிக்கவனும், ஒவ்வொரு கண்ணுக்கும் மகிழ்ச்சியை அளிப்பவனும், பரந்த பெரிய கடல்மீது உதிப்பவனுமாகிய சூரிய தேவனே! நீண்ட ஆயுளுடன் நாங்கள் உன்னை தினமும் தரிசிக்க வேண்டும்.

யஸ்ய தே விச்வா புவனானி கேதுனா
ப்ர சேர்தே நி ச விசந்தே அக்துபி: ।

அனாகாஸ்த்வேன ஹரிகேச ஸூர்யாऽஹ்னாஹ்னா

நோ வஸ்யஸாவஸ்யஸோதிஹி ॥ 9 ॥

யஸ்ய – யாருடைய; கேதுனா – தூண்டுதலால்; விச்வா புவனானி – எல்லா உலகங்களும்; ப்ர சேரதே – இயங்குகின்றனவோ; ச – மேலும்; அக்துபி: – இரவில்; நி விசந்தே – தூங்குகின்றனவோ; ஸூர்ய – சூரியதேவனே; ஏன அஸ்து – எங்களிடம் வருவாய்; ஹரிகேச – பொன்னிற முடியுடைய கதிரவனே; அஹ்னா அஹ்னா – நாள்தோறும்; அனாகா: – தூய்மையும்; வஸ்யஸ:அவஸ்யாய: – எல்லாசெல்வங்களையும்; ந: – எங்களுக்கு; உதிஹி – கொண்டு வருவாய்.

9. யாருடைய தூண்டுதலால் எல்லா உலகங்களும் பகலில் இயங்குகின்றனவோ, இரவில் தூங்குகின்றனவோ அந்த சூரிய தேவனே எங்களிடம் வருவாய். பொன்னிறக் கதிர்களாகிய முடியுடைய கதிரவனே, நாள்தோறும் தூய்மையையும் எல்லா செல்வங்களையும் எங்களுக்குக் கொண்டு வருவாய்!

சம் நோ பவ சக்ஷஸா சம் நோ அஹ்னா

சம் பானுனா சம் ஹிமா சம் க்ருணேன ।

யதா சமத்வஞ்சமஸ்த்துரோணே

தத் ஸூர்ய த்ரவிணம் தேஹி சித்ரம் ॥ 10 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஸூர்ய – சூரிய தேவனே; சக்ஷஸா – ஒளியாலும்; அஹ்னா – கதிர்களாலும்; பானுனா – சூட்டினாலும்; ஹிமா – குளிர்காலத்தில்; க்ருணேன – வெதுவெதுப்பி னாலும்; ந: – எங்களை; சம் பவ – ஆசீர்வதிப்பாய்; அஸத் – வெளியிலும்; துரோணே – வீட்டிலும்; சமத்வம் – காப்பாய்; சித்ரம் – பல்வேறு; த்ரவிணம் – செல்வங்களையும்; தேஹி – தருவாய்.

10. சூரிய தேவனே, உனது ஒளியாலும், சூட்டினாலும், குளிர்காலத்தில் வெதுவெதுப்பினாலும் எங்களை ஆசீர்வதிப்பாய். வெளியிலும் வீட்டிலும் எங்களைக் காப்பாய். பல்வேறு செல்வங் களையும் தருவாய்!



# १३. उषस् सूक्तम्

ऋग्वेद, 7.78

ॐ ॥ प्रति केतवः प्रथमा अदृश्रन्नूर्ध्वा अस्या अञ्जयो वि श्रयन्ते ।

उषो अर्वाचा बृहता रथेन ज्योतिष्मता वाममस्मभ्यं वक्षि ॥ १ ॥

प्रति षीमग्निर्जरते समिद्धः प्रति विप्रासो मतिभिर्गृणन्तः ।

उषा याति ज्योतिषा बाधमाना विश्वा तमांसि दुरिताप देवी ॥ २ ॥

एता उ त्याः प्रत्यदृश्रन् पुरस्ताज्ज्योतिर्यच्छन्तीरुषसो विभातीः ।

अजीजनन् सूर्यं यज्ञमग्निमपाचीनं तमो अगादजुष्टम् ॥ ३ ॥

अचेति दिवो दुहिता मघोनी विश्वे पश्यन्त्युषसं विभातीम् ।

आस्थाद् रथं स्वधया युज्यमानमा यमश्वासः सुयुजो वहन्ति ॥ ४ ॥

प्रति त्वाद्य सुमनसो बुधन्ताऽस्माकासो मघवानो वयं च ।

तिल्विलायध्वमुषसो विभातीर्यूयं पात स्वस्तिभिः सदा नः ॥ ५ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

# 13. உஷஸ் ஸூக்தம்

*ரிக் வேதம், 7. 78*

வேத முனிவர்களுக்கு இயற்கை நிகழ்ச்சிகள் எல்லாமே ஆனந்தத்தை அளிப்பனவாக, அற்புதமானவையாக இருந்தன. காலையும் மாலையும் சூரிய உதயமும் மறைவும் எல்லாம் அவர்களிடம் பரம்பொருளின் நினைவையே எழுப்பின. காலையும் (உஷஸ்), இரவும் (ராத்ரீ) தேவியராகக் கொள்ளப்பட்டு அவர்கள் எழுந்தருள்வதாகப் பாடுகின்றனர் அந்த முனிவர்கள். இத்தகைய உஷஸ் மற்றும் ராத்ரீ ஸூக்தங்கள் வேதங்களில் பல உள்ளன. உதாரணத்திற்கு ஒன்று இங்கே—

ஓம் || ப்ரதி கேதவ: ப்ரதமா அத்ருச்ரன்னூர்த்வா

அஸ்யா அஞ்ஜயோ வி ச்ரயந்தே |

உஷோ அர்வாசா ப்ருஹதா ரதேன

ஜ்யோதிஷ்மதா வாமமஸ்மப்யம் வக்ஷி || 1 ||

ப்ரதமா கேதவ: – முதல் அடையாளங்கள்; அத்ருச்ரன் – தெரியத் தொடங்கிவிட்டன; அஸ்யா: – அவளது; அஞ்ஜய: – கிரணங்கள்; ஊர்த்வா ப்ரதி – வானப் பகுதிகளில் எல்லாம்; வி ச்ரயந்தே – பரவுகின்றன; உஷ: – உஷை தேவியே; ஜ்யோதிஷ்மதா – ஒளி மிக்க; வாமம் – அழகிய; ப்ருஹதா – பெரிய; ரதேன – தேரில்;

வக்ஷி – நெஞ்சம் நிறைந்த; அஸ்மப்யம் – எங்களுக்காக; அர்வாசா – கொண்டு வருவாய்.

1. உஷைதேவி எழுந்தருள்வதற்கான முதல் அடையாளங்கள் தெரியத்தொடங்கிவிட்டன. அவளது கிரணங்கள் வானப்பகுதிகளில் எல்லாம் பரவுகின்றன. உஷைதேவியே, நீ உனது ஒளிமிக்க அழகிய பெரிய தேரில் உனது நெஞ்சம் நிறைந்த செல்வங்களை எங்களுக்குக் கொண்டுவருவாய்!

ப்ரதி ஷீமக்னிர்ஜரதே ஸமித்த:

ப்ரதி விப்ராஸோ மதிபிர் க்ருணந்த: |

உஷா யாதி ஜ்யோதிஷா பாதமானா

விச்வா தமாம்ஸி துரிதாப தேவீ || 2 ||

ஸமித்த: – தூண்டப்படுகின்ற; அக்னி: – அக்கினி; ப்ரதி ஷீம் – மேன்மேலும்; ஜரதே – வளர்கிறது; விப்ராஸ: – புரோகிதர்கள்; ப்ரதி மதிபி: – அழகிய பாடல்களால்; க்ருணந்த: – போற்றுகின்றனர்; உஷை தேவீ – உஷா தேவி; ஜ்யோதிஷா – ஒளியால்; விச்வா – எல்லா; தமாம்ஸி – இருளையும்; பாதமானா – விலக்கியபடி; துரித அப – குறைகளைப் போக்கியபடி; யாதி – வருகிறாள்.

2. முனிவர்களின் யாக குண்டங்களில் தூண்டப்படுகின்ற அக்கினி மேன்மேலும் வளர்கிறது. புரோகிதர்கள் அழகிய

பாடல்களால் உஷை தேவியைப் போற்றுகின்றனர். அவள் தனது ஒளியால் எல்லா இருளையும் விலக்கியபடி, குறைகளைப்போக்கியபடி வருகிறாள்.

ஏதா உ த்யா: ப்ரயத்ருச்ரன் புரஸ்தாத்

ஜ்யோதிர் யச்சந்தீருஷஸோ விபாதீ: |

அஜீஜனன் ஸூர்யம் யஜ்ஞமக்னிம்பாசீனம்

தமோ அகாதஜுஷ்டம் || 3 ||

*யச்சந்தீ: – உதிக்கின்ற; உஷஸ: – உஷை தேவியின்; ஜ்யோதி: விபாதீ: – ஒளிமயமான கிரணங்கள்; புரஸ்தாத் ப்ரதி – கிழக்கில்; அத்ருச்ரன் – தெரிகின்றன; ஏதா உ த்யா: – அவை; ஸூர்யம் – சூரியனையும்; யஜ்ஞம் – யாகங்களையும்; அக்னிம் – அக்கினியையும்; அஜீஜனன் – ஓங்கச் செய்கின்றன; அகாதஜுஷ்டம் – அடர்ந்த; தம: – இருளை; அபாசீனம் – விலக்குகின்றன.*

3. உதிக்கின்ற உஷை தேவியின் ஒளிமயமான கிரணங்கள் கிழக்கில் தெரிகின்றன. அவை சூரியனையும் யாகங்களையும் அக்கினியையும் ஓங்கச் செய்கின்றன; அடர்ந்த இருளை விலக்குகின்றன.

அசேதி திவோ துஹிதா மகோனீ

விச்வே பச்யந்த்யுஷஸம் விபாதீம் |

ஆஸ்தாத் ரதம் ஸ்வதயா யுஜ்யமானமா யமச்வாஸ:

ஸுயுஜோ வஹந்தி || 4 ||

மகோனீ – சிறப்புமிக்க; திவ: துஹிதா – வான மகள்; அசேதி – வருகிறாள்; விபாதீம் – ஒளிமிக்க; உஷஸம் – உஷை தேவியை; விச்வே – எல்லோரும்; பச்யந்தி – பார்க்கின்றனர்; அச்வாஸ: – குதிரைகளால்; ஸுயுஜ: – சுலபமாக; வஹந்தி – இழுக்கப்படுகின்ற; ஸ்வதயா யுஜ்யமானம் – சொந்த மகிமையுடன் கூடிய; அயம் ரதம் – அவளது ரதம்; அஸ்தாத் – வருகிறது.

4. சிறப்புமிக்க வான மகள் வருகிறாள். ஒளிமிக்க அந்த உஷை தேவியை எல்லோரும் பார்க்கின்றனர். குதிரைகளால் சுலபமாக இழுக்கப்படுவதும் சொந்த மகிமையுடன் கூடியதுமான அவளது ரதம் வருகிறது.

ப்ரதி த்வாத்ய ஸுமனஸோ புதந்தாऽஸ்மாகாஸோ

மகவானோ வயம் ச |

திவ்விலாயத்வமுஷஸோ விபாதீர்யூயம்

பாத ஸ்வஸ்திபி: ஸதா ந: || 5 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

த்வா – உன்னை; வயம் – நாங்களும்; அஸ்மாகாஸ: ச – எங்களைச் சேர்ந்தவர்களும்; ஸுமனஸ: – நல்

*மனத்தினராக*; மகவான: – *நிறைந்த நெஞ்சினராக*; அத்ய – *இன்று*; புதன் – *எழுப்புகிறோம்*; விபாதீ: – *ஒளிர்கின்ற*; உஷஸ: – *உஷைதேவியே*; திலு இல ஆயத்வம் – *பனித்துளிகளால் பூமியை வளப்படுத்து*; யூயம் – *நீங்கள்*; ஸதா – *எப்போதும்*; ந: – *எங்களை*; ஸ்வஸ்திபி: – *நன்மைகளால்*; பாத – *வளப்படுத்துங்கள்*.

5. உஷை தேவியே, உன்னை நாங்களும் எங்களைச் சேர்ந்தவர்களும் நல் மனத்தினராக, நிறைந்த நெஞ்சினராக இன்று எழுப்புகிறோம். ஒளிர்கின்ற உஷை தேவியே, பனித்துளிகளால் பூமியை வளப்படுத்துவாய். தேவர்களே, நீங்கள் எப்போதும் எங்களை நன்மைகளால் வளப்படுத்துங்கள்!



# १४. रात्रिसूक्तम्

ऋग्वेद, 10.127

ॐ॥ रात्री व्यख्यदायती पुरुत्रा देव्य(अ)क्षभिः ।

विश्वा अधिश्रियोधित ॥१॥

ओर्वप्रा अमर्त्या निवतो देव्यु(उ)द्वतः ।

ज्योतिषा बाधते तमः ॥२॥

निरुस्वसारमस्कृतोषसं देव्यायती ।

अपेदु हासते तमः ॥३॥

सा नो अद्य यस्या वयं नि ते यामन्न विक्ष्महि ।

वृक्षेन वसतिं वयः ॥४॥

नि ग्रामासो अविक्षत नि पद्वन्तो नि पक्षिणः ।

निश्येनासश्चिदर्थिनः ॥५॥

यावया वृक्य(अं) वृकं यवयस्तेनमूर्म्ये ।

अथा नः सुतरा भव ॥६॥

उप॑मा पेपि॑श॒त्तमः॑ कृ॒ष्णं व्य॑क्तमस्थित। उष॑ ऋ॒णेव॑ यातय ॥७॥

उप॑ ते॒ गा इ॒वाक॑रं वृणी॒ष्व दु॑हितर्दिवः।

रात्रि॒स्तोमं॒ न जि॒ग्युषे॑ ॥८॥

ॐ शान्ति॒ः शान्ति॒ः शान्ति॑ः ॥

## 14. ராத்ரி ஸூக்தம்

*ரிக் வேதம், 10.127*

மனிதன் ஒளியைத் தேடுகிறான். ஆனால் அவனால் அதில் நீண்ட நேரம் இருக்க முடிவதில்லை. இரவைக் கண்டு அஞ்சுகிறான், ஆனால் இரவு தரும் ஓய்விற்காக அவன் அதனை நாடியேயாக வேண்டியுள்ளது. எல்லா உயிரினங்களுக்கும் ஓய்வைத் தருவது இரவு. தூங்கும் மனிதன், அறிந்த இந்த உலகிலிருந்து அறியா உலகிற்குப் போகிறான். எனவே துணைக்காக, பாதுகாப்பிற்காக இரவின் தேவியைப் பிரார்த்திக்கிறான். இத்தகைய பிரார்த்தனையே ராத்ரி ஸூக்தம். இதனை ஓதினால் தீய கனவுகள் வராதென்று சொல்லப்படுகிறது.

ஓம் || ராத்ரீ வ்யக்யதாயதீ புருத்ரா தேவ்ய(அ)க்ஷபி: |

விச்வா அதிச்ரியோதித || 1 ||

*ராத்ரீ – இரவின் தேவி; வ்யக்யதாயதீ – எழுந் தருள்கிறாள்; தேவீ – அவள்; புருத்ரா – மகிமைமிக்க;*

அக்ஷபி: – கண்களால்; விச்வா – எல்லா; அதிச்ரியோதித – பெருமைகளையும் உடையவளாக இருக்கிறாள்.

1. இரவின் தேவி எழுந்தருள்கிறாள். அவள் நட்சத்திரங்களாகிய தன் கண்களால் எல்லாவற்றையும் பார்க்கிறாள். எல்லா மதிமைகளும் பெருமைகளும் உடையவளாக இருக்கிறாள் அவள்.

ஓர்வப்ரா அமர்த்யா நிவதோ தேவ்யு(உ)த்வத: ।

ஜ்யோதிஷா பாததே தம: ॥ 2 ॥

அமர்த்யா – அழிவற்ற; தேவீ – தேவி; நிவத: – கீழும்; உத்வத: – மேலும்; உரு – எங்கும்; அப்ரா – பரவுகிறாள்; ஜ்யோதிஷா – ஒளியால்; தம: – இருளை; பாததே – போக்குகிறாள்.

2. அழிவற்ற அந்த தேவி, கீழும் மேலும் எங்கும் பரவுகிறாள்; அவளே ஒளியால் இருளை போக்குகிறாள்.

நிருஸ்வஸாரமஸ்க்ருதோஷஸம் தேவ்யாயதீ ।

அபேது ஹாஸதே தம: ॥ 3 ॥

ஆயதீ – வருகின்ற; தேவி – தேவி; ஸ்வஸாரம் – சகோதரியான; உஷஸம் – உஷை தேவியை; நிரு அஷ்க்ருத – உரிய இடத்தில் வைக்கிறாள்; தம: – இருள்; அபேது ஹாஸதே – விலகுகிறது.

3. வருகின்ற அந்த இரவின் தேவி தன் சகோதரியான உஷை தேவியை உரிய இடத்தில் வைக்கிறாள். அதனால் இருள் தானே விலகுகிறது.

ஸா நோ அத்ய யஸ்யா வயம் நி தே யாமன்ன

விக்ஷ்மஹி ।

வ்ருக்ஷேன வஸதிம் வய: ॥ 4 ॥

ஸா – *அந்த இரவின் தேவி;* அத்ய – *இன்று;* ந: – *நமக்கு;* வய: – *பறவைகள்;* வ்ருக்ஷேன – *மரத்திலுள்ள;* வஸதிம் – *கூடுகளுக்கு;* யாம் – *அவளுடைய;* நிதே – *வரவின் காரணமாக;* வயம் – *நாம்;* அன்னவிக்ஷ்மஹி – *வீடுகளுக்குத் திரும்புவோம்.*

4. இரவின் தேவி இன்று நமக்கு அருளட்டும். பறவைகள் மரத்திலுள்ள கூடுகளுக்குத் திரும்புவதுபோல், அவளுடைய வரவின் காரணமாக நாம் வீடுகளுக்குத் திரும்புவோம்.

நி க்ராமாஸோ அவிக்ஷத நி பத்வந்தோ நி பக்ஷிண: ।

நிச்யேனாஸ்ச்சிதர்த்தின: ॥ 5 ॥

க்ராமாஸ: – *மனிதர்கள்;* நி அவிக்ஷத – *வீடு திரும்பி விட்டார்கள்;* பத்வந்த: நி – *மிருகங்கள் திரும்பி விட்டன;* பக்ஷிண: நி – *பறவைகள் திரும்பி விட்டன;* ச்யேனாஸ: நி – *பருந்துகள் திரும்பிவிட்டன;* சிதர்த்தின: – *பயணிகளும்.*

5. மனிதர்கள் வீடுதிரும்பிவிட்டார்கள், மிருகங்கள் திரும்பி விட்டன, பறவைகள் திரும்பிவிட்டன, பருந்துகள் திரும்பிவிட்டன, பயணிகளும் ஓய்வில் ஆழ்ந்துவிட்டனர்.

யாவயா வ்ருக்ய(அம்) வ்ருகம் யவயஸ்தேனமூர்ம்யே |

அதா ந: ஸுதரா பவ || 6 ||

ஊர்ம்யே – இரவின் தேவியே; வ்ருக்யம் – பெண் ஓநாயும்; வ்ருகம் – ஆண் ஓநாயும்; ஸ்தேனம் – திருடனும்; யாவயா – எங்களை அணுகாமல்; யவய – விரட்டி விடு; அதா – மேலும்; ந: – எங்களை; ஸுதரா பவ – ஒளியுலகங்களுக்கு அழைத்துச் செல்வாய்.

6. இரவின்தேவியே, பெண் ஓநாயும், ஆண் ஓநாயும், திருடனும் எங்களை அணுகாமல் விரட்டிவிடு. எங்களை ஒளியுலகங்களுக்கும் அழைத்துச் செல்வாய்.

உப மா பேபிசத்தம: க்ருஷ்ணம் வ்யக்தமஸ்தித |

உஷ ரிணேவ யாதய || 7 ||

உஷ – உஷை தேவியே; க்ருஷ்ணம் – இருண்ட; வ்யக்தம் – பரந்த; அஸ்தித – மறைக்கவல்ல; தம: – காரிருள்; பேபிசத் – அணுகியுள்ளது; மா உப – அணுகாமல்செய்; ரிண இவ – கடன்போல்; யதாய – விடுவி.

7. உஷை தேவியே! இருண்டதும், எங்கும் பரந்ததும், எல்லாவற்றையும் மறைக்கவல்லதுமான காரிருள் அணுகி யுள்ளது. அது என்னை அணுகாமலிருக்கச் செய். செல்வத்தை அளித்து கடனிலிருந்து விடுவிப்பதுபோல் எங்களை அறியாமை இருளிலிருந்து விடுப்பாய்!

உப தே கா இவாகரம் வ்ருணீஷ்வ துஹிதர்திவ: |

ராத்ரிஸ்தோமம் ந ஜிக்க்யுஷே || 8 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

*துஹிதர் திவ: – வான மகளே; கா இவ – பசு போல்; தே உப – உன்னை அணுகி; ஆகரம் – இந்தப் பாடலைச் சமர்ப்பிக்கிறோம்; வ்ருணீஷ்வ – ஏற்றுக் கொள்வாய்; ராத்ரி – இரவின் தேவியே; ஸ்தோமம் – இந்தப் பிரார்த்தனையை; ந ஜிக்யுஷே – எங்களுக்காக நிறைவேற்றுவாய்.*

7. வான மகளே, பசு பால் தருவதுபோல் நான் உன்னை அணுகி இந்தப் பாடலைச் சமர்ப்பிக்கிறோம், ஏற்றுக் கொள்வாய். இரவின் தேவியே, இந்தப் பிரார்த்தனையை எங்களுக்காக நிறை வேற்றுவாய்!



# १५. भूमि सूक्तम्

अथर्ववेद, 12.1

ॐ॥ सत्यं बृहदृतमुग्रं दीक्षा तपो ब्रह्म यज्ञः पृथिवीं धारयन्ति।
सा नो भूतस्य भव्यस्य पत्न्युरुं लोकं पृथिवी नः कृणोतु ॥१॥
असंबाधं मध्यतो मानवानां यस्या उद्वतः प्रवतः समं बहु।
नानावीर्या ओषधीर्या बिभर्ति पृथिवी नः प्रथतां राध्यतां नः ॥२॥
यस्यामापः परिचराः समानीरहोरात्रे अप्रमादं क्षरन्ति।
सा नो भूमिर्भूरिधारा पयो दुहामथो उक्षतु वर्चसा ॥३॥
यत् ते मध्यं पृथिवि यच्च नभ्यं यास्त ऊर्जस्तन्वऽः संबभूवुः।
तासु नो धेह्यभि नः पवस्व माता भूमिः पुत्रो अहं पृथिव्याः।
पर्जन्यः पिता स उ नः पिपर्तु ॥४॥
उदीराणा उतासीनास्तिष्ठन्तः प्रक्रामन्तः।
पद्भ्यां दक्षिणसव्याभ्यां मा व्यथिष्महि भूम्याम् ॥५॥

यत् ते भूमे विखनामि क्षिप्रं तदपि रोहतु ।
मा ते मर्म विमृग्वरि मा ते हृदयमर्पिपम् ॥६॥
ये ग्रामा यदरण्यं याः सभा अधि भूम्याम् ।
ये संग्रामाः समितयस्तेषु चारु वदेम ते ॥७॥
भूमे मातर्नि धेहि मा भद्रया सुप्रतिष्ठितम् ।
संविदाना दिवा कवे श्रियां मा धेहि भूत्याम् ॥८॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 15. பூமி ஸூக்தம்

*அதர்வ வேதம், 12.1*

உயிரினமே அழிந்துவிடுமோ என்ற அச்சுறுத்தலின் காரணமாக இன்று சுற்றுச்சூழல், இயற்கையுடன் இயைந்து வாழல் போன்றவை பற்றியெல்லாம் ஆழ்ந்து சிந்திக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறான் மனிதன். நோயுற்ற பிறகு சிகிச்சையைத் தேடுகிறான் அவன். வேத கால மனிதனோ நோயையே தவிர்ப்பதற்கான முயற்சியைக் கையாண்டான். மனிதன்-இயற்கை உறவு வேதகால வாழ்க்கையின் அடிப்படையாக இருந்தது. பூமியை அவன் எப்படிப் போற்றினான் என்பதற்கு ஓர் உதாரணமே இந்த பூமி ஸூக்தம். 63 மந்திரங்களாலான இந்த ஸூக்தத்தின் சில பகுதிகள் இங்கே தரப்படுகின்றன.

ஓம் || ஸத்யம் ப்ருஹத்ரிதமுக்ரம் தீக்ஷா தபோ

ப்ரஹ்ம யஜ்ஞ: ப்ருதிவீம் தாரயந்தி |

ஸா நோ பூதஸ்ய பவ்யஸ்ய பத்ன்யுரும்

லோகம் ப்ருதிவீ ந: க்ருணோது || 1 ||

ப்ருஹத் ஸத்யம் – *மேலான உண்மை;* உக்ரம் ரிதம் – *மாறாத நேர்மை;* தீக்ஷா – *புனிதம்;* தப: – *தவம்;* ப்ரஹ்ம – *நல்லொழுக்க வாழ்க்கையினால் வரும் ஆற்றல்;* யஜ்ஞும் – *வேள்வி;* ப்ருதிவீம் – *பூமியை;* தாரயந்தி – *தாங்குகின்றன;* பூதஸ்ய – *கடந்தவற்றின்;* பவ்யஸ்ய – *வருபவற்றின்;* பத்னி: – *தலைவியான;* ஸா: ப்ருதிவீ – *அந்த பூமா தேவி;* உரும் லோகம் – *பரந்த இடத்தை;* ந: – *நமக்கு;* க்ருணோது – *தரட்டும்.*

1. மேலான உண்மை, மாறாத நேர்மை, புனிதம், தவம், நல்லொழுக்க வாழ்க்கையினால் வரும் ஆற்றல், வேள்வி இவையே பூமியைத் தாங்குகின்றன. கடந்து சென்றவை மற்றும் இனி வருபவற்றின் தலைவியான அந்த பூமாதேவி பரந்த இடத்தை நமக்குத் தரட்டும்!

அஸம்பாதம் மத்யதோ மானவானாம்

யஸ்யா உத்வத: ப்ரவத: ஸமம் பஹு |

நானாவீர்யா ஓஷதீர்யா பிபர்த்தி

ப்ருதிவீ ந: ப்ரததாம் ராத்யதாம் ந: || 2 ||

மானவானாம் – *மனிதர்களுக்கு;* மத்யத: – *இடையில்;* அஸம்பாதம் – *பகைமை இன்மை;* உத்வத: – *உயரங்கள்;* ப்ரவத: – *மேடுகள்;* பஹு ஸமம் – *பல சமதளங்கள்;* யஸ்யா – *யாருடையதோ;* நானாவீர்யா – *பல்வேறு ஆற்றல்களுடைய;* ஓஷதீ: – *மூலிகைகளை;* யா – *யார்;* பிபர்த்தி – *தாங்குகிறாளோ;* ப்ருதிவீ – *அந்த பூமி;* ந: – *நமக்கு;* ப்ரததாம் – *பரந்த இடத்தைத் தரட்டும்;* ந: – *நமக்கு;* ராத்யதாம் – *வளம் நிறைந்ததாகட்டும்.*

2. மனிதர்களுக்கிடையில் பகைமை ஒழியட்டும். உயரங்கள், மேடுகள், சமதளங்கள் எல்லாம் யாருடையதோ, பல்வேறு ஆற்றல்களுடைய மூலிகைகளை யார் தாங்குகிறாளோ, அந்த பூமி நமக்கு பரந்த இடத்தைத் தரட்டும்; நமக்கு வளம் நிறைந்ததாக ஆகட்டும்!

யஸ்யாமாப: பரிசரா: ஸமானீரஹோராத்ரே

அப்ரமாதம் க்ஷரந்தி ।

ஸா நோ பூமிர்பூரிதாரா பயோ

துஹாமதோ உக்ஷது வர்ச்சஸா || 3 ||

பரிசரா: – வளைந்தோடுகின்ற; ஆப: – நதிகள்; யஸ்யாம் – யார்மீது; அஹோராத்ரே – பகலும் இரவும்; அப்ரமாதம் – தவறாமல்; ஸமானீ – சமமாக; க்ஷரந்தி – ஓடுகின்றனவோ; பூரிதாரா: – பல்வேறு பிரிவுகள் நிறைந்த; ஸா – அந்த; பூமி: – பூமா தேவி; ந: – நமக்கு; பய: – செல்வத்தை; துஹாம் – தரட்டும்; அத: – மேலும்; வர்ச்சஸா – செல்வ வளத்தை; உக்ஷது – பொழியட்டும்.

3. வளைந்தோடுகின்ற நதிகள் யார்மீது பகலும் இரவும் தவறாமல் சமமாக ஓடுகின்றனவோ, பல்வேறு பிரிவுகள் நிறைந்த அந்த பூமாதேவி நமக்கு செல்வத்தைத் தரட்டும்; செல்வ வளத்தைப் பொழியட்டும்!

யத் தே மத்யம் ப்ருதிவி யச்ச நப்யம்
யாஸ்த ஊர்ஜஸ்தன்வ: ஸம்பபூவு: |
தாஸு நோ தேஹ்யபி ந: பவஸ்வ
மாதா பூமி: புத்ரோ அஹம் ப்ருதிவ்யா: |
பர்ஜன்ய: பிதா ஸ உ ந: பிபர்த்து || 4 ||

ப்ருதிவி – பூமித் தாயே; தே – உனக்கு; மத்யம் – நடுவில்; யத் – என்ன உள்ளதோ; தே – உனது; நப்யம் ச – தொப்புளில்; யத் – என்ன உள்ளதோ; தே – உனது;

தன்வ: – தேகத்திலிருந்து; யா: – என்னென்ன; ஊர்ஜ: – உணவு; ஸம்பபூவு: – வெளிப்படுமோ; தாஸு – அவற்றை; ந: – எங்களுக்கு; தேஹி – தருவாய்; அபி – மேலும்; ந: – எங்களை; பவஸ்வ – புனிதப் படுத்துவாய்; மாதா – தாய்; பூமி: – பூமி; அஹம் – நான்; ப்ருதிவ்யா: – பூமித்தாயின்; புத்ர: – மகன்; பிதா – தந்தை; பர்ஜன்ய: – இந்திரன்; ஸ: உ – அவனும்; ந: – நம்மை; பிபர்த்து – நிறைவுறச் செய்யட்டும்.

4. பூமித் தாயே, உன்னுள் என்ன உள்ளதோ, உனது தொப்புளில் என்ன உள்ளதோ, உனது தேகத்திலிருந்து என்னென்ன உணவு வெளிப்படுமோ அவற்றை எங்களுக்குத் தருவாய். எங்களைப் புனிதப் படுத்துவாய். எனது தாய் பூமி; நான் பூமித்தாயின் மகன். மழைக்குத் தலைவனான இந்திரன் என் தந்தை; அவனும் நம்மை நிறைவுறச் செய்யட்டும்!

உதீரா॒ணா உ॒தாஸீ॑னா॒ஸ்திஷ்ட॑ந்த: ப்ர॒க்ராம॑ந்த: ।
ப॒த்ப்யாம் த॑க்ஷிணஸ॒வ்யாப்ய॒ாம் மா
வ்ய॑திஷ்மஹி பூம்யா॑ம் ॥ 5 ॥

உதீராணா உத – எழும்போதும்; ஆஸீனா: – உட்காரும்போதும்; திஷ்டந்த: – நிற்கும் போதும்; ப்ரக்ராமந்த: – உலவும்போதும்; தக்ஷிண ஸவ்யாப்யாம் – வலது மற்றும் இடது; பத்ப்யாம் – கால்களால்; பூம்யாம் – பூமியில்; மா வ்யதிஷ்மஹி – உதைக்காமல் இருப்போம்.

5. எழும்போதும், உட்காரும்போதும், நிற்கும்போதும், உலவும்போதும் வலது மற்றும் இடது கால்களால் பூமியில் உதைக்காமல் இருப்போம்!

யத் தே பூமே விகனாமி க்ஷிப்ரம் தத்பி ரோஹது ।
மா தே மர்ம விம்ருக்வரி மா தே ஹ்ருதய-
மர்ப்பிபம் ॥ 6 ॥

பூமே - பூமித் தாயே; தே - உன்னில்; யத் - எதை; விகனாமி - தோண்டினாலும்; தத் அபி - அது; க்ஷிப்ரம் - விரைவில்; ரோஹது - வளரட்டும்; விம்ருக்வரி - தூய்மைப்படுத்துபவளே; தே - உனது; மர்ம - மர்மப் பகுதிகளையோ; ஹ்ருதயம் - இதயப் பகுதிகளையோ; மா அர்ப்பிபம் - சேதப் படுத்தாமல் இருப்போமாக.

6. பூமித் தாயே, உன்னைத் தோண்டி ஏதை நட்டாலும் அது விரைவில் வளரட்டும்; தூய்மைப்படுத்துபவளே, உனது மர்மப் பகுதிகளையோ இதயப் பகுதிகளையோ சேதப்படுத்தாமல் இருப்போமாக!

யே க்ராமா யதரண்யம் யா: ஸபா அதி பூம்யாம் ।
யே ஸங்க்ராமா: ஸமிதயஸ்தேஷு சாரு வதேம
தே ॥ 7 ॥

பூம்யாம் அதி - பூமியின்மீது; யே - எந்த; க்ராமா: - கிராமங்கள்; யத் அரண்யம் - எந்தக் காடுகள்; யா: ஸபா:

– எந்தச் சபைகள்; யே ஸங்க்ராமா: – எந்தப் போர்கள்; ஸமிதய: – கூட்டங்கள்; தேஷு – அந்த இடங்களில் எல்லாம்; தே – உனக்கு; சாரு – இனிமையானவற்றையே; வதேம – பேசுவோம்.

7. பூமியின்மீது எந்தக் கிராமங்கள், எந்தக் காடுகள், எந்தச் சபைகள், எந்தப் போர்கள், எந்தக் கூட்டங்கள் உள்ளனவோ, அந்த இடங்களில் எல்லாம் உனக்கு இனிமையானவற்றையே பேசுவோம்.

பூமே மாதர்நிதேஹி மா பத்ரயா ஸுப்ரதிஷ்ட்டிதம் ।
ஸம்விதானா திவா கவே ச்ரியாம் மா தேஹி
பூத்யாம் ॥ 8 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

மாத: பூமே – பூமித் தாயே; மா – என்னை; பத்ரயா – மங்கலத்துடன்; ஸுப்ரதிஷ்ட்டிதம் – நிலை பேற்றுடன்; நிதேஹி – திகழச் செய்வாய்; கவே – ரிஷியே; திவே – விண்ணுலகுடன்; மா – என்னை; ஸம்விதானா – இயைபுடன் இருக்கச் செய்து; ச்ரியாம் – செல்வத்தை யும்; பூத்யாம் – ஐசுவரியத்தையும்; தேஹி – தருவாய்.

8. பூமித் தாயே, என்னை மங்கலத்துடனும் நிலைபேற்றுட னும் திகழச் செய்வாய். ரிஷியே, விண்ணுலகுடன் என்னை இயை புடன் இருக்கச்செய்து செல்வத்தையும் ஐசுவரியத்தையும் தருவாய்!



# १६. अग्नि सूक्तम्

ऋग्वेद, 1.1

ॐ ॥ अग्निमीळे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् । होतारं रत्नधातमम् ॥ १ ॥

अग्निः पूर्वेभिर्ऋषिभिरीड्यो नूतनैरुत । स देवाँ एह वक्षति ॥ २ ॥

अग्निना रयिमश्नवत् पोषमेव दिवेदिवे । यशसं वीरवत्तमम् ॥ ३ ॥

अग्ने यं यज्ञमध्वरं विश्वतः परिभूरसि । स इद् देवेषु गच्छति ॥ ४ ॥

अग्निर्होता कविक्रतुः सत्यश्चित्रश्रवस्तमः । देवो देवेभिरागमत् ॥ ५ ॥

यदङ्ग दाशुषे त्वमग्ने भद्रं करिष्यसि । तवेत् तत् सत्यमङ्गिरः ॥ ६ ॥

उप त्वाग्ने दिवेदिवे दोषावस्तर्धिया वयम् । नमो भरन्त एमसि ॥ ७ ॥

राजन्तमध्वराणां गोपामृतस्य दीदिविम् । वर्धमानं स्वे दमे ॥ ८ ॥

स नः पितेव सूनवेऽग्ने सूपायनो भव । सचस्वा नः स्वस्तये ॥ ९ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

# 16. அக்னி ஸூக்தம்

*ரிக்வேதம், 1.1*

ரிக்வேதத்தின் முதற்பாடல் இது. அக்கினியைப் புகழ்கின்ற பாடல் இது.

ஓம் || அக்னிமீளே புரோஹிதம் யஜ்ஞஸ்ய

தேவம்ரித்விஜம் । ஹோதாரம் ரத்னதாதமம் || 1 ||

யஜ்ஞஸ்ய – வேள்வியின்; புரோஹிதம் – புரோகிதனும்; தேவம் – தெய்வீகமானவனும்; ரித்விஜம் – வேள்வியின் எஜமானனும்; ஹோதாரம் – ஆஹுதிகளை எடுத்துச் சென்று அளிப்பவனும்; ரத்னதாதமம் – பெரும் செல்வத்தை உடையவனுமான; அக்னிம் – அக்கினி தேவனை; ஈளே – வழிபடுகிறேன்.

1. வேள்வியின் புரோகிதரும், தெய்வீகமானவனும், வேள்வியின் எஜமானனும், தேவர்களுக்கு ஆஹுதிகளை எடுத்துச் சென்று அளிப்பவனும், பெரும் செல்வத்தை உடையவனுமான அக்கினி தேவனை வழிபடுகிறேன்.

அக்னி: பூர்வேபிர்ரிஷிபிரீட்யோ நூதனைருத ।

ஸ தேவாக்ம் ஏஹ வக்ஷதி || 2 ||

பூர்வேபி: – பண்டைய; உத – மற்றும்; நூதனை: – புதிய; ரிஷிபி: – மகான்களால்; ஈட்யா – வழிபடப்படு

கின்ற; ஸ: அக்னி: - அந்த அக்கினி; தேவான் - தேவர்களை; ஏஹ - இங்கே; வக்ஷதி - அழைத்து வரட்டும்.

2. பண்டைய மற்றும் புதிய மகான்களால் வழிபடப்படுகின்ற அந்த அக்கினி, தேவர்களை இங்கே அழைத்து வரட்டும்.

அக்னினா ரயிமச்னவத் போஷமேவ திவேதிவே |
யசஸம் வீரவத் தமம் || 3 ||

யசஸம் - புகழைத் தருவதும்; வீரவத் தமம் - மனித குலத்தை வளர்ப்பதும்; திவேதிவே - நாளுக்கு நாள்; போஷம் ஏவ - வளர்வதுமான; ரயிம் - செல்வத்தை; அக்னினா - அக்கினியால்; அச்னவத் - பெறுகிறான்.

3. அக்கினியை வழிபடுபவன் புகழைத் தருவதும், மனித குலத்தை வளர்ப்பதும், நாளுக்கு நாள் வளர்வதுமான செல்வத்தைப் பெறுகிறான்.

அக்னே யம் யஜ்ஞமத்வரம் விச்வத: பரிபூரஸி |
ஸ இத் தேவேஷு கச்சதி || 4 ||

அக்னே - அக்கினியே; யஜ்ஞம் - யஜ்ஞமாகச் செய்கின்ற; யம் - எந்த; அத்வரம் - வழிபாட்டை; விச்வத: - எல்லா பக்கங்களிலும்; பரிபூரஸி - நீ காக்கிறாயோ; ஸ: - அந்த வழிபாடு;

*தேவேஷு – தேவர்களை; இத் கச்சதி – நிச்சயமாக அடைகிறது.*

4. அக்கினியே, யஜ்ஞமாகச் செய்கின்ற எந்த வழிபாட்டை எல்லா பக்கங்களிலும் நீ காக்கிறாயோ, அந்த வழிபாடு தேவர்களை நிச்சயமாக அடைகிறது.

அக்னிர்ஹோதா கவிக்ரது: ஸத்யச்சித்ரச்ரவஸ்தம: ।

தேவோ: தேவேபிராகமத் ॥ 5 ॥

ஹோதா – *முதல் புரோகிதனும்;* கவிக்ரது: – *யஜ்ஞத்தின் உட்பொருளை வெளிப்படுத்துபவனும்;* ஸத்ய: – *உண்மை வடிவினனும்;* சித்ர ச்ரவஸ்தம: – *மேலான மகிமை பொருந்தியவனும்;* அக்னி: தேவ: – *அக்கினி தேவன்;* தேவேபி: – *மற்ற தேவர்களுடன்;* ஆ கமத் – *இங்கே எழுந்தருள்வானாக.*

5. முதல் புரோகிதனும், யஜ்ஞத்தின் உட்பொருளை வெளிப்படுத்துபவனும், உண்மை வடிவினனும், மேலான மகிமை பொருந்தியவனுமாகிய அக்கினி தேவன் மற்ற தேவர்களுடன் இங்கே எழுந்தருள்வானாக.

யதங்க தாசுஷே த்வமக்னே பத்ரம் கரிஷ்யஸி ।

தவேத் தத் ஸத்யமங்கிர: ॥ 6 ॥

அக்னே – *அக்கினியே;* த்வம் – *நீ;* யத் அங்க – *எந்த செல்வத்தை;* தாசுஷே – *கொடுக்கிறாயோ;*

பத்ரம் – *நன்மையை;* கரிஷ்யஸி – *செய்கிறாயோ;* தத் – *அது;* ஸத்யம் – *நிச்சயமாக;* அங்கிர: – *அங்கிரன் என்ற பெயர்;* தவேத் – *உனக்கே வந்து சேர்கிறது.*

6. அக்கினியே, நீ எந்த செல்வத்தைக் கொடுக்கிறாயோ, எந்த நன்மையைச் செய்கிறாயோ அது அங்கிரன் என்ற பெயருடைய உனக்கே நிச்சயமாக வந்து சேர்கிறது.

வாழ்க்கையின் சுழற்சிப் போக்கை இந்த மந்திரம் சுட்டிக் காட்டுகிறது. இயற்கை சக்திகளே இந்திரன், வருணன், வாயு, அக்கினி தேவர்களாக உருவகப் படுத்தப்படுகின்றன என்பதை முன்பே கண்டோம். மனிதன் இயற்கையைப் பேணினால் இயற்கையும் மனிதனைப் பேணும். இவ்வாறு ஒருவருக்கொருவர் துணை செய்து வாழ வேண்டும் என்பதே இயற்கை யின் திட்டம். இதனையே இந்த மந்திரம் எடுத்துக் காட்டுகிறது— மனிதன் அக்கினியை வழிபடு கிறான், அதாவது இயற்கையைப் போற்றுகிறான். அதனால் அக்கினிதேவன், அதாவது இயற்கை அவனுக்கு செல்வத்தையும் நன்மையையும் அளிக் கிறது. அவற்றின் காரணமாக வளமுற்ற மனிதன் மீண்டும் அக்கினியைப் பேணுகிறான். இதனால்தான் ‘உனக்கே திரும்பி வருகிறது’ என்று இந்த மந்திரம் கூறுகிறது.

உப த்வாக்னே திவேதிவே தோஷாவஸ்தர்தியா வயம் ।

நமோ பரந்த ஏமஸி ॥ 7 ॥

தோஷாவஸ்த – தோஷங்களை அழிக்கின்ற; அக்னே – அக்கினியே; நம: – வணக்கம்; வயம் – நாங்கள்; த்வா – உன்னை; திவேதிவே – தினமும்; தியா – தியானத்தினால்; உப பரந்த ஏமஸி – அணுகுகிறோம்;

7. தோஷங்களை அழிக்கின்ற அக்கினியே உனக்கு வணக்கம். நாங்கள் உன்னை தினமும் தியானத்தினால் அணுகுகிறோம்.

ராஜந்தமத்வராணாம் கோபாம்ருதஸ்ய தீதிவிம் ।

வர்தமானம் ஸ்வே தமே ॥ 8 ॥

ராஜந்தம் – ஒளி படைத்தவன்; அத்வராணாம் – யாகங்களின்; கோப – காவலன்; அம்ருதஸ்ய தீதிவிம் – தொடர்ந்து உண்மையை ஒளிரச் செய்பவன்; ஸ்வே தமே – சொந்த இடத்திலேயே; வர்தமானம் – வளர்பவன்.

8. அக்கினியே, நீ ஒளி படைத்தவன், யாகங்களின் காவலன், தொடர்ந்து உண்மையை ஒளிரச் செய்பவன், சொந்த இடத்திலேயே வளர்பவன்.

ஸ ந: பிதேவ ஸூனவேऽக்னே ஸூபாயனோ பவ ।

ஸசஸ்வா ந: ஸ்வஸ்தயே ॥ 9 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

அக்னே – அக்கினியே; ஸூனவே – மகனுக்கு; ஸ: பிதா – தந்தை; இவ – போல்; ந: – எங்களுக்கு; ஸு உபாயன: – எளிதில் அணுகத் தக்கவனாக; பவ – இருப்பாய்; ந: – எங்கள்; ஸ்வஸ்தயே – நன்மைக்காக; ஸசஸ்வா – இருப்பாய்.

9. அக்கினியே, மகனுக்குத் தந்தைபோல் எங்களுக்கு எளிதில் அணுகத் தக்கவனாக நீ இருப்பாய். எங்கள் நன்மைக் காக எப்போதும் எங்களுடன் இருப்பாய்.



## १७. आ नो भद्राः सूक्तम्

ऋग्वेद, 1.89

ॐ ॥ आ नो भद्राः क्रतवो यन्तु विश्वतोऽदब्धासो अपरीतास उद्भिदः । देवा नो यथा सदमिद् वृधे असन्नप्रायुवो रक्षितारो दिवेदिवे ॥ १ ॥

देवानां भद्रा सुमतिर्ऋजूयतां देवानां रातिरभि नो निवर्तताम् । देवानां सख्यमुप सेदिमा वयं देवा न आयुः प्रतिरन्तु जीवसे ॥ २ ॥

तान् पूर्वया निविदा हूमहे वयं भगं मित्रमदितिं दक्षमस्रिधम् । अर्यमणं वरुणं सोममश्विना सरस्वती नः सुभगा मयस्करत् ॥ ३ ॥

तन्नो वातो मयोभुवातु भेषजं तन्माता पृथिवी तत् पिता द्यौः । तद् ग्रावाणः सोमसुतो मयोभुवस्तदश्विना शृणुतं धिष्ण्या युवम् ॥ ४ ॥

तमीशानं जगतस्तस्थुषस्पतिं धियंजिन्वमवसे हूमहे वयम् । पूषा नो यथा वेदसामसद् वृधे रक्षिता पायुरदब्धः स्वस्तये ॥ ५ ॥

स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः स्वस्ति नो बृहस्पतिर्दधातु ॥ ६ ॥

पृषदश्वा मरुतः पृश्निमातरः शुभं यावानो विदथेषु जग्मयः । अग्निजिह्वा मनवः सूरचक्षसो विश्वे नो देवा अवसा गमन्निह ॥ ७ ॥

भद्रं कर्णेभिः शृणुयाम देवाः भद्रं पश्येमाक्षभिर्यजत्राः । स्थिरैरङ्गैस्तुष्टुवांग्ँसस्तनूभिर्व्यशेम देवहितं यदायुः ॥ ८ ॥

शतमिन्नु शरदो अन्ति देवा यत्रा नश्चक्रा जरसं तनूनाम् । पुत्रासो यत्र पितरो भवन्ति मा नो मध्यारीरिषतायुर्गन्तोः ॥ ९ ॥

अदितिर्द्यौरदितिरन्तरिक्षमदितिर्माता स पिता स पुत्रः । विश्वे देवा अदितिः पञ्च जना अदितिर्जातमदितिर्जनित्वम् ॥ १० ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 17. ஆ நோ பத்ரா ஸூக்தம்

*ரிக் வேதம், 1.89*

வேதங்களின் ஒரு முக்கியமான பண்பு அவற்றின் ஏற்றுக்கொள்ளும் தன்மையாகும். நல்லவை எங்கிருந்து வந்தாலும் அவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வேதங்கள் வலியுறுத்துகின்றன. இந்த ஸூக்தம் அதற்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைகிறது.

ஓம் ॥ ஆ நோ பத்ராः க்ரதவோ யந்து விச்வதோऽதப்தாஸோ அபரீதாஸ உத்பிதः । தேவா நோ யதா ஸதமித் வ்ருதே அஸன்ன ப்ராயுவோ ரக்ஷிதாரோ திவே திவே ॥ 1 ॥

அதப்தாஸ: – *தீமை கலவாத;* அபரீதாஸ: – *தடையற்ற;* உத்பித: – *தடைகளை உடைக்கவல்ல;* பத்ரா: – *மங்கலமான;* க்ரதவ: – *எண்ணங்கள்;* விச்வத: – *எல்லா திசைகளிலிருந்தும்;* ஆ ந: – *நம்மை வந்து;* யந்து – *சேரட்டும்;* யதா ஸதமித் வ்ருதே – *கைவிடாதவர்களான;* தேவா: – *தேவர்கள்;* திவே திவே – *எப்போதும்;* ந: – *நமக்கு;* அஸன்ன ப்ராயுவ: – *இன்பத்தை வளர்ப்பவர்களாக;* ரக்ஷிதார: – *காப்பாற்றுபவர்களாக இருக்கட்டும்.*

1. தீமை கலவாத, தடையற்ற, தடைகளை உடைக்க வல்ல, மங்கலமான எண்ணங்கள் எல்லா திசைகளிலிருந்தும் நம்மை வந்து சேரட்டும். பக்தர்களைக் கைவிடாதவர்களான தேவர்கள் எப்போதும் நமக்கு இன்பத்தை வளர்ப்பவர்களாக, நம்மைக் காப்பாற்றுபவர்களாக இருக்கட்டும்!

தேவானாம் பத்ரா ஸுமதிர் ரிஜூயதாம் தேவானாம் ராதிரபி நோ நிவர்த்ததாம் | தேவானாம் ஸக்யமுப ஸேதிமா வயம் தேவா ந ஆயு: ப்ரதிரந்து ஜீவஸே || 2 ||

பத்ரா: – *மங்கலமயமான;* தேவானாம் – *தேவர்களின்;* ஸுமதி: – *நல்லாசிகள்;* ரிஜூயதாம் – *நிலவட்டும்;* தேவானாம் – *தேவர்களின்;* அபி ராதி: – *வரங்களும்;* ந: – *நமக்கு;* நிவர்த்ததாம் – *பெருகட்டும்;* தேவானாம் – *தேவர்களின்;* ஸக்யம் – *நட்பு;* உப ஸேத் –

*கிடைக்கட்டும்; இமா – இங்கே; வயம் – நாம்; ஜீவஸே – வாழ்வதற்கான; ஆயு: – ஆயுளை; தேவா: – தேவர்கள்; ந – நமக்கு; ப்ரதிரந்து – தரட்டும்.*

2. மங்கலமயமான தேவர்களின் நல்லாசிகள் நம்மீது நிலவட்டும். அவர்களின் வரங்கள் நமக்குப் பெருகட்டும். அவர்களின் நட்பு நமக்குக் கிடைக்கட்டும். இங்கே நாம் நீண்டகாலம் வாழ்வதற்கான ஆயுளை அவர்கள் நமக்குத் தரட்டும்!

தான் பூர்வ்யா நிவிதா ஹூமஹே வயம் பகம் மித்ரமதிதிம் தக்ஷமஸ்ரிதம் । அர்யமணம் வருணம் ஸோமமச்வினா ஸரஸ்வதீ ந: ஸுபகா மயஸ்கரத் ॥ 3 ॥

*பகம் – ஆதித்தனை; மித்ரம் – சூரியனை; அதிதிம் – பூமிதேவியை; அஸ்ரிதம் தக்ஷம் – தலைவனான தட்சப் பிரஜாபதியை; அர்யமணம் – அர்யமணனை; வருணம் – வருணனை; ஸோமம் – சந்திரனை; அச்வினா – அசுவினி தேவர்களை; ஸரஸ்வதீ – கலைமகளை; தான் – இவர்களையெல்லாம்; பூர்வயா நிவிதா – முறையான ஆஹுதிகளுடன்; ஹூமஹே – வழிபடுவோம்; ந: – நமக்கு; ஸுபகா: – மங்கலத்தைத் தரட்டும்; மயஸ்கரத் – இன்பனதைத் தரட்டும்.*

3. ஆதித்தனை, சூரியனை, பூமிதேவியை, தலைவரான தட்சப் பிரஜாபதியை, பித்ருக்களின் தலைவரான அர்யமணனை வருணனை, சந்திரனை, அசுவினி தேவர்களை, கலைமகளை முறையான ஆஹுதிகளுடன் வழிபடுவோம். அவர்கள் நமக்கு மங்கலத்தைத் தரட்டும், இன்பத்தைத் தரட்டும்!

தன்னோ வாதோ மயோபு வாது பேஷஜம் தன்மாதா ப்ருதிவீ தத்பிதா த்யௌ: | தத் க்ராவாண: ஸோமஸுதோ மயோ புவஸ்தத்ச்வினா ச்ருணுதம் திஷ்ண்யா யுவம் || 4 ||

தத் – அந்த; வாத: – காற்றும்; தத் – அந்த; மாதா ப்ருதிவீ – அன்னை பூமியும்; தத் – அந்த; பிதா த்யௌ: – தந்தை வானமும்; ந: – நமக்கு; மயோபு வாது பேஷஜம் – ஆனந்தம் தருவதான மருந்தை அனுப்பட்டும்; தத் – அந்த; மயோ புவ: – ஆனந்தம் தருவதான; க்ராவாண: – கற்களை; ஸோமஸுத: – புதன் நமக்கு அனுப்பட்டும்; யுவம் அச்வினா – இரட்டையரான அசுவினி சகோதரர்கள்; திஷ்ண்யா – புத்தியில்; ச்ருணுதம் – நிறைக்கட்டும்.

4. காற்றும், அன்னை பூமியும், தந்தை வானமும் நமக்கு ஆனந்தம் தருவதான மருந்தை அனுப்பட்டும். ஆனந்தம் தருவதான மருந்தைத் தயாரிப்பதற்கான கற்களை சோமனின் மகனான புதன் நமக்கு அனுப்பட்டும். இரட்டையரான அசுவினி சகோதரர்கள் நமது புத்தியில் ஒளியை நிறைக்கட்டும்!

தமீசானம் ஜகதஸ்தஸ்துஷஸ்பதிம் தியம் ஜின்வமவஸே ஹூமஹே வயம் । பூஷா நோ யதா வேதஸாமஸத் வ்ருதே ரக்ஷிதா பாயுரதப்த: ஸ்வஸ்தயே ॥ 5 ॥

ஜகத: தஸ்துஷ: பதிம் – உயிருள்ளவை, உயிரற்றவை அனைத்திற்கும் தலைவரும்; தியம் – புத்தியை; ஜின்வமஸே – விழிப்படையச் செய்பவருமான; தம் – அந்த; ஈசானம் – மேலான இறைவனை; வயம் – நாங்கள்; ஹூமஹே – தியானிக்கிறோம்; பூஷா – ஒளிக்கடவுள்; ந: – எங்கள்; வேதஸாம் – செல்வத்தை; அஸத்வ்ருதே – அதிகப்படுத்துவாராக; யதா – அப்படியே; பாயுரதப்த: – சுடாமல் காக்கட்டும் – ஸ்வஸ்தயே – தவறாமல்; ரக்ஷிதா: – காப்பாராக.

5. உயிருள்ளவை உயிரற்றவை அனைத்திற்கும் தலைவரும், நமது புத்தியை விழிப்படையச் செய்பவருமான அந்த மேலான இறைவனை நாங்கள் தியானிக்கிறோம். அந்த ஒளிக் கடவுள் எங்கள் செல்வத்தை அதிகப்படுத்துவாராக; தவறாமல் எங்களைக் காப்பாராக!

ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தச்ரவா: । ஸ்வஸ்தி ந: பூஷா விச்வ வேதா: । ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ

அரிஷ்ட்டநேமி: | ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர்

ததாது || 6 ||

6. பெரும் புகழ் படைத்த இந்திரன் நமக்கு மங்கலம் நல்கட்டும். எல்லாம் அறிந்தவரான சூரிய பகவான் நமக்கு மங்கலம் தரட்டும். தீமையை அழிப்பவனாகிய கருடன் நமக்கு மங்கலம் செய்யட்டும். தேவகுருவான பிருகஸ்பதி நமக்கு நன்மையைத் தரட்டும்!

ப்ருஷதச்வா மருத: ப்ருச்னி மாதர: சுபம் யாவானோ

விததேஷு ஜக்மய: | அக்னிஜிஹ்வா மனவ:

ஸூர சக்ஷஸோ விச்வே நோ தேவா அவஸா

கமன்னிஹ || 7 ||

ப்ருஷத் அச்வா – புள்ளிக்குதிரையில் சவாரி செய்பவனும்; ப்ருச்னி மாதர: – பூமித் தாயின் பிள்ளையும்; விததேஷு – அறிஞர்களுக்கு; யாவான: – நிறைந்த; சுபம் – நன்மையைத் தருபவனும்; அக்னிஜிஹ்வா மனவ: – தீச்சுடர்போல் கூர்மையானவனும்; ஸூர சக்ஷஸ: – சூரியனைப்போல் ஒளிர்பவனும்; விச்வே தேவா: – விச்வே தேவர்களுள் ஒருவனு

மான; மருத: ஜக்மய: – வாயுதேவன்; ந: – நம்மை; அவஸா – காப்பதற்காக; இஹ – இங்கே; கமன்– வரட்டும்.

7. புள்ளிக்குதிரையில் சவாரி செய்பவனும், பூமித் தாயின் பிள்ளையும், அறிஞர்களுக்கு நிறைந்த நன்மையைத் தருபவனும், தீச்சுடர்போல் கூர்மையானவனும் சூரியனைப் போல் ஒளிர்பவனும், விச்வே தேவர்களுள் ஒருவனுமான வாயுதேவன் நம்மைக் காப்பதற்காக இங்கே வரட்டும்!

பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: பத்ரம் பச்யேமாக்ஷபிர் யஜத்ரா: । ஸ்திரைரங்கைஸ் துஷ்ட்டுவாக்ம் ஸஸ்தனூபிர் வ்யசேம தேவஹிதம் யதாயு: ॥ 8 ॥

8. தேவர்களே! காதுகளால் நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும். பூஜிக்கத் தகுந்தவர்களே, கண்களால் நல்ல விஷயங்களை காண வேண்டும். உறுதியான அங்கங்களுடன் கூடிய உடலுடன் ஆயுள் முழுவதும் உங்களைத் துதிக்க வேண்டும். உங்களுக்கு நன்மை செய்யும் வண்ணம் நாங்கள் வாழ வேண்டும்!

சதமின்னு சரதோ அந்தி தேவா யத்ரா நச்சக்ரா ஜரஸம் தனூனாம் । புத்ராஸோ யத்ர பிதரோ பவந்தி மா நோ மத்யாரீரிஷதாயுர் கந்தோ: ॥ 9 ॥

தேவா – தேவர்களே; சதமின்னு – நூறு; சரத: – சரத் காலங்கள்; அந்தி - உள்ளன; யத்ரா – அந்த; சக்ரா – காலத்தில்; ந: – எங்கள்; தனூனாம் – உடல்கள்; ஜரஸம் – மூப்படைந்துவிடும்; யத்ர – அப்போது; புத்ரா: – பிள்ளைகள்; பிதர: – தந்தையர்; பவந்தி – ஆகிவிடுவார்கள்; ந: – எங்கள்; ஆயு: – ஆயுள்; கந்தோ: மத்யா – முழுமையாக முடிவதற்கு இடையில்; மா ரீரிஷத – தடுத்து விடாதீர்கள்.

9. தேவர்களே, நூறு சரத்காலங்கள் எங்கள் முன்னால் உள்ளன. அந்தக் காலத்தில் எங்கள் உடல் மூப்படைந்துவிடும். அப்போது எங்கள் பிள்ளைகள் தந்தையர் ஆகிவிடுவார்கள். எங்கள் ஆயுள் முழுமையாக முடிவதற்கு முன் தடுத்து விடாதீர்கள்.

அதிதிர் த்யௌரதிதிரந்தரிக்ஷமதிதிர் மாதா ஸ பிதா ஸ புத்ர: । விச்வே தேவா அதிதி: பஞ்ச ஜனா அதிதிர் ஜாதமதிதிர் ஜனித்வம் ॥ 10 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

அதிதி: – அதிதியே; த்யௌ: – வானம்; அதிதி: – அதிதியே; அந்தரிக்ஷம் – விண்வெளி; அதிதி: மாதா – அதிதியே அன்னை; ஸ: பிதா – அவளே தந்தை; ஸ: புத்ர: – அவளே மகன்; அதிதி: – அதிதியே; விச்வே – எல்லா; தேவா: –தேவர்களும்; பஞ்ச ஜனா: – ஐவகை

*மனிதர்களும்; அதிதி: – அதிதியே; ஜாதம் – பிறந்தவை; ஜனித்வம் – பிறக்கப் போகின்றவை; அதிதி: – அதிதியே.*

10. அதிதியே வானம், அதிதியே விண்வெளி, அதிதியே அன்னை. அவளே தந்தை, அவளே மகன். அதிதியே எல்லா தேவர்களும், ஐவகை மனிதர்களும்[1]. பிறந்தவை, பிறக்கப் போகின்றவை எல்லாமும் அவளே.

இந்தப் பாடல் தேவியைப் போற்றுவதாக அமைந்துள்ளது. அதிதி என்ற சொல் எல்லையற்றது. குறைவற்றது என்று பொருள் படுகிறது.



1. பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வர்ணத்தினரும், வர்ணத்தைக் கடந்தவர்களும் ஆக ஐவகையினர்.

# १८. अघमर्षण सूक्तम्

ऋग्वेद

ॐ ॥ हिरण्यश्रृङ्गं वरुणं प्रपद्ये तीर्थं मे देहि याचितः । यन्मया भुक्तमसाधूनां पापेभ्यश्च प्रतिग्रहः । यन्मे मनसा वाचा कर्मणा वा दुष्कृतं कृतम् । तन्न इन्द्रो वरुणो बृहस्पतिस्सविता च पुनन्तु पुनः पुनः ॥ १-२ ॥

नमोऽग्नयेऽप्सुमते नम इन्द्राय नमो वरुणाय नमो वारुण्यै नमोऽद्भ्यः ॥ ३ ॥

यदपां क्रूरं यदमेध्यं यदशान्तं तदपगच्छतात् ॥ अत्याशना-दतीपाना-द्यच्च उग्रात् प्रतिग्रहात् । तन्नो वरुणो राजा पाणिनाह्यवमर्शतु । सोऽहमपापो विरजो निर्मुक्तो मुक्तकिल्बिषः । नाकस्य पृष्ठ-मारुह्य गच्छेद्ब्रह्मसलोक-ताम् । यश्चाप्सु वरुणस्स पुनात्वघमर्षणः ॥ ४-७ ॥

इमं मे गङ्गे यमुने सरस्वति शुतुद्रि स्तोमग्ं सचता परुष्णिया । असिक्निया मरुद्वृधे वितस्तयाऽऽर्जीकीये शृणुह्या सुषोमया ॥ ८ ॥

ऋतं च सत्यं चाभीद्धात्तपसोऽध्यजायत । ततो रात्रिरजायत ततस्समुद्रो अर्णवः ॥ समुद्रादर्णवादधि संवथ्सरो अजायत । अहोरात्राणि विदधद्विश्वस्य मिषतो वशी । सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् । दिवं च पृथिवीं चान्तरिक्षमथो सुवः ॥ ९-१० ॥

यत्पृथिव्याग्ं रजस्स्वमान्तरिक्षे विरोदसी । इमाग्ं स्तदापो वरुणः पुनात्वघमर्षणः । पुनन्तु वसवः पुनातु वरुणः पुनात्वघमर्षणः ॥ ११ ॥

एष भूतस्य मध्ये भुवनस्य गोप्ता । एष पुण्यकृतां लोकानेष मृत्योर् हिरण्मयम् । द्यावापृथिव्योर् हिरण्मयग्ं सग्ं श्रितग्ं सुवः । सनस्सुवस्सग्ंशिशाधि ॥ १३ ॥

आर्द्रं ज्वलति ज्योतिरहमस्मि । ज्योतिर्ज्वलति ब्रह्माहमस्मि । योऽहमस्मि ब्रह्माहमस्मि । अहमस्मि ब्रह्माहमस्मि । अहमेवाहं मां जुहोमि स्वाहा ॥ १४ ॥

अकार्यकार्यवकीर्णी स्तेनो भ्रूणहा गुरुतल्पगः । वरुणोऽपामघमर्षणस्तस्मात् पापात्प्रमुच्यते । रजोभूमिस्त्वमाग्ंरोदयस्व प्रवदन्ति धीराः ॥ १५-१६ ॥

आक्रान्त्समुद्रः प्रथमे विधर्मञ्जनयन्प्रजा भुवनस्य राजा । वृषा पवित्रे अधिसानो अव्ये बृहत्सोमो वावृधे सुवान इन्दुः ॥ १६ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 18. அகமர்ஷண ஸூக்தம்

*ரிக்வேதம்*

நல்லொழுக்கம் மற்றும் நல்வழி வாழ்க்கைக்கு வேத காலத்தில் மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப் பட்டது. பாவம், கொடுமை போன்ற எதுவும் சகிக்கப்

படவில்லை. அதைச் செய்வோரிடமிருந்து சமுதாயமே முகத்தைத் திருப்பிக்கொண்டது. அத்தகையோர் தரும் பரிசை நல்லோர் ஏற்கவில்லை. சாந்தோக்கிய உபநிஷதத்தில் (5.11.6) ஒரு மன்னன் தன்னிடம் வந்த ஐந்து வேத விற்பன்னர்களிடம், 'சான்றோர்களே, என் நாட்டில் திருடன் இல்லை, கஞ்சன் இல்லை, குடிகாரன் இல்லை, வீட்டில் அக்கினி வழிபாடு செய்யாதவன் இல்லை, படிப்பறிவு அற்றவன் இல்லை, கலப்படம் செய்பவன் இல்லை' என்று அறிமுகப்படுத்திக்கொண்டு, எனவே தான் அளிக்கும் பரிசை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறான். தீயோரிடமிருந்து ஒன்றை ஏற்க நேர்ந்தால், அது ஒரு பாவமாகக் கருதப்பட்டு, அதற்குப் பரிகாரம் தேடப்பட்டது.

அத்தகைய ஒரு பரிகார முயற்சியே அகமர்ஷண ஸூக்தம். பாவத்தைப் போக்குமாறு தீர்த்தங்களின் தலைவனான வருணதேவனிடம் பிரார்த்திக்கிறது இந்த ஸூக்தம்.

ஓம் || ஹிரண்ய ச்ருங்கம் வருணம் ப்ரபத்யே
தீர்த்தம் மே தேஹி யாசித:| யன்மயா புக்தமஸாதூனாம்
பாபேப்யச்ச ப்ரதிக்ரஹ: || 1 ||

ஹிரண்ய ச்ருங்கம் – *பொன் கிரீடம் தரித்த;* வருணம் – *வருண தேவனை;* ப்ரபத்யே – *சரணடைகிறேன்;* யாசித: – *பிரார்த்திக்கின்ற;* மே – *எனக்கு;*

தீர்த்தம் – *தீர்த்தங்களின் பலனை;* தேஹி – *அருள்வாய்;* யத் – *ஏனெனில்;* அஸாதூனாம் – *தீயவர்களின்;* மயா – *என்னால்;* புக்தம் – *அனுபவிக்கப்பட்டுள்ளது;* பாபேப்யே: – *தீயவர்களிடமிருந்து;* ச ப்ரதிக்ரஹ: – *பரிசையும்.*

1. பொன் கிரீடம் தரித்த வருண தேவனைச் சரணடைகிறேன். பிரார்த்திக்கின்ற எனக்கு தீர்த்தங்களின் பலனை நீ அருள்வாய். ஏனெனில் தீயவர்களின் பொருளை நான் அனுபவித்துள்ளேன். தீயவர்களிடமிருந்து பரிசையும் பெற்றுள்ளேன்.

யன்மே மன்ஸா வாசா கர்மணா வா துஷ்க்ருதம் க்ருதம் | தன்ன இந்த்ரோ வருணோ ப்ருஹஸ்பதிஸ் ஸவிதா ச புனந்து புன: புன: || 2 ||

மனஸா – *மனத்தாலும்;* வாசா – *பேச்சாலும்;* கர்மணா – *செயலாலும்;* மே – *என்னாலோ;* வா – *அல்லது;* ந: – *என்னைச் சேர்ந்தவர்களாலோ;* யத் – *எந்த;* துஷ்க்ருதம் – *பாவச் செயல்கள்;* க்ருதம் – *செய்யப்பட்டதோ;* தத் – *அந்தப் பாவத்தை;* இந்த்ர: – *இந்திரன்;* வருண: – *வருணன்;* ப்ருஹஸ்பதி: – *பிருகஸ்பதி;* ச – *மற்றும்;* ஸவிதா – *சூரியன்;* புன: புன: – *முற்றிலுமாக;* புனந்து – *தூய்மையாக்குவார்களாக.*

2. மனத்தாலும், பேச்சாலும், செயலாலும், என்னாலோ என்னைச் சேர்ந்தவர்களாலோ எந்தப் பாவச் செயல்கள் செய்யப்பட்டதோ, அந்தப் பாவத்தை இந்திரனும் வருணனும் பிருகஸ்பதியும் சூரியனும் முற்றிலுமாக தூய்மையாக்குவார்களாக.

நமோऽக்னயேऽப்ஸுமதே நம இந்த்ராய நமோ வருணாய நமோ வாருண்யை நமோऽத்ப்ய: || 3 ||

அப்ஸுமதே அக்னயே – நீரில் மறைந்திருக்கும் நெருப்பிற்கு; இந்த்ராய – இந்திரனுக்கு; வருணாய – வருணனுக்கு; வாருண்யை – வாருணிக்கு; அத்ப்ய: – தண்ணீரின் தேவதைகளுக்கு; நம: – நமஸ்காரம்.

3. நீரில் மறைந்திருக்கும் நெருப்பிற்கும் இந்திரனுக்கும் வருணனுக்கும் வருணனின் மனைவியாகிய வாருணிக்கும் தண்ணீரின் தேவதைகளுக்கும் நமஸ்காரம்.

யதபாம் க்ரூரம் யதமேத்யம் யதசாந்தம் ததப–கச்சதாத் || 4 ||

அபாம் – தண்ணீரில்; யத் க்ரூரம் – எது துன்பம் தருவதாக; யத் அமேத்யம் – தூய்மையற்றதாக; யத் அசாந்தம் – அமைதியைக் குலைப்பதாக; தத் – அவை; அபகச்சதாத் – விலகட்டும்.

4. துன்பம் தருவதாக, தூய்மையற்றதாக, அமைதியைக் குலைப்பதாக தண்ணீரில் உள்ள அனைத்தும் விலகட்டும்!

அத்யாசனாத்தீபானாத்யச்ச உக்ராத் ப்ரதிக்ரஹாத் ।
தன்னோ வருணோ ராஜா பாணினாஹ்யவமர்சது ॥ 5 ॥

அத்யாசனாத் – அளவுக்கு அதிகமாக உண்ணுதல்; அதீபானாத் – அளவுக்கு அதிகமாக பருகுதல்; உக்ராத் ப்ரதிக்ரஹாத் – தீயவர்களிடமிருந்து பரிசுகளை ஏற்றுக்கொள்ளல்; யத் ச – எந்தப் பாவங்கள்; மே – எனதாக உள்ளனவோ; தத் – அவற்றை; ராஜா வருண: – அரசனாகிய வருணன்; பாணினா ஹி – சொந்தக் கைகளாலேயே; அவமர்சது – துடைத்து விடுவாராக.

5. அளவுக்கு அதிகமாக உண்ணுதல், அளவுக்கு அதிகமாகப் பருகுதல், தீயவர்களிடமிருந்து பரிசுகளை ஏற்றுக்கொள்ளல் இவை மூலமாக எந்தப் பாவங்கள் எனதாக உள்ளனவோ, அவற்றை அரசனாகிய வருணன் சொந்தக் கைகளாலேயே துடைத்து விடுவாராக!

ஸோ஽ஹம்பாபோ விரஜோ நிர்முக்தோ முக்த கில்பிஷ: । நாகஸ்ய ப்ருஷ்ட்டமாருஹ்ய கச்சேத் ப்ரஹ்ம ஸலோகதாம் ॥ 6 ॥

ஸ: – அத்தகைய; அபாப: – பாவமற்ற; விரஜ: – களங்கமற்ற; நிர்முக்த: – தளைகள் அற்ற;

முக்த கில்பிஷ: – *தீமைகள் அற்ற;* அஹம் – *நான்;* நாகஸ்ய – *சொர்க்கத்தின்;* ப்ருஷ்ட்டம் – *உச்சியில்;* ஆருஹ்ய – *சென்று;* ப்ரஹ்ம ஸலோகதாம் – *பிரம்மனுக்குச் சமமான பதவியை;* கச்சேத் – *அடைவேனாக.*

6. பாவமற்ற, களங்கமற்ற, தளைகள் அற்ற, தீமைகள் அற்ற நான் சொர்க்கத்தின் உச்சியில் சென்று பிரம்மனுக்குச் சமமான பதவியை அடைவேனாக!

யச்சாப்ஸு வருணஸ்ஸ புனாத்வகமர்ஷண: || 7 ||

ய: – *யார்;* அகமர்ஷண: – *பாவம் போக்குகின்ற;* வருண: – *வருணனோ;* அப்ஸு ச – *நீரில் உறைகின்ற;* ஸ: – *அவர்;* புனாது – *தூய்மையாக்கட்டும்.*

7. யார் பாவம் போக்குகின்ற வருணனோ, நீரில் உறைகின்ற அவர் நம்மைத் தூய்மையாக்கட்டும்.

இமம் மே கங்கே யமுனே ஸரஸ்வதி சுதுத்ரி ஸ்தோமக்ம் ஸசதா பருஷ்ணியா | அஸிக்னியா மருத்வ்ருதே விதஸ்தயாऽऽர்ஜீகீயே ச்ருணுஹ்யா ஸுஷோமயா || 8 ||

கங்கே – *கங்கையே;* யமுனே – *யமுனையே;* ஸரஸ்வதி – *சரஸ்வதியே;* சுதுத்ரி – *சுதுத்ரியே;* மருத்வ்ருதே – *மருத்வ்ருதையே;* ஆர்ஜீகீயே –

ஆர்ஜீகீயையே; பருஷ்ணியா – பருஷ்ணியுடனும்; அஸிக்னியா – அஸிக்னியுடனும்; விதஸ்தயா – விதஸ்தையுடனும்; ஸுஷோமயா – சுஷோமையுடனும்; ஆஸசத – சேர்ந்து வாருங்கள்; மே – எனது; இமம் – இந்த; ஸ்தோமம் – துதியை; ஆ ச்ருணு ஹி – கேளுங்கள்.

8. கங்கை, யமுனை, சரஸ்வதி, சுதுத்ரி, மருத்வ்ருதை, ஆர்ஜீகீ தேவதைகளே, நீங்கள் பருஷ்ணியுடனும் அஸிக்னியுடனும் விதஸ்தையுடனும் சுஷோமையுடனும் சேர்ந்து வாருங்கள். எனது இந்தத் துதியைக் கேளுங்கள்.

ரிதம் ச ஸத்யம் சாபீத்தாத் தபஸோऽத்யஜாயத ।

ததோ ராத்ரிரஜாயத தத்ஸ் ஸமுத்ரோ அர்ணவ: ॥ 9 ॥

அபீத்தாத் – ஒளிமயமான பரம்பொருளிலிருந்து; தபஸ: – தவத்தின் காரணமாக; ரிதம் – ரிதமும்; ஸத்யம் ச – சத்தியமும்; அதி அஜாயத – பிறகு தோன்றின; ச – மேலும்; தத: – அவரிடமிருந்து; ராத்ரி: – இரவு; அஜாயத – தோன்றியது; தத: – அவரிடமிருந்து; அர்ணவ: – பரந்த; ஸமுத்ர: – கடல்.

9. ஒளிமயமான பரம்பொருளிலிருந்து தவத்தின் காரணமாக ரிதமும் சத்தியமும் தோன்றின. அவரிடமிருந்து இரவு தோன்றியது. அவரிடமிருந்தே பரந்த கடல் தோன்றியது.

ஸமுத்ராதர்ணவாததி ஸம்வத்ஸரோ அஜாயத |
அஹோராத்ராணி விததத் விச்வஸ்யமிஷதோ
வசீ | ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதா
பூர்வமகல்பயத் | திவம் ச ப்ருதிவீம் சாந்தரிக்ஷமதோ
ஸுவ: || 10 ||

*அதி – பிறகு; அர்ணவாத் ஸமுத்ராத் – பரந்த கடலிலிருந்து; ஸம்வத்ஸர: – வருடம்; அஜாயத – தோன்றியது; அத – பிறகு; அஹ:ராத்ராணி – பகல் களையும் இரவுகளையும்; விச்வஸ்ய – உலகின்; மிஷத: – உயிர்களையும்; விததத் – படைத்து; வசீ: – பரிபாலிப்பவரும்; தாதா – தலைவருமான இறைவன்; யதா பூர்வம் – முன்பிருந்ததைப் போல்; ஸூர்யா சந்த்ரமஸௌ – சூரிய சந்திரர்களையும்; திவம் – வானையும்; ப்ருதிவீம் – பூமியையும்; அந்தரிக்ஷம் ச – வெளியையும்; ஸுவ: ச –சொர்க்கத்தையும்; அகல்பயத் –படைத்தார்.*

10. பரந்த கடலிலிருந்து வருடம் தோன்றியது. பகல்களை யும் இரவுகளையும் உலகின் உயிர்களையும் படைத்து பரிபாலிப்பவரும் தலைவருமான இறைவன் முன்பிருந்ததைப் போல் சூரிய சந்திரர்களையும் வானையும் பூமியையும் வெளியையும் சொர்க்கத்தையும் படைத்தார்.

யத் ப்ருதிவ்யாக்ம் ரஜஸ்ஸ்வமாந்தரிக்ஷே விரோதஸீ । இமாக்ம்ஸ்ததாபோ வருண: புனாத்வகமர்ஷண: । புனந்து வஸவ: புனாது வருண: புனாத்வகமர்ஷண: ॥ 11 ॥

ஆப: – நீரின் தலைவரும்; அகமர்ஷண: – பாவங்களைப் போக்குபவருமான; வருண: – வருணன்; ப்ருதிவ்யாம் – பூமியிலும்; அந்தரிக்ஷே – வெளியிலும்; விரோதஸீ – சொர்க்கத்திலும்; யத் ரஜ: – வருகின்ற பாவங்களை; ஸ்வம் இமான் – எங்களிலிருந்து; புனாது – தூய்மைப்படுத்துவாராக; வஸவ: – வசுக்கள்; புனந்து – தூயவர்களாக்கட்டும்; வருண: – வருணன்; புனாது –தூயவர்களாக்கட்டும்; அகமர்ஷண: – அகமர்ஷண ரிஷி; புனாது –தூயவர்களாக்கட்டும்.

11. நீரின் தலைவரும் பாவங்களைப் போக்குபவருமான வருணன் பூமியிலும் வெளியிலும் சொர்க்கத்திலும் வசிக்கின்ற உயிர்களால் வருகின்ற பாவங்கள் எங்களை அணுகாமல் எங்களைத் தூய்மைப்படுத்துவாராக. வசுக்கள் நம்மைத் தூயவர்களாக்கட்டும். வருணன் நம்மைத் தூயவர்களாக்கட்டும். அகமர்ஷண ரிஷி நம்மைத் தூயவர்களாக்கட்டும்.

ஏஷ பூதஸ்ய மத்யே புவனஸ்ய கோப்தா ॥ 12 ॥

ஏஷ: – இந்த; பூதஸ்ய – இருந்த; மத்யே – இப்போது இருக்கின்ற; புவனஸ்ய – உலகத்தை; கோப்தா–காப்பவர்.

12. ஏற்கனவே இருந்ததும் இப்போது இருக்கின்றதுமான உலகத்தைக் காப்பவர் இந்த வருணன்தான்.

ஏஷ புண்யக்ருதாம் லோகானேஷ ம்ருத்யோர் ஹிரண்மயம் | த்யாவாப்ருதிவ்யோர் ஹிரண்மயக்ம் ஸக்ம் ச்ரிதக்ம் ஸுவ: | ஸனஸ்ஸுவஸ்ஸக்ம் சிசாதி || 13 ||

ஏஷ – இந்த வருணன்; புண்யக்ருதாம் – நன்மை செய்தவர்களுக்கு; லோகான் – உலகங்களையும்; ம்ருத்யோ: – தீமை செய்தவர்களுக்கு; ஹிரண்யம் – ஹிரண்யம் என்ற உலகையும்; த்யாவா ப்ருதிவ்யோ: – விண்ணையும் மண்ணையும்; ஸம்ச்ரிதம் – தாங்குபவரான; ஸ: – அவர்; ஹிரண்மயம் – பொன்னிறத்தினராகவும்; ஸுவ: – ஆனந்த வடிவினராகவும்; ந: – நமக்கு; ஸம்சிசாதி – ஆசிகளையும் மங்கலத்தையும் நல்குவாராக.

13. இந்த வருணன் நன்மை செய்தவர்களுக்கு அவர்களுக்கு உரிய உலகங்களையும் தீமை செய்தவர்களுக்கு ஹிரண்யம் என்ற மரண உலகையும் அளிக்கிறார். விண்ணையும் மண்ணையும்

தாங்குபவரான அவர் சூரியனாகவும் பொன்னிறத்தினராகவும் ஆகியுள்ளார். ஆனந்த வடிவினரான அவர் நமக்கு ஆசிகளையும் மங்கலத்தையும் நல்குவாராக.

ஆர்த்ரம் ஜ்வலதி ஜ்யோதிரஹமஸ்மி |
ஜ்யோதிர் ஜ்வலதி ப்ரஹ்மாஹமஸ்மி |
யோऽஹமஸ்மி ப்ரஹ்மாஹமஸ்மி | அஹமஸ்மி
ப்ரஹ்மாஹமஸ்மி | அஹமேவாஹம் மாம் ஜுஹோமி
ஸ்வாஹா || 14 ||

ஆர்த்ரம் – நீரில்; ஜ்வலதி – ஒளிர்கின்ற; ஜ்யோதி: – ஒளி; அஹம் அஸ்மி – நானே; ஜ்யோதி: – அந்த ஒளியாக; ஜ்வலதி – ஒளிர்கின்ற; ப்ரஹ்ம – பிரம்மம்; அஹம் அஸ்மி – நானே; ய: – யார்; அஹம் அஸ்மி – நானாக உள்ளாரோ; ப்ரஹ்ம – பிரம்மம்; அஹம் அஸ்மி – நானே; அஹம் அஸ்மி – நான் இருக்கிறேன்.; ப்ரஹ்ம – பிரம்மமே; அஹம் அஸ்மி – நான்; அஹம் – நான்; அஹம் ஏவ – நானே; மாம் – என்னை; ஜுஹோமி – ஆஹுதியாக அளிக்கிறேன்.

14. நீரின் அடிப்படை மூலகம் போல் ஒளிர்கின்ற ஒளி நானே. அந்த ஒளியாக ஒளிர்கின்ற பிரம்மம் நானே. யார் நானாக உள்ளாரோ அந்த பிரம்மம் நானே. நான் இருக்கிறேன். பிரம்மமே நான். நான் நானே. நான் என்னை ஆஹுதியாக அளிக்கிறேன்.

அகார்ய கார்யவகீர்ணீ ஸ்தேனோ ப்ரூணஹா குருதல்பக: । வருணோऽபாமகமர்ஷணஸ் தஸ்மாத் பாபாத் ப்ரமுச்யதே ॥ 13 ॥

அகார்யகாரீ – செய்யக் கூடாததைச் செய்பவன்; அவகீர்ணீ – கோழை; ஸ்தேன: – திருடன்; ப்ரூணஹா – கருவை அழிப்பவன்; குரு தல்பக: – குருவின் புகழைக் கெடுப்பவன்; தஸ்மாத் பாபாத் – அந்தப் பாவங்களிலிருந்து; ப்ரமுச்யதே –விடுபடுகிறான்; அபாம் – நீரின் தலைவனான; வருண: – வருணதேவன்; அகமர்ஷண: –பாவங்களை அழிப்பவர்.

15. செய்யக் கூடாததைச் செய்பவன், கோழை, திருடன், கருவை அழிப்பவன், குருவின் புகழைக் கெடுப்பவன்—இத்தகையவனும் பாவங்களிலிருந்து விடுபடுகிறான். ஏனெனில் நீரின் தலைவனான வருண தேவன் பாவங்களை அழிப்பவர்.

ரஜோ பூமி ஸ்த்வமாக்ம் ரோதயஸ்வ ப்ரவதந்தி தீரா: ॥ 16 ॥

ரஜோ பூமி: – பாவங்களின் இருப்பிடமாக; த்வம் – நீ; மாம் – என்னை; ரோதயஸ்ய – அழச் செய்கிறாய்; தீரா: –அறிஞர்கள்; ப்ரவதந்தி –கூறுகிறார்கள்.

16. பாவங்களின் இருப்பிடமாக உள்ளேன் நான். அதனால் நீஎன்னை அழச் செய்கிறாய் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

ஆக்ரான்ஸமுத்ர : ப்ரதமே விதர்மஞ்ஜனயன் ப்ரஜா புவனஸ்ய ராஜா | வ்ருஷா பவித்ரே அதிஸானோ அவ்யே ப்ருஹத்ஸோமோ வாவ்ருதே ஸுவான இந்து: || 17 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

ஸமுத்ர: – கடல்; ஆக்ரான் – எங்கும் பரந்துள்ளார்; ப்ரதமே – முதலில்; ப்ரஜா – உயிர்களை; விதர்மன் – வினைப்பயன்களுக்கு ஏற்ப; ஜனயன் – படைத்தார்.; புவனஸ்ய – பிரபஞ்சத்தின்; ராஜா – தலைவர்; வ்ருஷா – வேண்டியவற்றை அளிப்பவர்; பவித்ரே – புனிதமான இடத்தில்; அதி – மேலானவர்; ஸானோ – உயர்ந்த இடத்தில் வைக்கப்பட வேண்டியவர்; அவ்யே –காப்பவர்; ஸோம: – உமாதேவியுடன் கூடிய அவர்; ப்ருஹத் – எல்லையற்று; வாவ்ருதே – வளர்பவர்; ஸுவான: – வினைப்பயன்களை அளிப்பவர்; இந்து – நிலவு.

17. கடல்போல் விளங்குகின்ற இறைவன் எங்கும் பரந்துள்ளார். முதலில் அவர் உயிர்களை வினைப்பயன்களுக்கு ஏற்ப படைத்தார். அவர் பிரபஞ்சத்தின் தலைவர், வேண்டியவற்றை அளிப்பவர். புனிதமான இடமாகிய இதயத்தில் உறைகிறார் அவர். அவர் மேலானவர், உயர்ந்த இடத்தில் வைக்கப்பட வேண்டியவர், எல்லோரையும் காப்பவர். உமாதேவியுடன் கூடிய அவர் எல்லையற்று வளர்பவர், வினைப்பயன்களை அளிப்பவர், நிலவுபோல் ஆனந்த வடிவினர்.



# १९. भिक्षु सूक्तम्

ऋग्वेद, 10.117

ॐ॥ न वा उ देवाः क्षुधमिद्वधं ददुरुताशितमुप गच्छन्ति मृत्यवः।
उतो रयिः पृणतो नोप दस्यत्युतापृणन् मर्डितारं न विन्दते ॥१॥
य आध्राय चकमानाय पित्वोऽन्नवान्सन् रफितायोपजग्मुषे।
स्थिरं मनः कृणुते सेवते पुरोतो चित् स मर्डितारं न विन्दते ॥२॥
स इद्भोजो यो गृहवे ददात्यन्नकामाय चरते कृशाय।
अरमस्मै भवति यामहूता उतापरीषु कृणुते सखायम् ॥३॥
न स सखा यो न ददाति सख्ये सचाभुवे सचमानाय पित्वः।
अपास्मात् प्रेयान्न तदोको अस्ति पृणन्तमन्यमरणं चिदिच्छेत्॥४॥
पृणीयादिन्नाधमानाय तव्यान् द्राघीयांसमनु पश्येत पन्थाम्।
ओ हि वर्तन्ते रथ्येव चक्राण्यन्यमन्यमुप तिष्ठन्त रायः ॥५॥
मोघमन्नं विन्दते अप्रचेताः सत्यं ब्रवीमि वध इत् स तस्य।
नार्यमणं पुष्यति नो सखायं केवलाघो भवति केवलादी ॥६॥

कृषन्नित् फाल आशितं कृणोति यन्नध्वानमप वृंक्ते चरित्रैः।

वदन् ब्रह्मावदतो वनीयान् पृणन्नापिरपृणन्तमभि ष्यात् ॥७॥

एकपाद्भूयो द्विपदो वि चक्रमे द्विपात् त्रिपादमभ्येति पश्चात्।

चतुष्पादेति द्विपदामभिस्वरे संपश्यन् पंक्तीरुपतिष्ठमानः ॥८॥

समौ चिद्धस्तौ न समं विविष्टः संमातरा चिन्न समं दुहाते।

यमयोश्चिन्न समा वीर्याणि ज्ञाती चित् सन्तौ न समं पृणीतः ॥९॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 19. பிக்ஷு ஸூக்தம்

*ரிக் வேதம், 10.117*

தானம், பரந்த மனப்பான்மை போன்ற பண்புகளின் தேவையையும் பெருமையையும் காட்டுகின்ற ஸூக்தம் இது. அங்கிரஸின் மகனான பிக்ஷு என்பவரின் பெயரால் இது அழைக்கப்படுகிறது.

ஓம் ॥ ந வா உ தேவா: க்ஷுதமித்வதம்

த்துருதாசிதமுப் கச்சந்தி ம்ருத்யவ: ।

உதோ ரயி: ப்ருணதோ நோப தஸ்யத்யு-

தாப்ருணன் மர்டிதாரம் ந விந்ததே ॥ 1 ॥

க்ஷுதம் – பசியை; இத்வதம் – மரணத்திற்காக; தேவா: – தேவர்கள்; ந வா தது: – விதிக்கவில்லை; உ – ஏனெனில்; அசிதம் உத – நன்றாக உண்பவர்களையும்; ம்ருத்யவ: – மரணம்; உபகச்சந்தி – அணுகவே செய்கிறது; உத – மேலும்; ப்ருணத: – கொடுப்பவனுக்கு; ரயி: – செல்வம்; ந உபதஸ்யதி – குறைவதில்லை; உத – மேலும்; அப்ருணன் – கொடுக்காதவனுக்கு; மர்டிதாரம் – தேற்றுவார்; ந விந்ததி – கிடைக்கமாட்டார்கள்.

1. பசியை மரணத்திற்கான காரணமாக தேவர்கள் விதிக்கவில்லை. ஏனெனில் நன்றாக உண்பவர்களையும் மரணம் அணுகவே செய்கிறது. மேலும், கொடுப்பவனுக்குச் செல்வம் குறைவதில்லை. கொடுக்காதவன் தேற்றுவார்கூட இல்லாமல் துன்புறுவான்.

ய ஆத்ராய சகமானாய பித்வோऽன்னவான்
ஸன் ர:ிபிதாயோபஜக்முஷே ।
ஸ்திரம் மன: க்ருணுதே ஸேவதே புரோதோ
சித்ஸ மர்டிதாரம் ந விந்ததே ॥ 2 ॥

அன்னவான் ஸன் – ஏராளம் உணவு படைத்தவனாக இருந்தும்; ஆத்ராய சகமானாய – உணவு தேவைப்படுகின்ற பலவீனர்களுக்கும்; ர:ிபிதாய ஜக்முஷே – நாடி வருகின்ற தீனர்களுக்கும்; ய: பித்வ: –

எந்த மனிதன்; மன: – மனத்தை; ஸ்திரம் – இறுக்கமாக; க்ருணுதே – வைத்துக்கொண்டு; புர: உத: சித் – அவர்களுக்கு முன்னாலேயே; ஸேவதே – தான் அனுபவிக்கிறானோ; ஸ: – அவனை; மர்டிதாரம் – தேற்றுவார்; ந விந்ததே – கிடைக்கமாட்டார்கள்.

2. ஏராளம் உணவு படைத்தவனாக இருந்தும், உணவு தேவைப்படுகின்ற பலவீனர்களுக்கும் உதவி நாடி வருகின்ற தீனர்களுக்கும் தானம் செய்யாமல் எந்த மனிதன், மனத்தை இறுக்கமாக வைத்துக்கொண்டு, அவர்களுக்கு முன்னாலேயே தான் உண்டு அனுபவிக்கிறானோ அவன் தேற்றுவார் இல்லாமல் துன்புறுவான்.

ஸ இத்போஜோ யோ க்ருஹவே ததாத்–

யன்னகாமாய சரதே க்ருசாய ।

அரமஸ்மை ப்வதி யாமஹூதா

உதாபரீஷு க்ருணுதே ஸகாயம் ॥ 3 ॥

அன்ன காமாய – உணவைத் தேடி; க்ருசாய – பலவீனனாக; சரதே – அலைபவனுக்கு; ய: – யார்; க்ருஹவே ததாதி – உடனடியாக கொடுக்கிறானோ; ஸ: – அவன்; இத்போஜ: – வள்ளலே ஆவான்; அஸ்மை – அவனுக்கு; அரம் – ஏராளம்; பவதி – காத்திருக்கின்றன; யாம் – அவன்; அஹூதா உத அபரீஷு –

விரோதிகளிடமும்; ஸகாயம் – நட்பை; க்ருணுதே – ஏற்படுத்திக் கொள்கிறான்.

3. உணவைத் தேடி பலவீனனாக அலைபவனுக்கு யார் உடனடியாக உணவு கொடுக்கிறானோ அவன் வள்ளலே ஆவான். அவனுக்கு ஏராளமான வெகுமதிகள் காத்திருக்கின்றன. அவன் விரோதிகளிடமும் நட்பை ஏற்படுத்திக்கொள்கிறான்.

ந ஸ ஸகா யோ ந ததாதி ஸக்யே

ஸசாபுவே ஸசமானாய பித்வ: ।

அபாஸ்மாத் ப்ரேயான்ன ததோகோ அஸ்தி

ப்ருணந்தமன்யமரணம் சிதிச்சேத் ॥ 4 ॥

ஸக்யம் – நண்பனுக்கோ; ஸசாபுவே – கூட இருப்பவனுக்கோ; ஸசமானாய – உதவி செய்தவனுக்கோ; ய: ஸகா பித்வ: – எந்த நண்பன்; ந ததாதி – கொடுப்பதில்லையோ; ஸ: – அவன்; ந ஸகா – நண்பன் அல்ல; அஸ்மாத் – அங்கிருந்து; அப ப்ரேயான் – உடனடியாக விலகிவிட வேண்டும்; தத் – அந்த வீடு; ஓக: – வீடு; ந அஸ்தி – அல்ல; ப்ருணந்தம் அரணம் – வள்ளலான; அன்யம் – வேறு ஒருவரை; சிதிச்சேத் – நாடட்டும்.

4. ஒரு நண்பனுக்கோ, கூட இருப்பவனுக்கோ, உதவி செய்தவனுக்கோ வேண்டியதை எந்த நண்பன் கொடுப்பதில்லையோ அவன் நண்பன் அல்ல. அங்கிருந்து உடனடியாக

விலகிவிட வேண்டும். அந்த வீடு வீடு அல்ல. அவன் வள்ளலான வேறு ஒருவரை நாடட்டும்.

ப்ருணீயாதின்னாதமானாய தவ்யான்
த்ராகீயாம்ஸமனு பச்யேத பந்தாம் |
ஓ ஹி வர்த்தந்தே ரத்யேவ சக்ராண்–
யன்யமன்யமுப திஷ்டந்த ராய: || 5 ||

தவ்யான் – *பணம் படைத்தவன்;* ஆதமானாய – *ஏழைகளுக்கு;* இத் ப்ருணீயாத் – *கட்டாயம் கொடுக்க வேண்டும்;* த்ராகீயாம் – *தொலைநோக்குள்ள;* பந்தாம் – *வழிகளை;* ஸம் அனுபச்யேத – *சிந்தித்து நாட வேண்டும்;* ஹி – *ஏனெனில்;* ரத்யேவ – *ரதத்தின்;* சக்ராணி – *சக்கரங்கள்;* வர்த்தந்தே – *சுழல்வதுபோல்;* ராய: – *செல்வம்;* அன்யம் அன்யம் – *ஒருவரிலிருந்து மற்றொருவருக்கு என்று;* உப திஷ்டந்த – *மாறிமாறிச் செல்கிறது.*

5. பணம் படைத்தவன் ஏழைகளுக்குக் கட்டாயம் கொடுக்க வேண்டும். தொலைநோக்குள்ள வழிகளைச் சிந்தித்து பணத்தைப் பெருக்குவதற்கு முயல வேண்டும். ஏனெனில் ரதத்தின் சக்கரங்கள் சுழல்வதுபோல் செல்வம் ஒருவரிலிருந்து மற்றொருவருக்கு என்று மாறிமாறிச் செல்கிறது.

மோகமன்னம் விந்ததே அப்ரசேதா:

ஸத்யம் ப்ரவீமி வத இத்ஸ தஸ்ய |

நார்யமணம் புஷ்யதி நோ ஸகாயம்

கேவலாகோ பவதி கேவலாதீ || 6 ||

அப்ரசேதா: – மூடன்; அன்னம் – உணவை; மோகம் விந்ததே – ஆசையினால் சேர்த்து வைக்கிறான்; ஸத்யம் – சத்தியமாக; ப்ரவீமி – சொல்கிறேன்; தஸ்ய – அவனுக்கு; இத்ய – அது; வத – அழிவையே கொடுக்கும்; அர்யமணம் – இறைவனுக்கோ; ஸகாயம் – நண்பர்களுக்கோ; ந புஷ்யதி – கொடுக்காமல்; கேவல அதீ – தான் மட்டும் உண்பவன்; கேவல அக: – பாவியாகவே; பவதி – ஆகிறான்.

6. மூடன்தான் உணவைப் பிறருக்குக் கொடுக்காமல் ஆசையினால் சேர்த்து வைக்கிறான். நான் சத்தியமாகச் சொல்கிறேன்–அவனுக்கு அது அழிவையே கொடுக்கும். இறைவனுக்கோ, நண்பர்களுக்கோ கொடுக்காமல் தான் மட்டும் உண்பவன் பாவியாகவே ஆகிறான்.

க்ருஷன்னித் ஃபால ஆசிதம் க்ருணோதி

யன்னத்வானமப வ்ருங்க்தே சரித்ரை: |

வதன் ப்ரஹ்மாவததோ வனீயான்

ப்ருணன்னாபிரப்ருணந்தமபி ஷ்யாத் || 7 ||

க்ருஷின் இத் – விவசாயிக்கு; ஃபால: – கலப்பை; ஆசிதம் – உணவை; க்ருணோதி – தருகிறது; யன்னத் வானம் – பயணங்கள் செய்து; சரித்ரை: – உழைப் பால்; அப வ்ருங்க்தே – பொருளை ஈட்டுகிறான்; வதன் ப்ரஹ்ம – சாஸ்திரங்களை விளக்குபவன்; அவதத: – வெறுமனே இருப்பவனைவிட; வனீயான் – மேலானவன்; ப்ருணன் – கொடுக்க வல்லவன்; ந அபி அப்ருணன் தம் – கொடுக்க எதுவும் இல்லாத ஒருவ னுக்கு; அபி ஷ்யாத் – இருக்க வேண்டும்.

7. விவசாயிக்குக் கலப்பை உணவைத் தருகிறது. பயணங்கள் செய்து தன் உழைப்பால் பாடுபடுபவன் பொருளை ஈட்டுகிறான். சாஸ்திரங்களை விளக்குகின்ற சான்றோன் வெறுமனே இருப்பவனை விட மேலானவன். கொடுக்க வல்லவன் கொடுக்க எதுவும் இல்லாத ஒருவனுடைய நண்பனாக இருக்க வேண்டும்.

ஏக பாத்பூயோ த்விபதோ வி சக்ரமே

த்விபாத் த்ரிபாதமப்யேதி பச்சாத் |

சதுஷ்பாதேதி த்விபதாமபிஸ்வரே

ஸம்பச்யன் பங்க்தீருபதிஷ்ட்டமான: || 8 ||

த்விபத: – இரண்டு பங்கு உள்ளவன்; ஏக பாத் – ஒரு பங்கு செல்வம் உள்ளவனைவிட; பூய: – விரைவாக; வி சக்ரமே – பயணம் செய்கிறான்; த்விபாத் – இரண்டு பங்கு உள்ளவன்; த்ரிபாதம் அபி – மூன்று பங்கு உள்ளவனுக்கு; பச்சாத் – பின்னால்; ஏதி – செல்கிறான்; சதுஷ்பாத் – நான்கு பங்கு உள்ளவன்; த்விபதாம் – இரண்டு பங்கு உள்ளவன்; உபதிஷ்டமான: – விட்டுச் சென்றுள்ள; பங்க்தீ: – பாதைகளை; ஸம்பச்யன் – நன்றாகப் பார்த்து; அபி ஸ்வரே ஏதி – கடந்து செல்கிறான்.

8. இரண்டு பங்கு செல்வம் உள்ளவன் ஒரு பங்கு உள்ளவனைவிட விரைவாகப் பயணம் செய்கிறான். அவன் மூன்று பங்கு உள்ளவனுக்குப் பின்னால் செல்கிறான். நான்கு பங்கு உள்ளவன் இரண்டு பங்கு உள்ளவனும் மூன்று பங்கு உள்ளவனும் விட்டுச் சென்றுள்ள பாதைகளை நன்றாகப் பார்த்து அவர்களைக் கடந்து செல்கிறான்.

'பதம்' என்ற வார்த்தைக்கு கால் என்ற பொருள் இருந்தாலும், அதனைச் செல்வத்தைக் குறிக்கின்ற அளவீடாகக் கொள்கிறார் சாயணர். இந்த மந்திரத்தின் கருத்து: ஒருவன் பணக்காரன் என்றால் அவனைவிட பணக்காரன் இருக்கவே செய்கிறான். எனவே பணக்காரன் என்ற அகந்தையில் இருக்க வேண்டாம், ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டும்.

ஸமௌ சித்தஸ்தௌ ந ஸமம் விவிஷ்ட:

ஸம்மாதரா சின்ன ஸமம் துஹாதே ।

யமயோச்சின்ன ஸமா வீர்யாணி

ஜ்ஞாதீ சித் ஸந்தௌ ந ஸமம் ப்ருணீத: || 9 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

ஹஸ்தௌ – இரண்டு கைகளும்; ஸமௌ சித் – ஒரேபோல் இருந்தாலும்; விவிஷ்ட்ட: – வேலைகளில்; ந ஸமம் – ஒரேபோல் இல்லை; ஸம் மாதரா சித் – ஒரே பசுவிற்குப் பிறந்திருந்தாலும்; துஹாதே ந ஸமம் – இரண்டு பசுக்கள் சம அளவு பால் தருவதில்லை; யமய: சித் – இரட்டையராக இருந்தாலும்; ந ஸமா வீர்யாணி – ஆற்றல்கள் சமமாக இருப்பதில்லை; தௌ – இருவர்; ஜ்ஞாதீ ஸன் சித் – ஒரே பெற்றோருக்குப் பிறந்திருந் தாலும்; ந ஸமம் ப்ருணீத: – சம அளவு தர்ம சிந்தை உள்ளவர்களாக இருப்பதில்லை.

9. இரண்டு கைகளும் ஒரேபோல் இருந்தாலும் செய்கின்ற வேலைகளில் சம ஆற்றலுடன் அவை செயல்படுவதில்லை. ஒரே பசுவிற்குப் பிறந்திருந்தாலும் இரண்டு பசுக்கள் சம அளவு பால் தருவதில்லை. இரட்டையராக இருந்தாலும் அவர்களின் ஆற்றல்கள் சமமாக இருப்பதில்லை. இருவர் ஒரே பெற்றோருக்குப் பிறந்திருந் தாலும் சம அளவு தர்ம சிந்தை உள்ளவர்களாக இருப்பதில்லை.



# २०. सम्मनस्य सूक्तम्

अथर्ववेद, 3.30

ॐ ॥ सहृदयं सांमनस्यमविद्वेषं कृणोमि वः ।

अन्यो अन्यमभि हर्यत वत्सं जातमिवाघ्न्या ॥ १ ॥

अनुव्रतः पितुः पुत्रो मात्रा भवतु संमनाः ।

जाया पत्ये मधुमतीं वाचं वदतु शान्तिवाम् ॥ २ ॥

मा भ्राता भ्रातरं द्विक्षन्मा स्वसारमुत स्वसा ।

सम्यञ्चः सव्रता भूत्वा वाचं वदत भद्रया ॥ ३ ॥

येन देवा न वियन्ति नो च विद्विषते मिथः ।

तत् कृण्मो ब्रह्म वो गृहे संज्ञानं पुरुषेभ्यः ॥ ४ ॥

ज्यायस्वन्तश्चित्तिनो मा वि यौष्ट

संराधयन्तः सधुराश्चरन्तः ।

अन्यो अन्यस्मै वल्गु वदन्त एत

सध्रीचीनान् वः संमनसस्कृणोमि ॥ ५ ॥

समानी प्रपा सह वोऽन्नभागः

समाने योक्त्रे सह वो युनज्मि ।

सम्यञ्चोऽग्निं सपर्यतारा नाभिमिवाभितः ॥ ६ ॥

सध्रीचीनान् वः संमनसस्कृणोम्ये-

कश्नुष्टीन्संवननेन सर्वान् ।

देवा इवामृतं रक्षमाणाः

सायंप्रातः सोमनसो वो अस्तु ॥ ७ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 20. ஸம்மனஸ்ய ஸூக்தம்

*அதர்வ வேதம், 3.30*

மனிதர்களுக்கு இடையில் ஒற்றுமையையும், பரஸ்பரம் புரிந்துகொள்தலையும், அன்பையும் வலியுறுத்துகின்ற ஸூக்தம் இது.

ஓம் ॥ ஸஹ்ருதயம் ஸாம்மனஸ்யமவித்வேஷம்

க்ருணோமி வ: ।

அன்யோ அன்யமபி ஹர்யத வத்ஸம் ஜாதமி

வாக்ன்யா ॥ 1 ॥

ஸஹ்ருதயம் - ஒரே உள்ளத்தினராக; ஸாம் மனஸ்யம் -ஒரே மனத்தினராக; அவித்விஷம் - வெறுப்பு அற்றவர்களாக; க்ருணோமி வ: -உங்களைஆக்குகிறேன்; அக்ன்யா - தாய்ப்பசு; ஜாதம் வத்ஸம் - புதிதாகப் பிறந்த கன்றினை; அன்ய: அன்யம் அபி - ஒருவரை ஒருவர்; ஹர்யத - நேசியுங்கள்.

1. ஒரே உள்ளத்தினராக, ஒரே மனத்தினராக, வெறுப்பு அற்றவர்களாக உங்களை ஆக்குகிறேன். புதிதாகப் பிறந்த கன்றினைத் தாய்ப்பசு நேசிப்பதுபோல் ஒருவரை ஒருவர் நேசியுங்கள்.

அனுவ்ரத: பிது: புத்ரோ மாத்ரா பவது ஸம்மனா: |

ஜாயா பத்யே மதுமதீம் வாசம் வதது சாந்திவாம் || 2 ||

புத்ர: - மகன்; பிது - தந்தையை; அனுவ்ரத: - பின் தொடர்பவனாக; மாத்ரா - தாயுடன்; ஸம்மனா: - ஒரே மனத்தினனாக; பவது - இருக்கட்டும்; பத்யே -கணவனிடம்; ஜாயா - மனைவி; மதுமதீம் - இனிமையான; சாந்திவாம் - அமைதி நல்குகின்ற; வாசம் - வார்த்தைகளை; வதது - பேசட்டும்.

2. மகன் தந்தையைப் பின்தொடர்பவனாக இருக்கட்டும்; தாயுடன் ஒரே மனத்தினனாக இருக்கட்டும். கணவனிடம் மனைவி இனிமையான, அமைதி தருகின்ற வார்த்தைகளைப் பேசட்டும்.

மா ப்ராதா ப்ராதரம் த்விக்ஷன் மா ஸ்வஸார
முத ஸ்வஸா |
ஸம்யஞ்ச: ஸவ்ரதா பூத்வா வாசம் வதத பத்ரயா || 3 ||

ப்ராதா – சகோதரன்; ப்ராதரம் – சகோதரனையும்; உத – மற்றும்; ஸ்வஸா – சகோதரி; ஸ்வஸாரம் – சகோதரியையும்; மா த்விஷத் – வெறுக்கக் கூடாது.; ஸம்யம் – எல்லோரும் ஒன்றுசேர்ந்து; ஸவ்ரதா பூத்வா – ஒரேநோக்கத்திற்காக; பத்ரயா – நன்மைதருகின்ற; வாசம் – வார்த்தைகளை; வதத – பேசுங்கள்.

3. சகோதர சகோதரிகள் ஒருவரையொருவர் வெறுக்கக் கூடாது. எல்லோரும் ஒன்றுசேர்ந்து ஒரே நோக்கத்திற்காகப் பாடுபடுங்கள்; அனைவருக்கும் நன்மை பயக்கின்ற வார்த்தைகளைப் பேசுங்கள்.

யேன தேவா ந வியந்தி நோ ச வித்விஷதே மித: |
தத் க்ருண்மோ ப்ரஹ்ம வோ க்ருஹே ஸம்ஜ்ஞானம்
புருஷேப்ய: || 4 ||

யேன – எதனால்; தேவா: – தேவர்கள்; ந வியந்தி ச – பிரியாமலும்; ந வித்விஷதே மித: – வெறுக்காமலும் இருக்கிறார்களோ; தத் – அந்த; ப்ரஹ்ம ஸம்ஜ்ஞானம் – மேலான புரிந்துகொள்ளல்; க்ருஹே – வீட்டில்;

புருஷேப்ய: – அங்கத்தினரிடையே; க்ருண்ம: வ: –நிலவ பிரார்த்திக்கிறேன்.

4. எதனால் தேவர்கள் ஒருவருக்கொருவர் பிரியாமலும் வெறுக்காமலும் இருக்கிறார்களோ, புரிந்துகொள்வல் என்ற அந்த மேலான பண்பு வீட்டில் அங்கத்தினரிடையே நிலவுவதற்காகப் பிரார்த்திக்கிறேன்.

ஜ்யாயஸ்வந்தச் சித்தினோ மா வி யௌஷ்ட்ட
ஸம்ராதயந்த: ஸதுராச்சரந்த: |
அன்யோ அன்யஸ்மை வல்கு வதந்த ஏத
ஸத்ரீசீனான் வ: ஸம்மனஸஸ் க்ருணோமி || 5 ||

ஜ்யாயஸ்வந்த: –இளையவர்கள் பெரியவர்களைத் தொடர்ந்து செல்வதுபோல் ஒருவரையொருவர் பின்பற்றிச் செல்பவர்களாக; சித்தின: – ஒரே மனத்தினராக; ஸம்ராதயந்த: – சேர்ந்து வழிபடுபவர்களாக; அன்ய: அன்யஸ்மை – ஒருவர் மற்றவரிடம்; வல்கு வதந்த: – இனிமையாகப் பேசுபவர்களாக; ஸதுராச் சரந்த: – சேர்ந்து வாழுங்கள்.; மா வியௌஷ்ட்ட – ஒற்றுமை குலையாதீர்கள்; ஏத – வாருங்கள்; ஸத்ரீசீனான் – ஒற்றுமையுடன் செயலாற்றுபவர்களாக; வ: ஸம்மனஸ: – ஒன்றுபட்ட மனத்தினராக; க்ருணோமி –ஆக்குகிறேன்.

5. இளையவர்கள் பெரியவர்களைத் தொடர்ந்து செல்வது போல் ஒருவரையொருவர் பின்பற்றிச் செல்பவர்களாக, ஒரே மனத்தினராக, சேர்ந்து வழிபடுபவர்களாக, ஒருவர் மற்றவரிடம் இனிமையாகப் பேசுபவர்களாக சேர்ந்து வாழுங்கள். ஒருபோதும் ஒற்றுமை குலையாதீர்கள். வாருங்கள், உங்களை ஒற்றுமையுடன் செயலாற்றுபவர்களாக, ஒன்றுபட்ட மனத்தினராக ஆக்குகிறேன்.

ஸமானீ ப்ரபா ஸஹவோன்னபாக:

ஸமானே யோக்த்ரே ஸஹ வோ யுனஜ்மி ।

ஸம்யஞ்சோக்னிம் ஸபர்யதாரா நாபிமிவாபித: ॥ 6 ॥

ப்ரபா – கிணறும்; அன்னபாக: – சமையலறையும்; ஸஹ ஸமானீ வ: – ஒன்று சேர்ந்து செய்யும் இடமாக இருக்கட்டும்.; ஸமானே யோக்த்ரே – அன்புக் கயிற்றினால்; ஸஹ வ: – அனைவரையும்; யுனஜ்மி – கட்டுகிறேன்.; ஆரா: – ஆரங்கள்; நாபிம் – அச்சில்; அபித: இவ – சேர்வதுபோல்; ஸம்யம் ச – ஒரே நோக்கத்துடன்; அக்னிம் – புனித அக்கினியை; ஸபர்யத – வழிபடுங்கள்.

6. கிணறும் சமையலறையும் உங்கள் அனைவருக்கும் பொது இடமாக இருக்கின்ற அளவிற்கு உங்களிடையே ஒற்றுமை வளரட்டும். அன்புக் கயிற்றினால் உங்கள் அனைவரையும் நான் கட்டுகிறேன். ஆரங்கள் சக்கரத்தின் அச்சில் சேர்வதுபோல் ஒரே நோக்கத்துடன் நீங்கள் அனைவரும் புனித அக்கினியை வழிபடுங்கள்.

ஸத்ரீசீனான் வ: ஸம்மனஸஸ்க்ருணோம்-

யேகச்னுஷ்ட்டீன் ஸம்வனனேன ஸர்வான் |

தேவா இவாம்ருதம் ரக்ஷமாணா:

ஸாயம் ப்ராத: ஸௌமனஸோ வோ அஸ்து || 7 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

ஸர்வான் - அனைவரும்; ஸம்வனனேன வ: - அன்பினால்; ஸத்ரீசீனான் - ஒன்றுபட்டு வேலை செய்பவர்களாக; ஸம்மனஸ: - ஒன்றுபட்ட மனத்தினராக; ஏகச்னுஷ்ட்டீன் - ஒன்றுபட்டு உண்பவர்களாக; க்ருணோமி - செய்கிறேன்; தேவா: - தேவர்கள்; அம்ருதம் - அமுதத்தை; ரக்ஷமாணா : இவ - காப்பதுபோல்; ப்ராத: - காலையிலும்; ஸாயம் - மாலையிலும்; ஸௌமனஸ: - நல்ல எண்ணத்தை; வ: அஸ்து - செய்ய வேண்டும்.

7. நீங்கள் அனைவரும் அன்பினால் ஒன்றுபட்டு வேலை செய்பவர்களாக, ஒன்றுபட்ட மனத்தினராக, ஒன்றுபட்டு உண்பவர்களாக இருக்குமாறு செய்கிறேன். தேவர்கள் அமுதத்தைக் காப்பதுபோல் காலையிலும் மாலையிலும் உங்களில் நல்ல எண்ணத்தைக் காத்து வளரச் செய்யுங்கள்.



# २१. संवनन सूक्तम्

ऋग्वेद, 10.191

ॐ ॥ संसमिद्युवसे वृषन्नग्ने विश्वान्यर्य आ ।
इळस्पदे समिध्यसे स नो वसून्या भर ॥ १ ॥

सं गच्छध्वं सं वदध्वं सं वो मनांसि जानताम्
देवा भागं यथा पूर्वे संजानाना उपासते ॥ २ ॥

समानो मन्त्रः समितिः समानी समानं मनः सह चित्तमेषाम् ।
समानं मन्त्रमभि मन्त्रये वः समानेन वो हविषा जुहोमि ॥ ३ ॥

समानी व आकूतिः समाना हृदयानि वः ।
समानमस्तु वो मनो यथा वः सुसहासति ॥ ४ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 21. ஸம்வனன ஸூக்தம்

*ரிக் வேதம், 10.191*

'ஸம்' என்றால் பொது, 'வனன' என்றால் சங்கல்பம். ஸம்வனன என்றால் பொதுவான சங்கல்பம். தனி நபர் சங்கல்பத்தைப்பற்றி ஸங்கல்ப ஸூக்தத்தில்

கண்டோம். சமுதாயமே பொதுவான சங்கல்பத்துடன் செயல்பட வேண்டும், அதனால் சமுதாயம் வளம் பெறும் என்பதை ஸம்வனன ஸூக்தம் காட்டுகிறது. ரிக் வேதத்தின் கடைசிப் பாடல் இது.

ஓம் || ஸம்ஸமித்யுவஸே வ்ருஷன்னக்னே
விச்வான்யர்ய ஆ | இளஸ்பதே ஸமித்யஸே ஸ நோ
வஸூன்யா பர || 1 ||

வ்ருஷன் – நன்மை பொழிகின்ற; அர்ய: – தெய்வமான; அக்னே – அக்கினி தேவனே; விச்வான் – எல்லா உயிரினங்களையும்; ஆ ஸம்ஸம் இத்யுவஸே – ஒற்றுமையாக இருக்கச் செய்வாய்; இளஸ்பதே – பீடமான பூமியில்; ஸமித்யஸே – எழுந்தருளச் செய்யப் படுகிறாய்; ஸ: – அந்த அக்கினி தேவன்; ந: – எங்களுக்கு; ஸூன்யா – செல்வத்தை; பர – நிறைக் கட்டும்.

1. நன்மை பொழிகின்ற தெய்வமான அக்கினி தேவனே, எல்லா உயிரினங்களையும் ஒற்றுமையாக இருக்கச் செய்வாய். உனது பீடமான பூமியில் நீ எழுந்தருளுமாறு பிரார்த்திக்கிறோம். எங்களுக்கு ஏராளம் செல்வத்தைத் தருவாய்!

ஸம் கச்சத்வம் ஸம் வதத்வம் ஸம் வோ மனாம்ஸி
ஜானதாம் |
தேவா பாகம் யதா பூர்வே ஸம்ஜானானா உபாஸதே || 2 ||

ஸம் – ஒன்றாக; கச்சத்வம் – செயல்படுங்கள்; ஸம் – ஒன்றாக; வதத்வம் – பேசுங்கள்; வோ மனாம்ஸி – உங்கள் மனங்கள்; ஸம் ஜானதாம் – ஒத்த கருத்துடன் நிலவட்டும்; யதா – எவ்வாறு; பூர்வே – முன்னாளில்; தேவா: – தேவர்கள்; உபாஸதே – யாகத்தில்; பாகம் – பங்கை; ஸம்ஜானானா – ஒற்றுமையாக இருங்கள்.

2. ஒன்றாகச்செயல்படுங்கள். ஒன்றாகப் பேசுங்கள். உங்கள் மனங்கள் ஒத்த கருத்துடன் நிலவட்டும். முன்னாளில் தேவர்கள் யாகத்தில் எப்படி தங்கள் பங்கை ஒற்றுமையாக ஏற்றுக் கொண்டார்களோ அப்படியே ஒற்றுமையாக இருங்கள்!

ஸமானோ மந்த்ர: ஸமிதி: ஸமானீ
ஸமானம் மன: ஸஹ சித்தமேஷாம் |
ஸமானம் மந்த்ரமபி மந்த்ரயே வ:
ஸமானேன வோ ஹவிஷா ஜுஹோமி || 3 ||

மந்த்ர: – பிரார்த்தனை; ஸமான: – ஒத்த கருத்துடன் விளங்கட்டும்; ஸமிதி: – கூட்டங்கள்; ஸமானீ – ஒற்றுமையுடன் நிலவட்டும்; ஏஷாம் – உங்கள்; மன: ஸஹ – எண்ணங்களுடன்; சித்தம் – மனமும்; ஸமானம் – ஒற்றுமையுடன் இருக்கட்டும்; வ: – உங்களுக்காக; ஸமானம் – பொதுவான; மந்த்ரம் அபி – பிரார்த்தனையை; மந்த்ரயே – பிரார்த்திக்கிறேன்;

வ: – உங்களுக்காக; ஸமானேன – பொதுவான; ஹவிஷா – ஆஹூதியால்; ஜுஹோமி – வழிபடுகிறேன்.

3. உங்கள் பிரார்த்தனை ஒத்த கருத்துடன் விளங்கட்டும். உங்கள் கூட்டங்கள் ஒற்றுமையுடன் நிலவட்டும், உங்கள் எண்ணங்களுடன் மனமும் ஒற்றுமையாக இருக்கட்டும். உங்களுக்காக பொதுவான பிரார்த்தனையை நான் பிரார்த்திக்கிறேன், உங்களுக்காக பொதுவான ஆஹூதியால் வழிபடுகிறேன்.

ஸமானீ வ ஆகூதி: ஸமானா ஹ்ருதயானி வ: |

ஸமானமஸ்து வோ மனோ யதா வ: ஸுஸஹாஸதி || 4 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

வ: – உங்கள்; ஆகூதி: – சங்கல்பம்; ஸமானீ – ஒன்றுபட்டதாக இருக்கட்டும்; வ: – உங்கள்; ஹ்ருதயானி – உணர்ச்சி; ஸமானா – ஒன்றுபட்டதாக இருக்கட்டும்; வ: – உங்கள்; மன: – சிந்தனை; ஸமானம் அஸ்து – ஒன்றுபட்டதாக இருக்கட்டும்; யதா – இவ்வாறு; வ: – உங்களிடையே; ஸுஸஹாஸதி – அற்புதமான இயைபு நிலவட்டும்.

4. உங்கள் சங்கல்பம் ஒன்றுபட்டதாக இருக்கட்டும். உங்கள் உணர்ச்சி ஒன்றுபட்டதாக இருக்கட்டும். உங்கள் சிந்தனை ஒன்றுபட்டதாக இருக்கட்டும். இவ்வாறு உங்களிடையே அற்புதமான இயைபு நிலவட்டும்.



# २२. काल सूक्तम्

अथर्ववेद, 19.53,54

ॐ ॥ कालो अश्वो वहति सप्तरश्मिः सहस्राक्षो अजरो भूरिरेताः ।

तमा रोहन्ति कवयो विपश्चितस्तस्य चक्रा भुवनानि विश्वा ॥ १ ॥

पूर्णः कुम्भोऽधि काल आहितस्तं वै पश्यामो बहुधा नु सन्तम् ।

स इमा विश्वा भुवनानि प्रत्यङ् कालं तमाहुः परमे व्योऽमन् ॥ २ ॥

कालोऽमूं दिवमजनयत् काल इमाः पृथिवीरुत ।

काले ह भूतं भव्यं चेषितं ह वि तिष्ठते ॥ ३ ॥

कालादापः समभवन् कालाद् ब्रह्म तपो दिशः ।

कालेनोदेति सूर्यः काले नि विशते पुनः ॥ ४ ॥

कालो यज्ञं समैरयद्देवेभ्यो भागमक्षितम् ।

काले गन्धर्वाप्सरसः काले लोकाः प्रतिष्ठिताः ॥ ५ ॥

कालेऽयमङ्गिरा देवोऽथर्वा चाधि तिष्ठतः ।

इमं च लोकं परमं च लोकं पुण्यांश्च लोकान् विधृतीश्च पुण्याः ।
सर्वांल्लोकानभिजित्य ब्रह्मणा कालः स ईयते परमो नु देवः ॥ ६ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 22. கால ஸூக்தம்

*அதர்வ வேதம் 19.53,54*

'ஏதோ சாதாரணமான, எந்தச் சக்தியும் இல்லாத ஒன்றுபோல் காலம் தன்னைக் காட்டிக்கொள்கிறது. ஆனால் உண்மையில் அதுதான் மனித வாழ்வை ஒரு வாள்போல், ஒரு கணம்கூட இடையீடின்றி அறுத்துக் கொண்டிருக்கிறது!' என்று வியந்து நிற்கிறார் தெய்வப் புலவர்.[1] காலம் என்ற இந்த வல்லமை மிக்க கருவியை இயற்கை அனைவரிடமும் சமமாகக் கொடுத்திருக் கிறது. இன்னும் சொல்லப்போனால், வேறு எல்லாம்— அது சூழ்நிலையாகட்டும், உணவு, உடை, இருப்பிடம் என்று எதுவும் ஆகட்டும்— மனிதனுக்கு மனிதன் வேறு படுகின்றன. காலம் மட்டும் அனைவருக்கும் ஒன்றே.

கீதையிலும் (11.32) பகவான் 'நான் காலமாக இருக்கிறேன்' என்றார். கீதையில் காலம் என்பதன் அழிக்கும் அம்சத்தைக் காண்கிறோம். இங்கே அதன் ஆக்கப் பகுதியைக் காண்கிறோம். அதர்வண வேதத்தில்

---

1. நாளென ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்.

—திருக்குறள், 34.4.

வருகின்ற இந்த அற்புதமான கால ஸூக்தத்தின் சில பகுதிகள் இங்கே தரப்படுகின்றன.

ஓம் || காலோ அச்வோ வஹதி ஸப்தரச்மி:

ஸஹஸ்ராக்ஷோ அஜரோ பூரிரேதா: |

தமா ரோஹந்தி கவயோ விபச்சிதஸ்தஸ்ய

சக்ரா புவனானி விச்வா || 1 ||

ஸப்த ரச்மி: – ஏழு கடிவாளங்களும்; ஸஹஸ்ர அக்ஷ: – ஆயிரம் கண்களும்; அஜர: – மூப்பற்றதும்; பூரிரேதா: – வீரியம் நிறைந்ததுமான; அச்வ: – குதிரையை; கால: – காலம்; வஹதி – செலுத்துகிறது; விச்வா புவனானி – எல்லா உலகங்களும் அதன் உயிர்களும்; தஸ்ய – அதன்; சக்ரா: – சக்கரங்கள்; விபச்சித: – மேதைகளான; கவய: – ரிஷிகள்; தம் – அதில்; ஆரோஹந்தி – ஏறிச் செல்கிறார்கள்.

1. ஏழு கடிவாளங்கள் மற்றும் ஆயிரம் கண்கள் உடையதும், மூப்பற்றதும், வீரியம் நிறைந்ததுமான குதிரை தேரைச் செலுத்துவதுபோல் காலம் பிரபஞ்சத்தைச் செலுத்துகிறது. எல்லா உலகங்களும் உயிர்களும் அதன் சக்கரங்கள். மேதைகளான ரிஷிகள் அதில் ஏறிச் செல்கிறார்கள்.

காலத்தின் ஆதிக்கத்திலிருந்து எதுவும் தப்ப முடியாது என்பதைக் குறிப்பிடவே 'ஆயிரம் கண்கள்'

உடையதாக காலம் கூறப்படுகிறது. வானவில்லின் ஏழு நிறங்கள் ஏழு கடிவாளங்களாகக் கூறப்படுகின்றன. 'வீரியம் நிறைந்தது' என்பது எல்லாவற்றையும் உருவாக்குகின்ற சக்தி படைத்தது காலம் என்பதைக் காட்டுகிறது.

மேதைகள் காலத்தின் கட்டுப்பாட்டில் இருப்பதில்லை, மாறாக, அவர்கள் காலத்தைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பார்கள். இதுவே 'ரிஷிகள் அதில் ஏறிச் செல்கிறார்கள்' என்று குறிப்பிடப்பட்டது.

பூர்ண:கும்போऽதி கால ஆஹிதஸ்தம்

வை பச்யாமோ பஹுதா நு ஸந்தம் |

ஸ இமா விச்வா புவனானி ப்ரத்யங்

காலம் தமாஹு: பரமே வ்யோऽமன் || 2 ||

கால: அதி – *காலத்தின்மீது;* பூர்ண கும்ப: – *பூரண கும்பம்;* ஆஹித: – *உள்ளது;* தம் வை – *அதனையே;* பஹுதா நு ஸந்தம் – *பலவாக;* பச்யாம: – *காண்கிறோம்;* தம் காலம் – *அந்த காலம்;* இமா – *இந்த;* விச்வா புவனானி – *அனைத்து உயிர்களின்;* ப்ரத்யக் – *உள்ளே உள்ள;* பரமே வ்யோமன் – *மேலான வெளியில்;* ஆஹு: – *சொல்கிறார்கள்.*

2. காலத்தின்மீது பூரண கும்பம் உள்ளது. அதனையே பலவாகக் காண்கிறோம். காலம் அனைத்து உயிர்களின் உள்ளே உள்ள மேலான வெளியில் இருப்பதாகச் சொல்கிறார்கள்.

இறைவனே இங்கு பூரண கும்பமாகக் கூறப்படு கிறார். அவர்காலத்தைக்கடந்தவர்என்பதைக்காட்டவே காலத்தின்மீது அவர் இருப்பதாகக் கூறப்பட்டது. காலம் ஒவ்வோர் உயிரின் உள்ளேயும் உள்ளது. அதாவது காலம் நம்மில் உள்ளது. நாம் நினைத்தால் காலத்தை நம் கட்டுக்குள் வைக்க முடியும்.

காலோ஽மூம் திவ்மஜனயத் கால இமா: ப்ருதிவீருத |
காலே ஹ பூதம் பவ்யம் சேஷிதம் ஹ
வி திஷ்ட்டதே || 3 ||

*அமூம் – தொலைவிலுள்ளதான; திவம் – ஆகாயத்தையும்; இமா: – இந்த; ப்ருதிவீ: உத – பூமியை யும்; கால: – காலமே; அஜனயத் – படைத்தது; காலே – காலத்திலிருந்து; ஈஷிதம் – வெளிவந்தவை யான; பூதம் – இருந்தவை; பவ்யம் ச – இனி வரப் போகின்ற எல்லாம்; காலே – காலத்திலேயே; திஷ்ட்டதே – நிலைபெற்றுள்ளன.*

3. தொலைவிலுள்ளதான ஆகாயத்தையும், இந்த பூமியை யும் காலமே படைத்தது. இருந்தவை, இனி வரப்போகின்றவை என்று காலத்திலிருந்து வெளிவந்தவை எல்லாம் காலத்தி லேயே நிலைபெற்றுள்ளன.

காலாதாப: ஸம்பவன் காலாத் ப்ரஹ்ம தபோ திச: |
காலேனோதேதி ஸூர்ய: காலே நி விசதே புன: || 4 ||

காலாத் – காலத்திலிருந்தே; ஆப: – தண்ணீர்; ஸம் அபவன் – உண்டாயிற்று; ப்ரஹ்ம – மந்திரங்கள்; தப: – ஆற்றல்; திச: – திசைகள்; காலாத் – காலத்திலிருந்தே; ஸூர்ய: – சூரியன்; காலேன – காலத்திலேயே; உதேதி – உதிக்கிறான்; புன: – மீண்டும்; காலே – காலத்திலேயே; நி விசதே – மறைகிறான்.

4. காலத்திலிருந்தே தண்ணீர் உண்டாயிற்று, மந்திரங்கள், ஆற்றல், திசைகள் எல்லாம் காலத்திலிருந்தே உண்டாயின. சூரியன் காலத்திலேயே உதிக்கிறான், மீண்டும் காலத்திலேயே மறைகிறான்.

காலோ யஜ்ஞம் ஸமைரயத் தேவேப்யோ பாகமக்ஷிதம் |
காலே கந்தர்வாப்ஸரஸ: காலே லோகா:
ப்ரதிஷ்ட்டிதா: || 5 ||

தேவேப்ய: – தேவர்களுக்கு; அக்ஷிதம் – அழிவற்ற; பாகம் – பகுதியாக; யஜ்ஞம் – யஜ்ஞத்தை; கால: – காலம்; ஸமைரயத் – படைத்தது; கந்தர்வா: – கந்தர்வர்கள்; அப்ஸரஸ: – அப்ஸரஸ்கள்; லோகா: – பூமியிலுள்ள உயிர்கள்; காலே – காலத்திலேயே; ப்ரதிஷ்ட்டிதா: – நிலைபெற்றுள்ளன.

5. தேவர்களுக்கு அழிவற்ற பகுதியாக யஜ்ஞத்தைக் காலம் படைத்தது. கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள், பூமியிலுள்ள உயிர்கள் எல்லாம் காலத்திலேயே நிலைபெற்றுள்ளன.

காலே஽ய மங்கிரா தேவோ஽தர்வா சாதி திஷ்ட்டத:।
இமம் ச லோகம் பரமம் ச லோகம்
புண்யாம்ச்ச லோகான் வித்ருதீச்ச புண்யா:।
ஸர்வால்லோகானபிஜித்ய ப்ரஹ்மணா
கால: ஸ ஈயதே பரமோ நு தேவ: ॥ 6 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

அயம் தேவ: – *தெய்வீகமான இந்த;* அங்கிரா ச – *அங்கிரஸனும்;* அதர்வா – *அதர்வனும்;* காலே – *காலத்திலேயே;* அதி திஷ்ட்டத: – *நிலைபெற்றுள்ளனர்;* இமம் லோகம் ச – *இந்த உலகமும்;* பரமம் லோகம் – *மேல் உலகமும்;* புண்யான் லோகான் – *மற்ற புண்ணிய உலகங்களும்;* புண்யா: ச – *அந்தரப் பகுதிகளும்;* வித்ருதீ: – *கட்டுப்படுத்தப்படுகின்றன;* ஸர்வான் லோகான் – *எல்லா உலகங்களையும்;* ப்ரஹ்மணா – *பிரம்மனால்;* அபிஜித்ய – *வென்றுவிட்டு;* ஸ: கால: – *காலமாகிய;* பரம: தேவ: – *மேலான தேவன்;* ஈயதே – *நடைபோடுகிறான்.*

6. தெய்வீகமான அங்கிரஸனும் அதர்வனும் காலத்திலேயே நிலைபெற்றுள்ளனர். இந்த உலகமும், மேல் உலகமும், மற்ற புண்ணிய உலகங்களும், அந்தரப் பகுதிகளும் காலத்தாலேயே கட்டுப்படுத்தப்படுகின்றன. எல்லா உலகங்களையும் பிரம்மனால் வென்றுவிட்டு காலமாகிய மேலான தேவன் நடைபோடுகிறான்.

# २३. अक्षीभ्यां ते सूक्तम्

ऋग्वेद,10.163

ॐ ॥ अक्षीभ्यां ते नासिकाभ्यां कर्णाभ्यां छुबुकादधि ।
यक्ष्मं शीर्षण्यं मस्तिष्काज्जिह्वाया वि वृहामि ते ॥ १ ॥

ग्रीवाभ्यस्त उष्णिहाभ्यः कीकसाभ्यो अनूक्यात् ।
यक्ष्मं दोषण्य (अ) १ मंसाभ्यां बाहुभ्यां वि वृहामि ते ॥ २ ॥

आन्त्रेभ्यस्ते गुदाभ्यो वनिष्ठोर्हृदयादधि ।
यक्ष्मं मतस्नाभ्यां यक्नः प्लाशिभ्यो वि वृहामि ते ॥ ३ ॥

ऊरुभ्यां ते अष्ठीवद्भ्यां पार्ष्णिभ्यां प्रपदाभ्याम् ।
यक्ष्मं श्रोणिभ्यां भासदाद्भंससो वि वृहामि ते ॥ ४ ॥

मेहनाद्वनंकरणाल्लोमभ्यस्ते नखेभ्यः ।
यक्ष्मं सर्वस्मादात्मनस्तमिदं वि वृहामि ते ॥ ५ ॥

अङ्गा॑दङ्गा॒ल्लोम्नो॑ लोम्नो जा॒तं पर्व॑णि पर्वणि ।

यक्ष्मं॒ सर्व॑स्मादा॒त्मन॒स्तमि॒दं वि वृ॑हामि ते ॥ ६ ॥

ॐ शान्ति॒: शान्ति॒: शान्ति॑: ॥

## 23. அக்ஷீப்யாம் தே ஸூக்தம்

*ரிக் வேதம் 10.163*

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.' புறச் சூழ்நிலை, சுற்றுச் சூழல், நல்ல மனம் இவற்றுடன் இவற்றைப் போலவே நல்ல உடம்பும் அத்தகையதொரு வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்றாகும். 'நாம் நோயற்றவர்கள், என் நோய்கள் எல்லாம் விலகிவிட்டன' என்பதை மீண்டும் மீண்டும் மனத்திற்குச் சொல்வது நோயை விரட்டுவதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. இது சுய தூண்டுதல் (Auto suggestion) ஆகும். 'இப்போது உனக்கு ஆச்சரியமானதொரு விஷயம் சொல்கிறேன். உங்களுள் யாராவது நோயுற்றிருந்தால், அவரோ மற்றொருவரோ நோயுற்றவரைத் தன் மனத்தில் நினைக்க வேண்டும்; அவர் நலமாக உள்ளார் என்று மனத்திற்குள் உறுதியாகச் சொல்ல வேண்டும், திடமாக பாவனை செய்ய வேண்டும். இதன்மூலம் அவர் விரைவில் குணமடைவார். இதை அவருக்குத் தெரியாமலே நீ செய்யலாம். உங்களுக்கிடையே ஆயிரம் மைல் தூரம் இருந்தாலும் சரி இதை நினைவில் வைத்துக்கொள். இனிமேல் உடல்நலம் குன்றவிடாதே' என்று சுவாமி விவேகானந்தர் தமது

சதோதரத் துறவியான சுவாமி சாரதானந்தருக்கு எழுதுகிறார்.[1]

நோயற்ற வாழ்விற்கு வேதங்கள் தருகின்ற ஒரு சுய தூண்டுதலே அக்ஷீப்யாம் தே ஸூக்தம்.

ஓம் || அக்ஷீப்யாம் தே நாஸிகாப்யாம்

கர்ணாப்யாம் சுபுகாததி |

யக்ஷ்மம் சீர்ஷண்யம் மஸ்திஷ்காத்

ஜிஹ்வாயா விவ்ருஹாமி தே || 1 ||

தே – உனது; அக்ஷீப்யாம் – கண்களிலிருந்து; நாஸிகாப்யாம் – மூக்கிலிருந்து; கர்ணாப்யாம் – காதுகளிலிருந்து; சுபுகாத் – கன்னத்திலிருந்து; சீர்ஷண்யம் – தலையிலிருந்து; மஸ்திஷ்காத் – மூளையிலிருந்து; ஜிஹ்வாயா – நாக்கிலிருந்து; யக்ஷ்மம் – நோயை; விவ்ருஹாமி – விரட்டுகிறேன்.

1. உனது கண்களிலிருந்து, மூக்கிலிருந்து, காதுகளிலிருந்து, கன்னத்திலிருந்து, தலையிலிருந்து, மூளையிலிருந்து, நாக்கிலிருந்து நோயை விரட்டுகிறேன்.

க்ரீவாப்யஸ்த உஷ்ணிஹாப்ய:

கீகஸாப்யோ அனூக்யாத் |

---

1. ஞானதீபம், 9.283,284.

யக்ஷ்மம் தோஷண்ய (அ) ? மம்ஸாப்யாம்

பாஹூப்யாம் விவ்ருஹாமி தே || 2 ||

தே – உனது; க்ரீவாப்ய: – கழுத்திலிருந்து; உஷ்ணிஹாப்ய: – தலையிலிருந்து; கீகஸாப்ய: – எலும்புகளிலிருந்து; அனூக்யாத் – மூட்டுகளிலிருந்து; அம்ஸாப்யாம் – தோள்களிலிருந்து; தோஷண்யம் – கைகளிலிருந்து; பாஹூப்யாம் – முன் கைகளிலிருந்து; யக்ஷ்மம் – நோயை; விவ்ருஹாமி – விரட்டுகிறேன்.

2. உனது கழுத்திலிருந்து, தலையிலிருந்து, எலும்புகளிலிருந்து, மூட்டுகளிலிருந்து, தோள்களிலிருந்து, கைகளிலிருந்து, முன் கைகளிலிருந்து நோயை விரட்டுகிறேன்.

ஆந்த்ரேப்யஸ்தே குதாப்யோ

வனிஷ்ட்டோர் ஹ்ருதயாததி |

யக்ஷ்மம் மதஸ்னாப்யாம் யக்ன:

ப்லாசிப்யோ விவ்ருஹாமி தே || 3 ||

தே – உனது; ஆந்த்ரேப்ய: – குடலிலிருந்து; குதாப்ய: – குதத்திலிருந்து; வனிஷ்ட்ட: – அடி வயிற்றிலிருந்து; ஹ்ருதயாத் – இதயத்திலிருந்து; மதஸ்னாப்யாம் – சிறுநீரகங்களிலிருந்து; யக்ன: –

கல்லீரலிலிருந்து; ப்லாசிப்ய: – வயிற்றிலுள்ள உறுப்பு களிலிருந்து; யக்ஷ்மம் – நோயை; விவ்ருஹாமி – விரட்டுகிறேன்.

3. உனது குடலிலிருந்து, குதத்திலிருந்து, அடிவயிற்றி லிருந்து இதயத்திலிருந்து, சிறுநீரகங்களிலிருந்து, கல்லீரலி லிருந்து, வயிற்றிலுள்ள உறுப்புகளிலிருந்து நோயை விரட்டுகிறேன்.

ஊருப்யாம் தே அஷ்ட்டீவத்ப்யாம்

பார்ஷ்ணிப்யாம் ப்ரபதாப்யாம் ।

யக்ஷ்மம் ச்ரோணிப்யாம்

பாஸதாத்பம்ஸஸோ விவ்ருஹாமி தே ॥ 4 ॥

தே – உனது; ஊருப்யாம் – தொடைகளி லிருந்து; அஷ்ட்டீவத்ப்யாம் – மூட்டுகளிலிருந்து; பார்ஷ்ணிப்யாம் – குதிகால்களிலிருந்து; ப்ரபதாப்யாம் – அடிக்கால்களிலிருந்து; ச்ரோணிப்யாம் – இடுப்புப் பகுதிகளிலிருந்து; பாஸதாத் – பின்புறங்களிலிருந்து; பம்ஸஸ: – உள்ளுறுப்பிலிருந்து; யக்ஷ்மம் – நோயை; விவ்ருஹாமி – விரட்டுகிறேன்.

4. உனது தொடைகளிலிருந்து, மூட்டுகளிலிருந்து, குதிகால்களிலிருந்து, அடிக்கால்களிலிருந்து, இடுப்புப் பகுதி களிலிருந்து, பின்புறங்களிலிருந்து, உள்ளுறுப்பிலிருந்து நோயை விரட்டுகிறேன்.

மேஹனாத்வனம் கரணால்லோம் ப்யஸ்தே

நகேப்ய: |

யக்ஷ்மம் ஸர்வஸ்மாதாத்மனஸ்தமிதம்

வி வ்ருஹாமி தே || 5 ||

தே - உனது; மேஹனாத் - பிறப்புறுப்பிலிருந்து; வனம் கரணாத் - சிறுநீர்ப் பையிலிருந்து; லோமப்ய: - முடியிலிருந்து; நகேப்ய: - நகங்களிலிருந்து; ஆத் மனஸ்தம் - உன் உள்ளே உள்ள; ஸர்வஸ்மாத் - எல்லா அவயவங்களிலிருந்தும்; இதம் - இந்த; யக்ஷ்மம் - நோயை; விவ்ருஹாமி - விரட்டுகிறேன்.

5. உனது பிறப்புறுப்பிலிருந்து, சிறுநீர்ப் பையிலிருந்து, முடியிலிருந்து, நகங்களிலிருந்து, உன் உள்ளே உள்ள எல்லா அவயவங்களிலிருந்தும் நோயை விரட்டுகிறேன்.

அங்காதங்கால்லோம்னோ லோம்னோ

ஜாதம் பர்வணி பர்வணி |

யக்ஷ்மம் ஸர்வஸ்மாதாத்மனஸ்தமிதம்

விவ்ருஹாமி தே || 6 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

தே – உனது; அங்காத் அங்காத் – ஒவ்வோர் அங்கங்களிலிருந்தும்; லோம்ன: லோம்ன: – ஒவ்வொரு முடியிலிருந்தும்; ஜாதம் – தோன்றுகின்ற; பர்வணி பர்வணி – ஒவ்வொரு மூட்டிலிருந்தும்; ஆத்மனஸ்தம் – உனது; ஸர்வஸ்மாத் – எல்லா அவயவங்களிலிருந்தும்; இதம் – இந்த; யக்ஷ்மம் – நோயை; விவ்ருஹாமி – விரட்டுகிறேன்.

6. உனது ஒவ்வோர் அங்கங்களிலிருந்தும், ஒவ்வொரு முடியிலிருந்தும், நோய் தோன்றுகின்ற ஒவ்வொரு மூட்டிலிருந்தும், உனது எல்லா அவயங்களிலிருந்தும் நோயை விரட்டுகிறேன்.



# २४. शान्ति सूक्तम्

अथर्ववेद,19.9

ॐ ॥ शान्ता द्यौः शान्ता पृथिवी शान्तमिदमुर्वन्तरिक्षम् ।

शान्ता उदन्वतीरापः शान्ता नः सन्त्वोषधीः ॥ १ ॥

शान्तानि पूर्वरूपाणि शान्तं नो अस्तु कृताकृतम् ।

शान्तं भूतं च भव्यं च सर्वमेव शमस्तु नः ॥ २ ॥

इयं या परमेष्ठिनी वाग् देवी ब्रह्मसंशिता ।

ययैव ससृजे घोरं तयैव शान्तिरस्तु नः ॥ ३ ॥

इदं यत् परमेष्ठिनं मनो वां ब्रह्मसंशितम् ।

येनैव ससृजे घोरं तेनैव शान्तिरस्तु नः ॥ ४ ॥

इमानि यानि पञ्चेन्द्रियाणि मनः षष्ठानि मे हृदि ब्रह्मणा संशितानि ।

यैरेव ससृजे घोरं तैरेव शान्तिरस्तु नः ॥ ५ ॥

यानि कानि चिच्छान्तानि लोके सप्तऋषयो विदुः ।

सर्वाणि शं भवन्तु मे शं मे अस्त्वभयं मे अस्तु ॥ ६ ॥

पृथिवी शान्तिरन्तरिक्षं शान्तिर्द्यौः शान्तिरापः शान्तिरोषधयः

शान्तिर्वनस्पतयः शान्तिर्विश्वे मे देवाः शान्तिः सर्वे मे देवाः शान्तिः

शान्तिः शान्तिः शान्तिभिः । ताभिः शान्तिभिः सर्व शान्तिभिः

शमयामोहं यदिह घोरं यदिह क्रूरं यदिह पापं तच्छान्तं तच्छिवं

सर्वमेव शमस्तु नः ॥ ७ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 24. சாந்தி ஸூக்தம்

*அதர்வ வேதம், 19.9.*

மனிதன் தேடுவது அமைதியை. அகத்திலும் புறத்திலும் அமைதி தேவை. அதனைப் பிரார்த்திக்கின்ற ஸூக்தம் இது. எது அமைதி? 'அனிஷ்ட்ட பரிஹாரேண ஸுகப்ராப்தி ரூபதா— விரும்பாத விஷயங்களை விலக்குவதன்மூலம் கிடைக்கின்ற ஆனந்த உணர்ச்சி' என்று அமைதியை விளக்குகிறார் சாயணர். தீயவற்றை விலக்கி நல்லவற்றை ஏற்கும்போது மனம் அமைதியில் திளைக்கிறது. அத்தகைய அமைதி நம் வாழ்வில் மலர இந்த ஸூக்தம் துணை செய்கிறது.

தியானவேளையின் ஆரம்பத்தில் இந்த ஸூக்தத்தை நிதானமாக ஓதுவது, மனத்தை அமைதிப்படுத்த மிகவும் உதவும்.

ஓம் || சாந்தா த்யௌ: சாந்தா ப்ருதிவீ

சாந்தமிதமுர்வந்தரிக்ஷம் |

சாந்தா உதன்வதீராப:

சாந்தா ந: ஸந்த்வோஷதீ: || 1 ||

த்யௌ: – வானில்; சாந்தா – அமைதி நிலவட்டும்; ப்ருதிவீ – பூமியில்; சாந்தா – அமைதி நிலவட்டும்; இதம் – இந்த; உரு அந்தரிக்ஷம் – பரந்த வான் வெளியில்; சாந்தம் – அமைதி நிலவட்டும்; உதன்வதீ: ஆப: – ஓடுகின்ற நதிகளில்; சாந்தா – அமைதி நிலவட்டும்; ஓஷதீ: – செடிகொடிகளில்; ந: சாந்தா ஸந்து – அமைதி நிலவட்டும்.

1. வானில் அமைதி நிலவட்டும், பூமியில் அமைதி நில வட்டும், பரந்த வான்வெளியில் அமைதி நிலவட்டும், ஓடுகின்ற நதிகளில் அமைதி நிலவட்டும், செடிகொடிகளில் அமைதி நிலவட்டும்!

சாந்தானி பூர்வ ரூபாணி

சாந்தம் நோ அஸ்து க்ருதாக்ருதம் |

சாந்தம் பூதம் ச பவ்யம் ச

ஸர்வமேவ சமஸ்து ந: ||

பூர்வ ரூபாணி – முற்பிறவி சம்ஸ்காரங்கள்; சாந்தானி – அமைதியாக இருக்கட்டும்; க்ருத அக்ருதம் – செய்தவையும் செய்யாதவையும்; ந: – நமக்கு; சாந்தம் அஸ்து – அமைதியைத் தரட்டும்; பூதம் ச – கடந்த கால வாழ்க்கையும்; பவ்யம் ச – எதிர்கால வாழ்க்கையும்; சாந்தம் – அமைதியாக இருக்கட்டும்; ஸர்வம் ஏவ – எல்லாமே; ந: – நமக்கு; சம் அஸ்து – அமைதியைத் தரட்டும்.

2. முற்பிறவி சம்ஸ்காரங்கள் அமைதியாக இருக்கட்டும். செய்தவையும் செய்யாதவையும் நமக்கு அமைதியைத் தரட்டும். கடந்த கால வாழ்க்கையும் எதிர்கால வாழ்க்கையும் அமைதியாக இருக்கட்டும். எல்லாமே நமக்கு அமைதியைத் தரட்டும்!

சிலவற்றைச் செய்வதால் நன்மை ஏற்படும், சிலவற்றைச் செய்யாமலிருப்பதால் நன்மை உண்டாகும். 'விஹிதஸ்ய அனனுஷ்ட்டானாத் நிந்திதஸ்ய சஸேவனாத் அநிக்ரஹாத் ச இந்த்ரியாணாம் ந: பதனம் ரிச்சதி— செய்ய வேண்டியவற்றைச் செய்யாமல் இருப்பதாலும், செய்யக் கூடாதவற்றைச் செய்வதாலும், புலன்களைக் கட்டுப்படுத்தாமல் இருப்பதாலும் மனிதனுக்கு அழிவு ஏற்படுகிறது' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. 'செய்தவையும் செய்யாதவையும் (க்ருத அக்ருதம்)' என்னும்போது செய்ய வேண்டியவற்றைச் செய்ததும்,

செய்யக் கூடாதவற்றைச் செய்யாமல் இருந்ததும் குறிப் பிடப்படுகின்றன.

இயம் யா ப்ரமேஷ்ட்டினீ வாக்தேவீ ப்ரஹ்மஸம்சிதா |
யயைவ ஸஸ்ருஜே கோரம் தயைவ சாந்திரஸ்து
நः || 3 ||

ப்ரஹ்ம ஸம்சிதா – *பிரம்மனால் மகிமை பெற்றவளும்;* யயா ஏவ – *யாராலேயே;* கோரம் – *பயங்கரமான விளைவுகள்;* ஸஸ்ருஜே – *ஏற்படுகின்றனவோ;* தயா ஏவ – *அந்த தேவியுமான;* இயம் யா பரமேஷ்ட்டினீ – *அந்த மேலான தெய்வமான;* வாக்தேவீ – *கலைமகள்;* நः – *நமக்கு;* சாந்திः அஸ்து – *அமைதியைத் தரட்டும்.*

3. பிரம்மனால் மகிமை பெற்றவளும், யாராலேயே பயங்கர மான விளைவுகள் ஏற்படுகின்றனவோ அந்த தேவியும், மேலான தெய்வமுமான கலைமகள் நமக்கு அமைதியைத் தரட்டும்.

கலைமகள் வாக்கின் தலைவி; வாக்தேவீ என்று இங்கே குறிப்பிடப்படுகிறாள். அவள் கோரமான விளைவுகளை ஏற்படுத்துவதாக (கோரம் ஸஸ்ருஜே) ஸூக்தம் கூறுகிறது. வாக்கைத் தவறாகப் பயன் படுத்துவதால், அனாவசியமாகப் பேசுவதால் பயங்கரம் விளைகிறது, அமைதி குலைகிறது. எனவே வார்த்தை களை அளந்து பேசுமாறு எச்சரிக்கிறது இந்த மந்திரம்.

மனத்தையும் புலன்களையும் தவறான வழிகளில் செலுத்தாமல் இருக்குமாறு கூறுகின்றன தொடரும் இரண்டு மந்திரங்கள்.

இதம் யத் ப்ரமேஷ்ட்டினம் மனோ வாம் ப்ரஹ்ம
ஸம்சிதம் |
யேனைவ ஸ்ஸ்ருஜே கோரம் தேனைவ
சாந்திரஸ்து ந: || 4 ||

பரமேஷ்ட்டினம் – மேலானதும்; ப்ரஹ்ம ஸம்சிதம் வாம் – பிரம்மனால் தூண்டப்பெற்றதும்; இதம் யத் – இந்த; மன: – மனம்; யேன ஏவ – எதனாலேயே; கோரம் – பயங்கரமான விளைவுகள்; ஸஸ்ருஜே – ஏற்படுகின்றனவோ; தேன ஏவ – அதனாலேயே; ந: – நமக்கு; சாந்தி: அஸ்து – அமைதி உண்டாகட்டும்.

4. மேலானதும், பிரம்மனால் தூண்டப்பெற்றதும், எதனால் பயங்கரமான விளைவுகள் ஏற்படுகின்றனவோ அதுவும் ஆகிய இந்த மனம் நமக்கு அமைதியைத் தரட்டும்.

இமானி யானி பஞ்சேந்த்ரியாணி மன: ஷஷ்ட்டானி
மே ஹ்ருதி ப்ரஹ்மணா ஸம்சிதானி |
யைரேவ ஸ்ஸ்ருஜே கோரம் தைரேவ சாந்திரஸ்து
ந: || 5 ||

ப்ரஹ்மணா – பிரம்மனால்; ஸம்சிதானி – தூண்டப்படுபவையும்; மே – எனது; ஹ்ருதி – இதயத்தில் உள்ளவையுமான; இமானி – இந்த; யானி பஞ்ச இந்த்ரியாணி – ஐந்து புலன்களும்; மனஷ்ஷ்ட்டானி – ஆறாவது புலனான; மன: – மனமுமாகிய; யை: ஏவ – எவற்றால்; கோரம் – பயங்கரமான விளைவுகள்; ஸஸ்ருஜே – ஏற்படுகின்றனவோ; தை: ஏவ – அவற்றாலேயே; ந: – நமக்கு; சாந்தி: அஸ்து – அமைதி உண்டாகட்டும்.

5. பிரம்மனால் தூண்டப்படுபவையும், நமது இதயத்தில் உள்ளவையுமான இந்த ஐந்து புலன்களும் ஆறாவது புலனான மனமுமாகிய எவற்றால் பயங்கரமான விளைவுகள் ஏற்படுகின்றனவோ அவற்றாலேயே நமக்கு அமைதி உண்டாகட்டும்.

யானி கானி சிச்சாந்தானி லோகே ஸப்தர்ஷயோ விது: |
ஸர்வாணி சம் பவந்து மே சம் மே அஸ்த்வபயம் மே அஸ்து || 6 ||

சாந்தானி – அமைதி பெறுவதற்கு; லோகே – உலகில்; யானி கானி சித் – என்னென்ன உண்டோ; ஸப்த ரிஷய: – ஏழு ரிஷிகள்; விது: – அறிந்துள்ளனர்; ஸர்வாணி – அவர்கள் அனைவரும்; மே – எனக்கு; சம் பவந்து – அமைதியைக் கொண்டுவரட்டும்; மே – எனக்கு; சம் அஸ்து – மங்கலத்தைத் தரட்டும்;

மே – *எனக்கு;* அபயம் அஸ்து – *பயமின்மையைத் தரட்டும்.*

6. அமைதி பெறுவதற்கு உலகில் என்னென்ன வழிகள் உண்டோ அவற்றை ஏழு ரிஷிகள் அறிந்துள்ளனர். அவர்கள் அனைவரும் எனக்கு அமைதியைக் கொண்டு வரட்டும், எனக்கு மங்கலத்தைத் தரட்டும், எனக்கு பயமின்மை யைத்தரட்டும்.

ப்ருதிவீ சாந்திரந்தரிக்ஷம் சாந்திர் த்யௌ: சாந்திராப: சாந்திரோஷதய: சாந்திர் வனஸ்பதய: சாந்திர் விச்வே மே தேவா: சாந்தி: ஸர்வே மே தேவா: சாந்தி: சாந்தி: சாந்தி: சாந்திபி: | தாபி: சாந்திபி: ஸர்வ சாந்திபி: சம்யாமோஹம் யதிஹ கோரம் யதிஹ க்ரூரம் யதிஹ பாபம் தச்சாந்தம் தச்சிவம் ஸர்வமேவ சமஸ்து ந: || 7 ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

ப்ருதிவீ – *பூமியில்;* அந்தரிக்ஷம் – *வான வெளியில்;* த்யௌ: – *வானில்;* ஆப: – *தண்ணீரில்;* ஓஷதய: – *மூலிகைகளில்;* வனஸ்பதய: – *செடி கொடிகளில்;* மே – *எனக்கு;* விச்வே தேவா: – *எல்லா*

தேவர்களும்; சாந்தி: – அமைதியைத் தரட்டும்; மே – எனக்கு; ஸர்வே தேவா: – ஒவ்வொரு தேவர்களும்; சாந்தி: – அமைதியைத் தரட்டும்; சாந்திபி: – அமைதி யால்; சாந்தி: – அமைதி பெறட்டும்; தாபி: – இந்த; ஸர்வம் சாந்திபி: – எல்லா வகையான அமைதியின் மூலம்; அஹம் – நான்; சமயாம – மங்கலம் பெறுவே னாக; இஹ யத் – இங்கே எவை; கோரம் – பயங்கர மாக உள்ளனவோ; இஹ யத் – இங்கே எவை; க்ரூரம் – கொடூரமாக உள்ளனவோ; இஹ யத் – இங்கே எவை; பாபம் – பாவமாக உள்ளனவோ; தத் – அவை; சாந்தம் – அமைதி பெறட்டும்; தத் – அவை; சிவம் – மங்கலம் பெறட்டும்; ஸர்வம் ஏவ – எல்லாமே; ந: – நமக்கு; சம் அஸ்து – மங்கலத்தை நல்கட்டும்.

7. பூமியில் அமைதி நிலவட்டும், வானவெளியில் அமைதி நிலவட்டும், வானில் அமைதி நிலவட்டும், தண்ணீரில் அமைதி நிலவட்டும், மூலிகைகளில் அமைதி நிலவட்டும், செடிகொடிகளில் அமைதி நிலவட்டும். எல்லா தேவர்களும் எனக்கு அமைதியைத் தரட்டும். எனக்கு ஒவ்வொரு தேவர்களும் அமைதியைத் தரட்டும், அமைதியால் எல்லா உயிர்களும் அமைதி பெறட்டும். இந்த எல்லா வகையான அமைதியின்மூலம் நான் மங்கலம் பெறுவேனாக. இங்கே எவை பயங்கரமாக உள்ளனவோ, கொடூரமாக உள்ளனவோ, பாவமாக உள்ளனவோ அவையெல்லாம் அமைதி பெறட்டும். அவை மங்கலம் பெறட்டும். எல்லாமே நமக்கு மங்கலத்தை நல்கட்டும்!



# १. मन्त्र पुष्पम्

तैत्तिरीय आरण्यकम्, 1.22

ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः । स्थिरैरङ्गैस्तुष्टुवाग्ंसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः । स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः । स्वस्ति नो बृहस्पतिर्दधातु ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

ॐ ॥ योऽपां पुष्पं वेद । पुष्पवान् प्रजावान् पशुमान् भवति । चन्द्रमा वा अपां पुष्पम् । पुष्पवान् प्रजावान् पशुमान् भवति । य एवं वेद ॥ १ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । अग्निर्वा अपामायतनम् । आयतनवान् भवति । योऽग्नेरायतनं वेद ॥

आयतनवान् भवति । आपो वा अग्नेरायतनम् । आयतनवान् भवति । य एवं वेद ॥ २ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । वायुर्वा अपामायतनम् । आयतनवान् भवति । यो वायोरायतनं वेद । आयतनवान् भवति ॥ आपो वै वायोरायतनम् । आयतनवान् भवति । य एवं वेद ॥ ३ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । असौ वै तपन्नपामायतनम् । आयतनवान् भवति । योऽमुष्य तपत आयतनं वेद । आयतनवान् भवति । आपो वा अमुष्य तपत आयतनम् ॥ आयतनवान् भवति । य एवं वेद ॥ ४ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । चन्द्रमा वा अपामायतनम् । आयतनवान् भवति । यश्चन्द्रमस आयतनं वेद । आयतनवान् भवति । आपो वै चन्द्रमस आयतनम् । आयतनवान् भवति ॥ य एवं वेद ॥ ४ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । नक्षत्राणि वा अपामायतनम् । आयतनवान् भवति । यो नक्षत्राणामायतनं वेद । आयतनवान् भवति । आपो वै नक्षत्राणामायतनम् । आयतनवान् भवति । य एवं वेद ॥ ६ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । पर्जन्यो वा अपामायतनम् । आयतनवान् भवति । यः पर्जन्यस्यायतनं वेद । आयतनवान् भवति । आपो वै पर्जन्यस्याऽऽयतनम् । आयतनवान् भवति । य एवं वेद ॥ ७ ॥

योऽपामायतनं वेद । आयतनवान् भवति । संवत्सरो वा अपामायतनम् । आयतनवान् भवति । यस्संवत्सरस्यायतनं वेद । आयतनवान् भवति । आपो वै संवत्सरस्यायतनम् । आयतनवान् भवति । य एवं वेद ॥ ८ ॥

योऽप्सु नावं प्रतिष्ठितां वेद । प्रत्येव तिष्ठति ॥ ९ ॥

ॐ राजाधिराजाय प्रसह्यसाहिने । नमो वयं वैश्रवणाय कुर्महे । स मे कामान्कामकामाय मह्यम् । कामेश्वरो वैश्रवणो ददातु । कुबेराय वैश्रवणाय । महाराजाय नमः ॥ १० ॥

ॐ भद्रं कर्णेभिः ...

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 1. மந்த்ர புஷ்பம்

*தைத்திரீய ஆரண்யகம், 1.22.*

பொதுவாக பூஜைகளிலும் மங்கல நிகழ்ச்சிகளிலும் ஓதப்படுகின்ற மந்திரங்கள் இவை.

ஓம் பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா: | பத்ரம் பச்யேமாக்ஷபிர் யஜத்ரா: | ஸ்திரைரங்கைஸ் துஷ்ட்டுவாக்ம்ஸஸ்தனூபி: | வ்யசேம தேவஹிதம் யதாயு: | ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்த ச்ரவா: | ஸ்வஸ்தி ந: பூஷா விச்வ வேதா: | ஸ்வஸ்தி

நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்ட்ட நேமி: | ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர் ததாது ||

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஓம் || யோऽபாம் புஷ்பம் வேத | புஷ்ப்வான் ப்ரஜாவான் பசுமான் ப்வதி | சந்த்ரமா வா அபாம் புஷ்பம் | புஷ்ப்வான் ப்ரஜாவான் பசுமான் ப்வதி | ய ஏவம் வேத || 1 ||

*ய: – யார்; அபாம் – தண்ணீரின்; புஷ்பம் – மலரை; வேத – அறிகிறானோ; புஷ்பவான் – மலர்களை உடையவன்; பசுமான் – மிருகங்களை உடையவன்; ப்ரஜாவான் – சந்ததிகளை உடையவன்; பவதி – ஆகிறான்; சந்த்ரமா வா – சந்திரனே; அபாம் – தண்ணீரின்; புஷ்பம் – மலர்; ய: ஏவம் – யார் இப்படி; வேத – அறிகிறானோ; ப்ரஜாவான் – சந்ததிகளை உடையவன்; பசுமான் – மிருகங்களை உடையவன்; பவதி – ஆகிறான்.*

1. யார் தண்ணீரின் மலரை அறிகிறானோ அவன் மலர்களை உடையவனாக, மிருகங்களை உடையவனாக, சந்ததிகளை உடையவனாக ஆகிறான். சந்திரனே தண்ணீரின் மலர். யார் இப்படி அறிகிறோனோ அவன் சந்ததிகளை உடையவனாக, மிருகங்களை உடையவனாக ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி | அக்னிர்வா அபாமாயதனம் | ஆயதனவான் பவதி | யோऽக்னேராயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஆபோ வா அக்னேராயதனம் | ஆயதனவான் பவதி | ய ஏவம் வேத || 2 ||

*யः – யார்; அபாம் – தண்ணீரின்; ஆயதனம் – ஆதாரத்தை; வேத – அறிகிறானோ; ஆயதனவான் – நிலைபெற்றவன்; பவதி – ஆகிறான்; அக்னிः வா – அக்கினியே; அபாம் – தண்ணீரின்; ஆயதனம் – ஆதாரம்; யः – யார்; அக்னேः – அக்கினியின்; ஆயதனம் – ஆதாரத்தை; வேத – அறிகிறானோ; ஆயதனவான் – நிலைபெற்றவன்; பவதி – ஆகிறான்; ஆபः வா – தண்ணீரே; அக்னேः – அக்கினியின்; ஆயதனம் – ஆதாரம்; யः – யார்; ஏவம் – இப்படி; வேத – அறிகிறானோ; ஆயதனவான் – நிலைபெற்றவன்; பவதி – ஆகிறான்.*

2. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். அக்கினியே தண்ணீரின் ஆதாரம். யார் அக்கினியின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். தண்ணீரே அக்கினியின் ஆதாரம். யார் இப்படி அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி | வாயுர்வா அபாமாயதனம் | ஆயதனவான் பவதி | யோ வாயோராயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஆபோ வை வாயோராயதனம் | ஆயதனவான் பவதி | ய ஏவம் வேத || 3 ||

வாயு: வா *– காற்றுதான்;* அபாம் *– தண்ணீரின்;*

3. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். காற்றே தண்ணீரின் ஆதாரம். யார் காற்றின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலை பெற்றவன் ஆகிறான். தண்ணீரே காற்றின் ஆதாரம். யார் இப்படி அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி | அஸௌ வை தபன்னபாமாயதனம் | ஆயதனவான் பவதி | யோऽமுஷ்ய தபத ஆயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஆபோ வா அமுஷ்ய தபத ஆயதனம் | ஆயதனவான் பவதி | ய ஏவம் வேத || 4 ||

அஸௌ வை தபன் *– தகிக்கின்ற சூரியன்;* அமுஷ்ய தபத: *– அந்த சூரியனின்.*

4. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். தகிக்கின்ற சூரியனே தண்ணீரின் ஆதாரம். யார் தகிக்கின்ற சூரியனின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். தண்ணீரே அந்த தகிக்கின்ற சூரியனின் ஆதாரம். யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி |

சந்த்ரமா வா அபாமாயதனம் | ஆயதனவான் பவதி |

யச்சந்த்ரமஸ ஆயதனம் வேத | ஆயதனவான் பவதி |

ஆபோ வை சந்த்ரமஸ ஆயதனம் | ஆயதனவான் பவதி |

ய ஏவம் வேத || 5 ||

சந்த்ரமா – *சந்திரன்.*

5. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். சந்திரனே தண்ணீரின் ஆதாரம். யார் சந்திரனின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். தண்ணீரே சந்திரனின் ஆதாரம். யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி |

நக்ஷத்ராணி வா அபாமாயதனம் | ஆயதனவான் பவதி |

யோ நக்ஷத்ராணாமாயதனம் வேத | ஆயதனவான்

பவதி | ஆபோ வை நக்ஷத்ராணாமாயதனம் | ஆயதனவான் பவதி | ய ஏவம் வேத || 6 ||

நக்ஷத்ராணி – நட்சத்திரங்கள்.

6. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். நட்சத்திரங்களே தண்ணீரின் ஆதாரம். யார் நட்சத்திரங்களின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். தண்ணீரே நட்சத்திரங்களின் ஆதாரம். யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி | பர்ஜன்யோ வா அபாமாயதனம் | ஆயதனவான் பவதி | ய: பர்ஜன்யஸ்யாயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஆபோ வை பர்ஜன்யஸ்யாऽऽயதனம் | ஆயதனவான் பவதி | ய ஏவம் வேத || 7 ||

பர்ஜன்ய: – மேகம்.

7. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். மேகமே தண்ணீரின் ஆதாரம். யார் மேகத்தின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலை பெற்றவன் ஆகிறான். தண்ணீரே மேகத்தின் ஆதாரம். யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலை பெற்றவன் ஆகிறான்.

யோऽபாமாயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஸம்வத்ஸரோ வா அபாமாயதனம் | ஆயதனவான் பவதி | யஸ்ஸம்வத்ஸரஸ்யாயதனம் வேத | ஆயதனவான் பவதி | ஆபோ வை ஸம்வத்ஸரஸ்யாயதனம் | ஆயதனவான் பவதி | ய ஏவம் வேத || 8 ||

ஸம்வத்ஸர: – *மழைக்காலம்.*

8. யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். மழைக்காலமே தண்ணீரின் ஆதாரம். யார் மழைக்காலத்தின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான். தண்ணீரே மழைக்காலத்திற்கு ஆதாரம். யார் தண்ணீரின் ஆதாரத்தை அறிகிறானோ அவன் தன்னில் நிலைபெற்றவன் ஆகிறான்.

யோப்ஸு நாவம் ப்ரதிஷ்ட்டிதாம் வேத | ப்ரத்யேவ திஷ்ட்டதி || 9 ||

ய: – *யார்;* அப்ஸு – *தண்ணீரில்;* ப்ரதிஷ்ட்டிதாம் – *நிலைபெற்றுள்ள;* நாவம் – *ஓடத்தை;* வேத – *அறிகிறானோ;* ப்ரதி ஏவ – *அதிலேயே;* திஷ்ட்டதி – *நிலைபெறுகிறான்.*

9. யார் தண்ணீரில் நிலைபெற்றுள்ள ஓடத்தை அறிகிறானோ அவன் அதிலேயே நிலைபெறுகிறான்.

ஓம் ராஜாதி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹினே | நமோ வயம் வைச்ரவணாய குர்மஹே | ஸ மே காமான் காமகாமாய மஹ்யம் | காமேச்வரோ வைச்ரவணோ தத்ாது | குபேராய வைச்ரவணாய | மஹா ராஜாய நம: || 10 ||

ஓம் பத்ரம்....

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||

*ராஜாதி ராஜாய – தலைவர்களுக்கெல்லாம் தலைவனுக்கு; ப்ரஸஹ்ய ஸாஹினே – பெரும் வெற்றியைத் தருபவனுக்கு; வைச்ரவணாய – குபேரனுக்கு; வயம் – நாங்கள்; நம: – வணக்கம்; குர்மஹே – செய்கிறோம்.; காமேச்வர: – ஆசைகளை நிறைவேற்றுபவனும்; வைச்ரவண: – செல்வத்தின் தலைவனுமான; ஸ: – அவன்; மே– எனது; காமான் – ஆசைகள்; காமகாமாய – நிறைவேறுவதற்கு; மஹ்யம் – எனக்கு; ததாது – தரட்டும்; வைச்ரவணாய குபேராய – செல்வத்தின் தலைவனான குபேரனுக்கு; மஹாராஜாய – மன்னர் மன்னனுக்கும்; நம: –வணக்கம்.*

10. தலைவர்களுக்கெல்லாம் தலைவனும், பெரும் வெற்றியைத்தருபவனுமான குபேரனை நாங்கள் வணங்குகிறோம். ஆசைகளை நிறைவேற்றுபவனும் செல்வத்தின் தலைவனுமான அவன் என் ஆசைகள் நிறைவேறுவதற்கு எனக்குத் தேவையான செல்வத்தைத் தரட்டும். செல்வத்தின் தலைவனான குபேரனுக்கு, மன்னர் மன்னனுக்கு வணக்கம்.

தண்ணீர், சந்திரன், அக்கினி, காற்று, சூரியன், நட்சத்திரங்கள், மேகம், மழைக்காலம் என்று இயற்கையின் சில அம்சங்கள் இங்கே எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இவை ஒன்றுக்கொன்று ஆதாரம், அதே வேளையில் தண்ணீர் அனைத்திற்கும் ஆதாரம்; இதனை அறிபவன் தன்னில் நிலைபெறுகிறான் என்று 1–8 வரையுள்ள மந்திரங்கள் கூறுகின்றன. 9-ஆம் மந்திரம் அந்தத் தண்ணீரில் ஓடம் ஒன்று இருப்பதாகக் கூறுகின்றது. 10-ஆம் மந்திரம் இறைவனைப் போற்றுகிறது.

பொதுவாக வேதங்களில் தண்ணீர், கடல் போன்றன வாழ்க்கைக்கு உருவகமாகச் சொல்லப்படுபவை. எனவே தண்ணீரின் ஆதாரம் சந்திரன், மேகம் என்றெல்லாம் சொல்லும்போது உலக வாழ்க்கைக்கு ஆதாரமாக இருப்பது சந்திரன் மேகம் போன்ற அங்கங்களை உடைய இயற்கை என்பது பொருள். எனவே இயற்கையைப் போற்ற வேண்டும். இயற்கையிலுள்ள மலர், தண்ணீர் போன்றவற்றைப் பூஜையில் பயன்படுத்துவதன் நோக்கம் இயற்கையைப் போற்றுதல் என்பதே.

ஆனால் இயற்கையைப் போற்றுவதுடன் நமது வழிபாடு நின்றுவிடக் கூடாது. இயற்கையைக்

கடந்து செல்ல வேண்டும். கடப்பதற்கு ஓர் 'ஓடம்' உள்ளது என்று 9-ஆம் மந்திரம் கூறுகிறது. அந்த ஓடம்தான் இறைவன். அந்த இறைவனை அறிய வேண்டும் என்று கூறி அவரது பெருமையைப் பேசுகிறது 10-ஆம் மந்திரம்.

எனவே, பூஜை போன்ற மங்கல நிகழ்ச்சிகளில் மந்த்ர புஷ்பத்தை ஓதுவதன் நோக்கம் இதுதான்: வெறும் புறபூஜையுடன் நின்றுவிடாமல் உள்ளே உறையும் இறைவனை நாட வேண்டும்.



# २. मार्जन मन्त्राः

ऋग्वेद,10.9

ॐ आपो हि ष्ठा मयोभुवस्ता न ऊर्जे दधातन।

महे रणाय चक्षसे ॥ १ ॥

यो वः शिवतमो रसस्तस्य भाजयतेह नः।

उशतीरिव मातरः ॥ २ ॥

तस्मा अरं गमाम वो यस्य क्षयाय जिन्वथ।

आपो जनयथा च नः ॥ ३ ॥

शं नो देवीरभीष्टय आपो भवंतु पीतये।

शं योरभि स्रवंतु नः ॥ ४ ॥

ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

## 2. மார்ஜன மந்திரங்கள்

*ரிக் வேதம், 10.9.*

நான்கு வேதங்களிலும் காணப்படுகின்ற மந்திரங்கள் இவை.

மார்ஜனம் என்றால் தூய்மைப்படுத்துதல். அதாவது, மனத் தூய்மைக்கான மந்திரங்கள் இவை. பொதுவாக சந்தியாவந்தனத்திலும் தெய்வங்களின் அபிஷேக வேளை யிலும் இவை சொல்லப்படுகின்றன.

தண்ணீர் உடம்பைத் தூய்மையாக்குகிறது. அது போல் மனத்தைத் தூய்மையாக்குமாறு தண்ணீரின் அதிபதியான தேவதைகளைப் பிரார்த்திக்கின்றன இந்த மந்திரங்கள்.

ஓம் ஆபோ ஹி ஷ்ட்டா மயோபுவஸ்தான ஊர்ஜே

ததாதன | மஹே ரணாய சக்ஷஸே || 1 ||

ஆப: – தண்ணீரின் தேவதைகளே; மயோ புவ: – உயர்ந்த சுகத்திற்கு; ஷ்ட்டா ஹி – காரணமாக இருக்கிறீர்கள்; தா: – அத்தகைய நீங்கள்; ந: – எங்களுக்கு; மஹே – மகிமை பொருந்தியதும்; ரணாய – மேலானது மான; சக்ஷஸே – அக நோக்கையும்; ஊர்ஜே – ஆற்றலை யும்; ததாதன – அளியுங்கள்.

1. தண்ணீரின் தேவதைகளே, உயர்ந்த சுகத்திற்கு நீங்கள் காரணமாக இருக்கிறீர்கள். அத்தகைய நீங்கள் எங்களுக்கு மகிமை பொருந்தியதும், மேலானதுமான அக நோக்கையும் ஆற்றலையும் அளியுங்கள்!

யோ வ: சிவதமோ ரஸஸ்தஸ்ய பாஜயதேஹ ந: |

உசதீரிவ மாதர: || 2 ||

வ: – உங்களிடம்; ய: – எந்த; சிவதம: – பரம மங்கல மான; ரஸ: – பேரின்ப நீர் ; தஸ்ய – அதற்கு; இஹ – இங்கேயே; ந: – எங்களை; உசதீ: – அன்பு சுரக்கின்ற; மாதர: இவ – தாய்மார்களைப்போல்; பாஜயத – உரியவர்கள் ஆக்குங்கள்.

2. உங்களிடம் எந்த பரம மங்கலமான பேரின்ப நீர் உள்ளதோ, அதற்கு இங்கேயே எங்களை, அன்பு சுரக்கின்ற தாய்மார்களைப் போல், உரியவர்கள் ஆக்குங்கள்!

தஸ்மா அரம் கமாம வோ யஸ்ய க்ஷயாய ஜின்வத ।

ஆபோ ஜனயதா ச ந: ॥ 3 ॥

யஸ்ய க்ஷயாய – இனிமையைத் தருவதற்காக; ஜின்வத – இன்ப வடிவாய் விளங்குகிறீர்களோ; தஸ்மை – அந்த இனிமைக்காக; வ: – உங்களை; அரம் – ஆர்வத் துடன்; கமாம – நாடுகிறோம்; ஆப: – தண்ணீரின் தேவதை களாகிய நீங்கள்; ந: – எங்களுக்கு; ஜனயதா – தருவீர்களாக.

3. எந்த இனிமையைத் தருவதற்காக நீங்கள் இன்ப வடிவாய் விளங்குகிறீர்களோ, அந்த இனிமைக்காக உங்களை ஆர்வத்துடன் நாடுகிறோம். தண்ணீரின் தேவதைகளாகிய நீங்கள் எங்களுக்கு வேறு ஐசுவரியங்களையும் தருவீர்களாக!

சம் நோ தேவீரபீஷ்ட்டய ஆபோ பவந்து பீதயே ।

சம் யோரபி ஸ்ரவந்து ந: ॥ 4 ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

தேவீ: – *தெய்வீகம் பொருந்தியவர்களான;* ஆப: – *தண்ணீரின் தேவதைகளே;* ந: – *எங்கள்;* அபீஷ்ட்டய – *எழுந்தருள்வீர்களாக;* ஆப: – *தண்ணீரின்* தேவதைகளே; பீதயே – குடிப்பதற்கு உகந்தது; பவந்து – *ஆகட்டும்:* ய: அபி – *அந்த தேவதைகள்;* ந: – *எங்களுக்கு;* சம் – *மங்கலத்தை;* ஸ்ரவந்து – *அருளட்டும்.*

4. தெய்வீகம் பொருந்தியவர்களான தண்ணீரின் தேவதைகளே, நீங்கள் எங்கள் பூஜையில் எழுந்தருள்வீர்களாக. தண்ணீரின் தேவதைகளே, தண்ணீர், நாங்கள் குடிப்பதற்கு உகந்தது ஆகட்டும். நீங்கள் எங்களுக்கு மங்கலத்தைத் தாருங்கள்!



சிறந்த செயலைச் செய்ய விரும்புகின்ற எங்களுக்கு காற்று இனிமையாக வீசட்டும்! நதிகள் இனிய நீருடன் ஓடட்டும்! செடிகொடிகள் வளம் பெற்று விளங்கட்டும்! இரவும் பகலும் இனிமையைத் தரட்டும்! பூமி இனிமையைத் தரட்டும்! எங்கள் தந்தையான வானம் இனிமையைப் பொழியட்டும்! செடி கொடிகளின் அதிபதியான சந்திரன் இனிமையாக இருக்கட்டும்! பசுக்கள் அதிக பாலைப் பொழியட்டும்!

– சாந்தி மந்திரம்

Veda Manthirangal (Tamil) Rs. 50.00

ISBN 81-7120-901-7